# ஆதிசங்கரர்
## விஜயம்



# ஆதிசங்கரர் விஜயம்

துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி

ஸ்ரீ ராம ஜயம்
ஆவணி மீ 18 உ




மயிலாப்பூர் : : சென்னை-4.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அளித்த

# ஸ்ரீ முகம்

ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாளின் சரித்ரத்தை பல நூல் களின் துணை கொண்டு எளிய தெளிவான நடையில் எழுதி அச்சிட்டு மலிவான விலையில் எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்த 'இன்ப நிலையத்'தாரின் பணியைக் கண்டு ஸந்தோஷிக்கிறோம்.

மேன்மேலும் இம்மாதிரி நல்ல சரித்ர புஸ்தகங்களை வெளியிட்டு அதன் மூலம் எல்லா ஜனங்களும் நன்மையடைய ஆசீர்வதிக்கிறோம்.

பத்ம பூஷணம், தர்ம ரக்ஷகமணி

**ஸ்ரீ. கே. பாலசுப்ரமணிய ஐயர்** பி.ஏ., பி எல்.,

**எம். எல். சி. அவர்களின்**




ஆதிசங்கரருடைய வாழ்க்கை வரலாற்றை வடமொழியில் பல புத்தகங்களில் சொல்லியிருக்கிறார்கள். அவை எல்லாவற்றிலும் பல வேற்றுமைகள் இருந்து வருகின்றன. அப் புத்தகங்கள் எல்லாம் ஆதிசங்கரருடைய காலத்திற்குப் பிறகு வந்தவை என்றுதான் நாம் நினைக்க வேண்டியதிருக்கிறது. பல உயர்ந்த நூல்களை சங்கர பகவத் பாதாள் இயற்றியிருந்தும், தான் இருந்த காலம், பிறந்த ஊர், வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்கள் இவைகளைப் பற்றி துரதிர்ஷ்டவசமாக ஒன்றுமே அவர்கள் சொல்லவில்லை. குறிப்பாகக் கூட நாம் தெரிந்து கொள்வதற்கு ஒன்றுமில்லை. ஆகவேதான் தற்காலத்தில் ஆராய்ச்சி செய்தவர்களிடத்தில் அவர் இருந்த காலத்தைப் பற்றியும், அவர் பாரத நாட்டிற்குச் செய்த பல உதவிகள் பற்றியும், அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்கள் பற்றியும் அபிப்ராய வேற்றுமைகள் காணப்படுகின்றன. இந்த நிலையில் மக்கள் எல்லோருக்கும் தெரியும்படியாக நம் தாய்ப் பாஷையாகிய தமிழில் விளக்கமாக அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதுவது மிகவும் சிரமம் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட சிரமமான வேலையை ஸ்ரீ எஸ். கே. ஸ்வாமி இந்தப் புத்தகத்தில்

நன்கு செய்திருக்கிறார் என்பதை நான் இந்தப் புத்தகத்தைப் படித்துப் பார்த்த பின்னர் தெரிவித்துக்கொள்கிறேன்.

சங்கர பகவத் பாதாளைப்பற்றி உள்ள வரலாற்றுக் கதைகள் எல்லாவற்றையும் பார்க்கும்போது பொதுவான சில சம்பவங்கள் உண்மையாக நடந்துதான் இருக்கவேண்டும் என்று தீர்மானிக்க முடியும். அதாவது அவர் காலடியில் பிறந்தது என்பது ஒன்று; குழந்தைப் பருவத்திலேயே தகப்பனார் இறந்துவிட்டது ஒன்று; சிறு வயதில் படிப்பை நன்றாகக் கற்றது ஒன்று; அவர் பிரம்மச்சாரியாக இருக்கும்போதே துறவியாக சன்னியாச ஆசிரமத்தைக் கைக்கொண்டார் என்பது ஒன்று; இவைகளுக்கெல்லாம் சான்று அவர் எழுதிய நூல்களிலேயே இருக்கிறது.

பாரத நாடு முழுவதும் அவர் அத்வைத தத்துவங்களைப் பரப்பி மக்களிடையே உள்ள வேற்றுமைகளை நீக்கி சனாதன தர்மத்தை நிலைநாட்டினார் என்பதும் உண்மையே. சிறு வயதிலேயே அவர் கடவுளுடன் கலந்தார் என்பதும் நெடு நாளாக நாம் நம்பக்கூடிய உண்மைதான். எல்லா சாஸ்திரங்களிலும் அவருடைய வன்மை, அவரது கடவுள் பக்தி, தர்மத்தில் பற்று, தத்துவ ஆராய்ச்சியில் அவருடைய ஒப்பற்ற திறமை இவையெல்லாம் அவரது நூல்களிலிருந்தே நாம் அறிந்துகொள்ளலாம். அவர் எழுபத்திரண்டு மதங்களைக் கண்டித்து ஒற்றுமையை நிலை நிறுத்தினார் என்பதும் தொன்று தொட்டு வரும்படியான வரலாற்றுச் செய்தி. அதுவும் அநேகமாக உண்மையாக இருக்கலாம் என்றுதான் நாம் நினைக்க வேண்டியதிருக்கிறது. இவை எல்லாவற்றையும் விளக்கி, சங்கர விஜயம் புத்தகங்களில் உள்ளவைகளையும் விடாமல் ஒருங்கே சேர்த்து அழகான முறையில் படிக்கிறவர்களுக்கு உணர்ச்சியும் ஊக்கமும் உண்டாக்கும்படியான நடையிலே, நல்ல தமிழிலே ஸ்ரீ ஸ்வாமி இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார் என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆதிசங்கரருடைய சில வரலாறுகளை சிலர் தள்ளிவிடு கிறார்கள். சில சம்பவங்களைப் பற்றி கருத்து வேற்றுமை களைத் தெரிவிக்கிறார்கள். வடமொழியிலுள்ள சங்கர விஜயம் என்ற புத்தகங்களிலிருந்து சிலவற்றை எடுத்துக் கொண்டு மற்றவைகளைத் தள்ளிவிடுகிறார்கள். இம்முறை களைப் பின்பற்றாமல் எல்லாப் புத்தகங்களிலுமுள்ள உண்மை களை ஒருங்கு சேர்த்து முரண்பாடில்லாமல் ஒழுங்காக நாம் படிக்கும் விதத்தில் ஸ்ரீ ஸ்வாமி நமக்குக் கொடுத்திருக்கிறார். அதற்கு நம்முடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்க வேண்டும்.

நம் தேசத்திலே வெகு நாட்களாக சங்கர பகவத் பாதா ளால் ஏற்படுத்தப்பட்ட மடங்களிலுள்ள சான்றுகளை வைத்து நாம் எண்ணுவது என்னவென்றால், கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிலே அவர் பிறந்திருக்க வேண்டுமென்பதே. இப்போது தற்கால ஆராய்ச்சியாளர்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஏனென்றால் புத்தரே கி. மு. 473-லேயே நிர்வாணத்தை அடைந்தார் என்று தீர்மானித் திருக்கிறார்கள். புத்தருக்குப் பிறகு சங்கரர் வந்திருக்கிறபடி யால் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் சங்கரர் அவதரித்திருக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இதனு லேயே ஸ்ரீ ஸ்வாமியின் அபிப்ராயத்தை நாம் தள்ளிவிடக் கூடாது. பாரத தேசத்தில் நடந்த எல்லா சம்பவங்களின் காலமும் இன்னதென்று நிச்சயமாகத் தீர்மானிக்கப்பட வில்லை. ஆகவே, இதைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டா மென்று நினைக்கிறேன். பொதுவாக ஆதிசங்கர பகவத் பாதாள் தேசத்திற்கு, உலகத்திற்குச் செய்த நன்மையை, தூய வாழ்க்கையை, துறவித் தன்மையை, அவருக்குத் தன் தாயாரிடமிருந்த அளவுகடந்த பக்தியை, கடவுளுடைய அநேக சொருபங்களில் அவருக்கு இருந்த பேரன்பை ஸ்ரீ. ஸ்வாமி நன்கு சித்தரித்திருக்கிறார். அதுதான் நமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. பாக்கி விஷயங்களிலுள்ள வேற்று மைகளை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

192 பக்கங்களுள்ள இந்தப் புத்தகத்தை ஊக்கமாகப் படித்தால், ஒருமணி நேரத்தில் படித்துவிடலாம். அதிலிருந்து தெரிந்துகொண்ட விஷயங்கள் படிக்கிறவர்களுக்கு நன்மை பயக்குமென்பது திண்ணம். மயிலாப்பூரிலுள்ள இன்ப நிலையத்தார் ஆதிசங்கர விஜயம் என்ற சிறந்த இந்தப் புத்தகத்தை அச்சிட்டு மலிவு விலையில் வெளியிட்டிருக்கிறார்கள். மக்கள் எல்லோரும் வாங்கிப் படித்துப் பயனடையும்படி கேட்டுக் கொள்ளுகின்றேன்.



## வணக்கமும் நன்றியும்

இந் நூலுக்கு ஸ்ரீமுகம் தந்தருளிய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களுக்கு எங்கள் வணக்கமும்,

இந்நூலுக்கு சிறந்ததொரு ஆராய்ச்சி நிறைந்த முன்னுரை தந்த பத்மபூஷணம் தர்மரக்ஷகமணி ஸ்ரீ கே. பாலசுப்ரமணிய ஐயர் அவர்களுக்கு எங்கள் நன்றியும் உரியதாகும்.

— இன்ப நிலையத்தார்

# பதிப்புரை

உலகின் கண்ணுள்ள தலைசிறந்த மதங்களிலே மிகவும் தொன்மையுடையது ஹிந்து மதம் ஆகும். அது, பல கிளை களை உடைய மாபெரும் ஆலமரம் போன்று, உன்னத தத்துவ சிந்தனைகளையும், உயர்ந்த கொள்கைகளையும், நனி சிறந்த கோட்பாடுகளையும் உயிர்ப்பிடிப்பான விழுதுகளாகக் கொண்டு, உயர்ந்து பரந்து வளர்ந்த செழுமையுடையது.

அத்தகைய ஹிந்துமதத்தை எத்தனையோ ரிஷிகளும் தீர்க்க தரிசிகளும், நாயன்மார்களும் ஆழ்வாராதிகளும் போற்றிப் பேணி வளர்த்தனர். அவர்கள் கடவுளைப் பற்றிய தமது சிந்தனைகளை மனித சமுதாயத்தின் முன்பு வைத்தனர். ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள உறவை ஒவ்வொரு வரும் தமக்குத் தாமே சுதந்திரமாகச் சிந்தித்து முடிவு செய்ய வழியமைத்துத் தந்துள்ளனர். அங்ஙனம் வழியமைத்துத் தந்தவர்களில் ஆதிசங்கரரும் ஒருவர் ஆவர்.

அங்ஙனம் நமக்கு வழியமைத்துத் தந்த ஆதி சங்கரரின் தோற்றத்தையும் அவரது வாழ்வில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சி களையும் அவை நிகழ்ந்த வரலாற்றுக் காலக் குறிப்புக்களையும், திரு. துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி அவர்கள் "ஆதிசங்கரர் விஜயம்" என்ற பெயரில் தெளிவுற எழுதியுள்ளார்கள். அன்னாருக்கு எங்கள் நன்றி. இந் நூலை வெளியிடுவதில் நாங்கள் பெருமையும் மகிழ்ச்சியும் அடைகின்றோம்.

இந்நூலில், ஏதேனும் குற்றம் குறைபாடுகள் இருக்கு மானால், வாசக நண்பர்கள் பொறுத்துக் கொள்வதுடன், அவற்றை எங்களுக்குத் தெரிவித்தால் மறுபதிப்பில் திருத்திக் கொள்ள ஏதுவாக இருக்கும் என்பதையும் அன்புடன் தெரி வித்துக் கொள்ளுகின்றோம்.

**சோம. சுவாமிநாதன்**

உரிமையாளர் : **இன்ப நிலையம்**

# என்னுரை

ஆதிசங்கரர், நமது நாட்டுக்கோ அல்லது நமது மதத்துக்கோ மட்டுமே உரியவரல்லர். அவர் உலகத்துக்கே உரியவர். மகாமேதை. அதீத மதி நுட்பம் வாய்ந்த அருளாளர். தர்க்கவாதத்தில் ஜெயசீலர். கலைஞானங்களிலே கைதேர்ந்த அருங்கலை விநோதர். அட்டமா சித்தர் : வேதங்கள், வேதாங்கங்கள், இதிகாச புராணங்கள் ஆகிய யாவற்றையும் கரை கண்ட பேரறிஞர் : தவஞ் செய்து மெய்யுணர்வு பெற்ற ஆன்மஞானி : கலைச்சுவையும் பொருட்செறிவும் அழகு மிகு சொல்லழகும் பக்தியும் ததும்பும் அருட்கவிதைகள் பலவற்றை இயற்றிய மாக் கவிஞர். அத்வைத சித்தாந்தத்தை நிலை நாட்டிய வேதாந்த கேசரி. ஹிந்து சமயத்தினுள்ளே புகுந்த மாசுக்களை நீக்கிய சிறந்ததொரு சீர்திருத்தக்கா்ரர். தன்னலம் நீக்கிப் பொதுநலம் கருதிய மாபெருந்தியாகி. இத்தகைய அண்ணலை, இறைவனின் திருவவதாரமாகவே பக்தர்கள் கருதுகின்றனர்.

உலகத்திலேயே ஆன்மநேய ஒருமைப் பாட்டை ஞானரீதியாக அறிவுறுத்திய ஆதிசங்கரரின் கருத்துக்கள் என் மனதைப் பெரிதும் கவர்ந்தன. அவரது அழகிய திருவுருவமும், கருணை பொழியும் கண்களும் களங்கமற்ற திருவருட் பார்வையும் என்னை ஈர்த்தன. ஆகவே ஆதிசங்கரரின் வரலாற்றை என் மனதுக்கும் அறிவுக்கும் திருப்தியளிக்கும் வகையில் எழுதினேன். தெய்வீக நூல் வரிசையில் எனது உரை நடை நூலாகிய ஸ்ரீகந்த புராணத்தை மலிவுப் பதிப்பாக வெளியிட்ட இன்ப நிலையத்தாரே இதனையும் அழகாகச் செவ்வனே சிறப்பாக, மலிவுப் பதிப்பாக வெளியிட்டுள்ளனர். அடுத்து வரும் ஆதிசங்கரர் உபதேசங்கள், பிரம்ம சூத்திர பாஷ்யம் போன்ற நூல்களை, வெளியிடுவதற்கு முன் வந்த எனது அன்புக்குரிய நண்பரும் இன்ப நிலைய அதிபருமான திரு. சோம. சுவாமிநாதன் அவர்களுக்கு என் நன்றியுரியது. இதனை வாசிப்போருக்கு சகலவித சௌபாக்கியங்களையும் இறைவன் அருள்வானாக :

சென்னை—24<br>29—4—66

இங்ஙனம்<br>**துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி.**

## ஆதிசங்கரர்

# வரலாற்றுக் காலக் குறிப்புக்கள்

ஆதிசங்கரரின் தோற்றமும், அவரது வாழ்வில் நிகழ்த்திய முக்கிய செயல்களும், அவை நிகழ்ந்த வரலாற்றுக் காலக் குறிப்புக்களும், நேபாள நாட்டு வரலாற்றுக்கால வரிசை நூல் ஒன்றில் பின்வருமாறு காணப்படுகின்றன.

| | | கலி. | கி. மு. |
|---|---|---|---|
| 1. | சங்கரர் தோற்றம் (நந்தன ஆண்டு) | 2593 | 509 |
| 2. | சங்கரர் உபநயனம். | 2598 | 504 |
| 3. | தந்தையை இழத்தல். | 2601 | 501 |
| 4. | வேத வேதாங்கங்களைக் கற்றுத் தெளிதல். | 2601 | 501 |
| 5. | தாயிடம் துறவுபூண அனுமதி பெறல். (பிலவ ஸ்ரீ கார்த்திகை சுக்கில ஏகாதசி தினம்) | 2603 | 499 |
| 6. | கோவிந்த பகவத் பாதரிடம் தத்துவப் பயிற்சி பெற்று முறைப்படி துறவியானது. | 2603-260 | 499-497 |
| 7. | இமயத்திலுள்ள பதரிகாசிரமத்தில் 120 வயது முதியவரான கௌடபாதரைச் சந்தித்து, நான்கு ஆண்டுகள் தத்துவ விளக்கம் பெறுதல் | 2605-2609 | 497-493 |

| | கலி. | கி. மு. |
|---|---|---|
| 8. கௌடபாதரின் ஆணையை ஏற்று பிரஸ்தானத்திரியம் உள்ளிட்ட பதினாறு உபநிஷதங்களுக்குப் பாஷ்யமும் கௌடபாதரின் காரிகைக்கு விளக்கவுரையும் எழுதி முடித்தது. | 2605-2609 | 497-493 |
| 9. ஆதிசங்கருடன் காலடியிலிருந்தே புறப்பட்ட விஷ்ணு சர்மா என்பவர் சந்நியாசம் பெற்று சித்சுகாசாரியார் என்று பெயர் பெறுதல்(இவர்தான் ஆதிசங்கரரின் முதல் வரலாற்று நூலை பிரஹத் சங்கர விஜயம் என்ற பெயரில் இயற்றியவர்) | 2505-2609 | 497-493 |
| 10. சங்கரரின் அன்னை மரணமடைதல். (பிலவங்க வருடம்) | 2608 | 493 |
| 11. சனந்தனர் சந்நியாசம் பெறுதல். (துறவுப் பெயர் பத்மபாதர்) | 2608 | 493 |
| 12. சங்கரர், பிரயாகையில் அத்வைதத்தைப் பரப்புதல் (மகபகுள அமாவாசை) | 2609 | 493 |
| 13. ஆதிசங்கரர் ஒரு குஷ்டரோகியைக் குணப்படுத்தித் தமது சீடராக்கிக் கொள்ளுதல். அவர் பெயர் உதங்கர். மூன்றாவது சீடர் (பிரயாகை) | 2609 | 493 |
| 14. நான்காவது சீடர் ஊமை...அவர் பெயர் பிரத்வீதரர். பிரபாகரத்வர் என்பவரின் மகன். சங்கரிடம் துறவு பெற்ற பிறகு இவர் பெயர் ஹஸ்தா மலகர். | 2609 | 493 |

| | கலி. | கி. மு. |
|---|---|---|
| 15. ஹஸ்தாமலகரின் தந்தை சந்நியாசம் ஏற்றல். | 2609 | 493 |
| 16. சங்கரர் தமது 16ஆவது வயதில் துஷாக்கினிப் பிரவேசம் செய்த குமாரில பட்டரைச் சந்தித்தார். அவர் சங்கரரைவிட 46 வயது முதியவர். பிரயாகையில் குத்தபுரம் என்ற இடத்தில் முதன்முறையாகவும், இறுதியாகவும் சந்தித்தார். (கீலக வருஷம்) | 2609 | 493 |
| 17. மண்டனமிஸ்ரர் என்பவர் மாஹிஷ்மதி நகரத்தில் அரசபோகத்தில்வாழ்ந்த அந்தணத் தலைவர். அவர் தென்னாட்டைச் சேர்ந்த கண்வப் பிராமணர். அவர் கர்ம காண்ட தத்துவத்தில் பிரபலஸ்தராக விளங்கிய கர்மவாதியாவார். இவர் குமாரில பட்டரின் மாணவர். இவருடன் சங்கரர் வாதுசெய்து வெற்றி பெற்றார். அதன் விளைவாக மண்டன மிஸ்ரர் துறவு பூண்டு, சங்கரரின் சீடரானார். அவரது சந்நியாசப் பெயர் சுரேசுவராசாரியார். | 2611 | 491 |
| 18. ஆதிசங்கரர் துவாரகா மடத்தை ஸ்தாபித்தது. (மக, சுக்ல சப்தமி) ஹஸ்தாமலகர் பீடாதிபதி. | 2611 | 491 |
| 19. சங்கரர் நேபாளம் சென்று பௌத்தரை ஜெயித்தல். (பார்க்க Indian Antiquatry vol xiii Page 417) | 2614 | 488-487 |

| | கலி. | கி. மு. |
|---|---|---|
| 20. இமயமலையில் ஜோதிர் மடத்தை ஸ்தாபித்தல். (ராக்ஷ ஆண்டு புஷ்ய சுத்த பூர்ணிமை) தோடகாசாரியர் முதல் பீடாதிபதியானது. | *2616* | 486 |
| 21. சங்கரர், புரியில் கோவர்த்தன மடத்தை ஸ்தாபித்தல். (வைசாக சுக்ல நவமி......நள வருஷம், பத்மபாதரை ஆசாரியராக நியமித்தல். | 2617 | 485 |
| 22. சங்கரர், சிருங்ககிரி மடத்தைப் பிங்கள ஆண்டு புஷ்ய பூர்ணிமையில் ஸ்தாபித்தார். சுரேஸ்வரர் முதல் பீடாதிபதியாக நியமனம் பெற்ருர். | 2618 | 484 |
| 23. ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தை சித்தார்த்தி யாண்டு வைசாக சுக்ல பூர்ணிமையில் ஸ்தாபித்து, சர்வக்ஞாத்மன் பீடாதிபதியாதல். | 2620 | 482 |
| 24. ஆதிசங்கரரின் நிர்யாணம் (ரக்தாக்ஷி ஆண்டு) | 2625 | 477 |

# காலத்தை வென்ற ஆதிசங்கரர் !

உலகத்திலுள்ள தலையாய மதங்களிலேயே மிகவும் தொன்மையுடையது ஹிந்து மதம். அது பல கிளைகளையுடைய மாபெரும் ஆலமரத்தைப் போன்று, உன்னத தத்துவ சிந்தனைகளையும் உயர்ந்த கொள்கைக் கோட்பாடுகளையும் உயிர்ப்பிடிப்பான விழுதுகளாகக் கொண்டு, உயர்ந்து பரந்துவளர்ந்த செழுமையையுடையது. உலகத்திலுள்ள ஏனைய மதங்களான பௌத்த மதம், சமண மதம், இஸ்லாமிய மதம், கிறிஸ்துவ மதம், கன்பூஷியஸின் சீன மதம், ஜப்பானியரின் ஷிண்டோ மதம், ஜாரதுஷ்ட்ரரின் பாரசீக மதம் முதலிய மதங்கள் யாவுமே, ஹிந்து மதத்திற்குப் பின்னுல் தோன்றியதால், அவை காலத்தால் பிற்பட்டவையாகும். அந்த மதங்கள் ஒவ்வொன்றும் குறிப்பிட்டதொரு தீர்க்க தரிசியின் கொள்கையை அனுசரித்தே வளர்ந்துள்ளன. அவை, தனி மனிதனின் சுதந்திரச் சிந்தனைக்கு இடந்தராமல், ஒருவர் கூறியவற்றையே பிடிவாதமாகப் பின்பற்றச் செய்யும் சீடர்களையும், அறிஞர்களையும், அவர்களையே பின்பற்றும் பாமரர்களையுங் கொண்டு வளர்ந்துவிட்டன. அரசர்களும் ஆட்சிகளுங்கூட மக்களைத் தமக்குச் சாதகமாக்க மதத்தைப் பயன்படுத்தி, மதத்தை வளர்த்தனர். அதனுல்தான் இன்றைய அதிக மக்கள் தொகை கொண்ட மதங்கள் வளர்ந்தன. ஆனுல் ஹிந்து மதமோ, எத்தனையோ ரிஷிகளாலும், தீர்க்க தரிசிகளாலும், நாயன்மார்களாலும், ஆழ்வாராதிகளாலும் செழிப்பாக வளர்க்கப்பட்டுள்ளது. அவர்கள் கடவுளைப் பற்றிய தமது சிந்தனைகளை மனித சமுதாயத்தின் முன்பு வைத்தனர். ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள உறவை ஒவ்வொருவரும் தமக்குத் தாமே சுதந்தரமாகச் சிந்தித்து, முடிவு செய்ய வழியமைத்துத் தந்துள்ளனர். ஆதிசங்கரர், அவர்களில் ஒருவர். ஆயினும் அவர் பிறந்து வாழ்ந்து வந்த

காலத்தை அறிவதே ஒரு பெரிய ஆராய்ச்சிக்கு உரிய தாக உள்ளது.

ஆதிசங்கரர் எங்கு எப்பொழுது பிறந்தார்? எங்கு மறைந்தார்? என்ற கேள்விகளுக்குப் பதிலாக, சரி யான காலத்தைக் கணக்கிடுவதில் பல குழப்பமான சூழ்நிலைகள் நிலவி வருகின்றன. இமயத்திலுள்ள கேதாரத்திலிருந்து காஞ்சிபுரம் வரையிலும் அவரது கொள்கையைப் பரப்புவதற்காக நிறுவப்பட்ட மடங் களில் குருபரம்பரையாக வந்துள்ளவர்கள் ஒவ்வொரு வருமே சங்கரராக வழங்கப்படுவதால், ஆதிசங்கரரின் காலத்தை அறுதியிட்டுக் கூறுவது மிகவும் கடினமாக வுள்ளது.

நவீன வரலாற்று நூல்கள் எதுவுமே ஆதிசங்கர ரது காலத்தை நிச்சயப்படுத்தவில்லை. கி. பி. ஒன் பதாவது நூற்றாண்டிலிருந்து பதினாறுவது நூற் றாண்டு வரை ஒவ்வொரு நூலாசிரியரும் ஏதோ சில ஆண்டுகளை அவர் வாழ்ந்திருந்த காலமாக வற்புறுத்து கின்றனர். ஆதிசங்கரர் காலாதீதமானவர் என்று சொல்வதற்குமில்லை. ஏனென்றால் இறைவனே மனி தப் பிறவி எடுத்ததை நாம் ஒப்புக்கொள்வதானாலும் அவரது காலத்தைக் கணக்கிடுவது நமது வரலாற்றுத் துறைக்கு மிகவும் அவசியமே யாகும்.

பாரதநாட்டின் சரித்திரத்தில், காலத்தைக் கணக் கிடப்படும் கருவியாக, நமது கலாச்சாரத்திற்கும் பண் பாட்டுக்கும் ஒத்துவராத கிறிஸ்தவ சகாப்தமானது வரலாற்றாசிரியர்கள் யாவராலுமே பின்பற்றப்படு கிறது. தொன்மையானதொரு மதத்தைப் பற்றியும் அதன் மதிப்புக்குரிய மதத் தலைவரின் காலத்தைப் பற்றியும் கணிக்கும்பொழுது, தொன்றுதொட்டு, பாரத நாட்டினர் பயன்படுத்தி வரும் காலக் கணித முறை யைப் பின்பற்றுவதுதான் சிறந்த முறையாகும்.

வரலாற்று ஆசிரியர்களில் பெரும்பாலோர் இலக் கியக் குறிப்புக்களையும், கல்வெட்டுக் குறிப்புக்களையும் செப்புப் பட்டயங்களையும் துணையாகக் கொண்டே,

சரித்திர மகாபுருஷர்களின் காலத்தைக் குறிப்பிடுவது வழக்கம். அத்தகைய வரலாற்று ஆசிரியர்கள் ஆதி சங்கரரின் காலத்தை நிர்ணயிக்க எடுத்துக் கொண்ட ஆதாரங்களை நாமும் சிறிது கவனிப்போமாக.

(1) கம்போடிய நாட்டுக் கல்வெட்டு ஒன்றில் சிவ சோமன் என்ற ஒருவன் தன்னைப் பகவான் சங்கரரின் மாணவனாக அழைத்துக் கொள்வதாகக் குறிப்பிடுகின்றனர். இந்தச் சிவசோமன் என்பவன் இந்திரவர்மனின் வம்சத்தில் வந்தவனாகவும் கி. பி. 878-887 இல் வாழ்ந்ததாகவும் கருதுகின்றனர். அவன், ஜயவர்மன் என்பவனின் தாய்மாமனுக்குப் பேரன். ஜயவர்மனின் காலம் கி. பி. 802-809. எனவே, இந்திரவர்மனின் வழித்தோன்றலான சிவசோமன் தன்னைப் பகவான் சங்கரரின் சீடனாக அழைத்துக் கொள்வதால், பகவான் சங்கரரின் காலத்தை, தெய்லி, பதக் என்ற வரலாற்று ஆசிரியர்கள், அதைக் கொண்டு நிச்சயித்துள்ளனர். அதாவது பகவான் சங்கரர் கி.பி. 788 ல் பிறந்து கி.பி. 822 ல் மறைந்ததாகக் கருதுகின்றனர்.

(2) ஆதிசங்கரர் இயற்றியதாகக் கருதப்படும் சௌந்தரியலஹரி என்ற நூலில் 75ஆவது பாடலில் தேவார மியற்றிய திருஞான சம்பந்தரைப் பற்றிக் கூறியதாகக் கருதப்படும், "திராவிட சிசு" என்ற சொற்கள் காணப்படுவதாகவும், திருஞானசம்பந்தர் கி.பி. 7ஆவது நூற்ருண்டில் வாழ்ந்ததாகக் கருதப்படுவதால், அவர் புகழ் பரவுவதற்கு ஒரு நூற்ருண்டாவது ஆகியிருக்கு மாகையால், சங்கரர் கி. பி. 8ஆவது நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று அவர்கள் கருதுகின்றனர்.

(3) சங்கரர் பற்றிய வரலாறுகளில், ஆதிசங்கரர் குமாரில பட்டர் என்ற பூர்வ மீமாம்சை ஆசிரியரைச் சந்தித்ததான குறிப்புகள் காணப்படுகின்றன. அந்தக் குமாரில பட்டர் கி.பி. 7ஆவது நூற்ருண்டிற்கு முன்பு வாழ்ந்திருக்க முடியாதாகையால், அவரைவிட இளைஞரான ஆதிசங்கரர் 8ஆவது நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று கருதுகின்றனர்.

(4) ஆதிசங்கரரின் மாணவரான பத்மபாதரின் பஞ்சபாடிகா என்ற நூலில், பௌத்தர்களின் மஹாயானத்தைப் பற்றிக் கூறப்படுகிறது. இந்த நிலை பௌத்த மதத் தத்துவ வளர்ச்சியின் பிற்காலமாகும்.

(5) சூத்ர பாஷ்யம் என்ற நூலில் பாசுபத மதக் கோட்பாடுகளுக்கு எதிரான கருத்துக்கள் காணப்படுவதால், புராணங்கள் 4 ஆவது நூற்றுண்டைச் சேர்ந்தவையாகக் கருதப்படுகின்றன.

(6) மீண்டும் அதே சூத்ர பாஷ்யத்தில், சங்கராஷிதா என்ற நூலிலுள்ள தத்துவ சங்கிரஹத்திற்கு கமலாசீலரின் உரையின் குறிப்புகள் காணப்படுகின்றன.

(7) சங்கரர் ஆசங்கன், தீனகன், நாகார்ச்சுனன், அசுவகோஷன் என்பவர்களின் கொள்கைகளை மதித்துள்ளார். அவர்கள் கி. பி. 3ஆவது நூற்றுண்டுக்கு முற்பட்டவர்களல்லர்.

(8) கி. பி. 600 லிருந்து கி. பி. 650 வரை வாழ்ந்த பர்த்ருஹரி என்பவருக்குப் பிறகுதான் ஆதிசங்கரர் பிறந்திருக்கவேண்டும். பர்த்ருஹரியின் காலத்தைக் குறிப்பிட்டவர் ஐடிசிங்கு என்ற சீனராவர்.

(9) சிருங்ககிரி மடத்தில் சங்கரரின் பிறப்பு கி. பி. 788 என்றும், மறைவு 820 என்றும் நிர்ணயிப்பதான குறிப்புகள் உள்ளனவாம்.

எனவே, மேலே குறிப்பிட்ட ஆதாரங்கள் எல்லாம் ஆதிசங்கரர் கி பி. 788 லிருந்து 820 க்கு உட்பட்ட காலத்தில் வாழ்ந்ததாக நிரூபிக்க முற்படுகின்றன.

**மேற்கூறிய வரலாற்று ஆதாரங்கள் யாவுமே பிழையுடையன. அவை எப்படித் தவறானவை என்பதை முறையே கவனிப்போமாக.**

(1) சிவசோமன் என்பவன் பகவான் சங்கரரின் மாணவன் என்றால், அந்தப் பகவான் சங்கரர் என்பவர் ஆதிசங்கரர்தானா? என்பது கேள்விக்கு உரியது. மேலும், ஆதிசங்கரரின் மாணவர்களாகப் புகழ்பெற்றவர்களில் யாருமே சிவசோமன் என்ற பெயரில் இருந்ததாகத் தெரியவில்லை. எனவே, இந்த ஆதாரம் தவறானது.

(2) சௌந்தரியலஹரி என்ற நூலில் உள்ள குறிப்பிட்ட பாடலில் திராவிட சிசு, என்ற பெயர், திருஞானசம்பந்தரைத்தான் குறிக்கும் என்றால், சௌந்தரியலஹரி என்ற நூலை ஆதிசங்கரர்தான் இயற்றியவரா என்பதும் கேள்விக்குரியதாகிறது. அந்த நூலின் முழுமையையும் அவர் இயற்றாவிட்டாலும் அதன் சில பகுதிகளையாவது சங்கரர் மரபில் வந்தவர்களில் வேறு யாரோ ஒருவர்தான் இயற்றியிருக்க வேண்டும் என்பதற்குச் சாட்சியமான ஆதாரங்கள் உள்ளன. அதில் ஞானசம்பந்தரைக் குறிக்கும் குறிப்புகள் மட்டுமேயில்லை. அவரால் இயற்றப்பட்டதாகச் சொல்லப்படும் சிவ புஜங்க ஸ்தோத்திரத்தில் சுந்தரமூர்த்தி நாயனாரையும், சிறுத்தொண்ட நாயனாரையும் குறிக்கும் வரிகள் காணப்படுகின்றன. சிவானந்தலஹரியில் 63ஆவது ஸ்லோகத்தில் கண்ணப்ப நாயனாரைக் குறிக்கும் வரி காணப்படுகிறது. சுந்தரமூர்த்தி நாயனாரும் சிறுத்தொண்டரும் முறையே கி. பி. 7ஆவது, 8ஆவது நூற்றாண்டுகளைச் சேர்ந்தவர்கள்.

ஆனால், சண்டேசர், கண்ணப்ப நாயனார் முதலியோர் வெறும் புராணக் கற்பனைப் பெயர்கள். இவர்களைப் பற்றிய கதைகள் பெரிய புராணத்தில் உள்ளன. அவற்றைக் கொண்டு கி. பி. பன்னிரண்டாவது நூற்றாண்டைச் சேர்ந்த சேக்கிழாரின் காலத்தில் ஆதி சங்கரர் இருந்ததாகக் கூற முடியுமா? எனவே, ஆதி சங்கரர்தான் சௌந்தரிய லஹரியை இயற்றியவராகக் கொண்டோமானால் சங்கரர், 12ஆவது நூற்றாண்டிற்கு

முற்பட்டவர் அல்லர் என்றும் கருதவேண்டி வரும். சௌந்தரிய லஹரி, சிவபுஜங்க ஸ்தோத்திரம், சிவா னந்தலஹரி முதலியவைகளைக் கொண்டு ஆதிசங்கர ரின் காலத்தை நிச்சயிப்பது சரியாகாது; தவறுகும்.

(3) ஆதிசங்கரர் குமாரில பட்டரின் காலத்தில் இருந்தவர் என்பது உண்மைதான். ஆனால், அந்தக் குமாரில பட்டர் எட்டாவது நூற்றுண்டைச் சேர்ந்த வர்தான என்பதே சர்ச்சைக்குரிய விஷயம். ஏனென் ருல், குமாரில பட்டரின் காலமே வேறு என்பதைப் பின்வரும் அத்தியாயங்களில் நிரூபிப்போம்.

(4) மஹாயானம் என்பது பௌத்த மதக் கோட் பாடுகளில் ஒன்றேயாகும். அதைக் கொண்டு ஆதி சங்கரரின் காலத்தை நிச்சயிக்க இயலாது.

(5) புராணங்கள் கி. மு. நான்காவது நூற்றுண் டைச் சேர்ந்தவைதான் என்று நிச்சயிப்பதும் தவறு.

(6) ஒரு மேற்கோளைச் சூத்திர பாஷ்யத்திலும் கமலா சீலர் உபயோகித்திருக்கக் கூடும்.

(7) பௌத்த மதஸ்தர்களின் சூன்ய வாதம், சுதந் திரிகம், விஞ்ஞான வாதம் முதலியவற்றைச் சங்கரர் மறுத்தவர் என்பது உண்மைதான். ஆனால், ஆசங் கர், தீனகர், நாகார்ஜுனர் ஆகியவர்களைச் சங்கரர் சந்தித்ததற்கான ஆதாரங்களே இல்லை. அவர்கள் காலத்துக்கு முன்பே பௌத்தம் பரவியிருந் திருக்கிறது. முந்திய கொள்கைகளையே சங்கரர் மறுத் திருக்கிருர்.

(8) பர்த்ருஹரிக்குப் பிற்பட்டவர்தான் ஆதிசங்க ரர். ஆனல், பர்த்ருஹரியின் காலம் 7ஆவது நூற் ருண்டுதான என்று நிச்சயிப்பது வரலாற்றுசிரியர் களின் கவனத்துக் குரியது.

(9) சிருங்ககிரிக் குறிப்புக்களைக் கொண்டு காலத்தை நிச்சயிக்க முயன்ற வரலாற்றுசிரியர்கள் அந்தக் குறிப்புக்களில் கிடைக்கும் இதர விவரங்களை யும் ஆராயாமல் விட்டுவிட்டனர். சங்கரர் விபவ ஆண்டு

வைசாக மாத தசமி திதியில் பிறந்ததாக அந்தக் குறிப்புக் கூறுகிறது. எல்லோருமே சங்கரர் நந்தன ஆண்டு பஞ்சமியில் பிறந்ததாகத்தான் ஆதாரபூர்வமாகக் கூறுகின்றனர். மேலும் ஆண்டுதோறும் வைகாசி மாதப் பஞ்சமி திதியில்தான் சங்கர ஜயந்தி நாடு முழுவதும் கொண்டாடப்படுகிறது. எனவே. மேற்சொன்ன குறிப்பு, ஆதிசங்கரரின் பிறப்பைக் குறிப்பதல்ல. அது, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் 38ஆவது ஆசாரியராக இருந்த அபிநவ சங்கரர் என்பவர் (கி.பி. 768-740) பிறந்த தினத்தையே குறிப்பதாகும். அவர்தான் விபவ ஆண்டு வைசாக மாதம் 'சுக்லபக்ஷ' தசமியில் பிறந்தவர். அதுபற்றி ஆதார பூர்வமாகப் புண்ணிய ஸ்லோக மஞ்சரியில் சர்வக்ஞ சதாசிவ போதர், நிச்சயித்துக் கூறியிருக்கிறார். அபிநவ சங்கரர் தமது வாழ்நாளில் செய்த அற்புதங்களும் செயல்களும் கிட்டத்தட்ட ஆதிசங்கரரின் வாழ்க்கையில் நிகழ்ந்தவைகளைப் பேரலவே இருப்பதால், அவரையே ஆதிசங்கரராகக் கருதிவிடக் கூடாது.

வரலாற்றாசிரியர்கள் ஆதிசங்கரரையும் அபிநவ சங்கரரையும் குழப்பிக் கொண்டதாலேயே, காலம் தவறாகக் கணிக்கப்பட்டு விட்டது. இது முந்தைய வரலாற்று ஆசிரியரின் குறையே தவிர, வரலாற்றின் குற்றமல்ல.

ஆதிசங்கரரின் காலத்தை நிச்சயிப்பதற்குக் கீழ்க் காண்பவைதான் சரியான ஆதாரங்களாகப் பயன் படக் கூடியவையாகும்.

(1) ஆதிசங்கரராலேயே ஸ்தாபிக்கப்பட்ட மடங்களான காஞ்சி, புரிஜகந்நாதம், துவாரகா மடங்களின் பழைய ஆதாரச் சுவடிகள்.

(2) சிருங்ககிரி மடத்தின் பழமையான ஆதாரச் சுவடிகள்.

(3) சர்வக்ஞ சதாசிவபோதரின் புண்ணிய ஸ்லோக மஞ்சரி.

(4) சதாசிவ பிரமேந்திரரின் குருரத்தின மாலிகை.

(5) குருரத்தின மாலிகைக்கு ஆத்மபோதர் இயற்றிய சுகம என்ற விளக்க வுரை.

(6) ஜீன விஜயம் என்ற சமண இலக்கியத்தின் சிற்சில பகுதிகள்.

(7) பிராசீன சங்கர விஜயத்திலிருந்து எடுத்த ஒரு சுலோகம் துவாரகை, காஞ்சி, புரிமடங்களில் ஆதிசங்கரரின் பிறப்பு எப்பொழுது என்பது கணக்கிடப்பட்டுள்ளது. அதிலிருந்து கலி பிறந்து 2593 ஆண்டுகளுக்குப் பிறகு ஆதிசங்கரர் பிறந்ததாகத் தெரிகிறது. அதாவது கி. மு. 509 ல் சங்கரர் பிறந்தார் என்பது நிச்சயமாகிறது. மேலும் நாடெங்கும் கொண்டாடப்படும் சங்கரர் ஜயந்தி ஆண்டுதோறும் வைகாசி மாதம் சுக்லபக்ஷ பஞ்சமியன்று கொண்டாடப்படுகிறது. இதிலிருந்து சங்கரர் காலம் கி: மு. 509 லிருந்து 477வரை என்று கூறப்படுகின்றது. மேலும், சுதன்மா என்ற மன்னன், ஆதிசங்கர பகவத் பாதாளுக்கு ஒரு தாம்பிர சாஸனம் செய்து கொடுத்திருக்கிருன். அந்தச் செப்புப் பட்டயம் யுதிஷ்டிர சகாப்தம். 2663 ல் வழங்கப்பட்டுள்ளது. அந்தப் பட்டயம் கி. மு. 478-477 ல் வழங்கப்பட்டதாக அறிவிக்கின்றது.

ஆதிசங்கரரின் சீடரில் முக்கியமானவரான சித்சுகாசிரியார் என்பவர் இயற்றிய பிரஹத் சங்கர விஜயம், 32 ஆவது பிரகரணத்தில் அவரது பிறப்பின் ஜாதகம், திதி, வார, யோக, கரணங்களுடன் கூறப்பட்டுள்ளது. அதில் அவர் யுதிஷ்டிர சகாப்தம் 2631 ல் பிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அது கலி 2593 கி.மு. 509 களையே குறிப்பதாகும்.

எனவே, ஆதிசங்கரர் பிறந்து வாழ்ந்தகாலம் கி. மு. 509 லிருந்து 477 வரை என்பதும், அவர் கிறிஸ்தவ சகாப்தம் தோன்றுவதற்கு முன்பே பிறந்தவர் என்பதும், அவர் நிச்சயமாக ஒன்பதாவது நூற்ருண்டைச் சேர்ந்தவரல்ல என்பதும் தெளிவாகிறது. இதுவே நமது துணிபும் முடிவும் ஆகும்.

சங்கரர் காலத்தில் பற்பல முரண்பாடுகள் இருந்தாலும், அவரது வாழ்வில் அவர் செய்த அரும்பெருஞ் செயல்கள் யாவுமே, அவர் காலாதீதமானவர், காலத்தை வென்றவர் என்பதையே வற்புறுத்துவனவாக உள்ளன.

# அத்வைத குரு பரம்பரை !

ஹிந்துக்கள் அனைவருமே, வேதாந்த தத்துவங்கள் யாவையும் ஒரு குருவின் மூலமாகத்தான் அறிந்து கொள்ள வேண்டும் என்று கருதுபவர்கள். அதற்கென ஒரு குருபரம்பரையே இருப்பதாக நம்புபவர்கள். அத்வைத ஆத்ம வித்தையுங்கூட அந்தக் குருபரம் பரையினரில் ஒருவர் மூலமாகவே, ஆதிசங்கரருக்கு உபதேசிக்கப்பட்டதாகவும், அதனால்தான் அவர் ஜகத் குருவாக விளங்கியதாகவும் கருதுகின்றனர்.

அத்வைத வித்தைக்கு ஆரம்பத்தில் சதாசிவமே ஆதி குருநாதர். அவர்தான் நாராயணருக்கு, அந்த வித்தையைப் போதித்தார். அவர் பிரம்மாவுக்கும், பிரம்மா வசிஷ்டருக்கும், வசிஷ்டர் தம் மகனான சக்திக்கும், சக்தி தம் மகனான பராசரருக்கும், பராசரர் தம் மகனான வேதவியாசருக்கும், வேதவியாசர் தம் மகனான சுகருக்கும் அந்த வித்தையைப் போதித்தனர்.

அந்தச் சுகர், பிறக்கும்பொழுதே ஜீவன் முக்தராகப் பிறந்தவர். ஜீவன் முக்தர்கள் என்போர் உலகத்தில் வாழும்போதே, கடவுளின் படைப்புக்கள் எல்லா வற்றையுமே பரமாத்ம தத்துவமாகக் கருதுபவராவர். அத்தகையோர் உலக. பந்தங்களில் சிக்குவதில்லை; உலக உறவும் தொடர்பும் அவர்களுக்குப் பந்தமாக இருப்பதில்லை. எங்கும், எதிலும் அவர்கள் பரப்பிரம் மத்தையே காண்பவராக இருப்பர். அத்தகைய ஜீவன் முக்தரான சுகர்ப்பிரம்ம ரிஷியிடமிருந்து அத்வைத வித்தையானது, அவரது மாணவரான கௌடபாதர் என்பவருக்குக் கற்பிக்கப்பட்டது.

கௌடபாதர், அந்த ஞானத்தைத் தமது மாணவ ரான கோவிந்த பகவத் பாதருக்குக் கற்பித்தார். அந் தக் கோவிந்த பகவத் பாதர், ஆதி சங்கரருக்குப்

(5) குருரத்தின மாலிகைக்கு ஆத்மபோதர் இயற்றிய சுகம என்ற விளக்க வுரை.

(6) ஜீன விஜயம் என்ற சமண இலக்கியத்தின் சிற்சில பகுதிகள்.

(7) பிராசீன சங்கர விஜயத்திலிருந்து எடுத்த ஒரு சுலோகம் துவாரகை, காஞ்சி, புரிமடங்களில் ஆதிசங்கரரின் பிறப்பு எப்பொழுது என்பது கணக்கிடப்பட்டுள்ளது. அதிலிருந்து கலி பிறந்து 2593 ஆண்டுகளுக்குப் பிறகு ஆதிசங்கரர் பிறந்ததாகத் தெரிகிறது. அதாவது கி. மு. 509 ல் சங்கரர் பிறந்தார் என்பது நிச்சயமாகிறது. மேலும் நாடெங்கும் கொண்டாடப்படும் சங்கரர் ஜயந்தி ஆண்டுதோறும் வைகாசி மாதம் சுக்லபக்ஷ பஞ்சமியன்று கொண்டாடப்படுகிறது. இதிலிருந்து சங்கரர் காலம் கி. மு. 509 லிருந்து 477வரை என்று கூறப்படுகின்றது. மேலும், சுதன்மா என்ற மன்னன், ஆதிசங்கர பகவத் பாதாளுக்கு ஒரு தாம்பிர சாஸனம் செய்து கொடுத்திருக்கிருன். அந்தச் செப்புப் பட்டயம் யுதிஷ்டிர சகாப்தம். 2663 ல் வழங்கப்பட்டுள்ளது. அந்தப் பட்டயம் கி. மு. 478-477 ல் வழங்கப்பட்டதாக அறிவிக்கின்றது.

ஆதிசங்கரரின் சீடரில் முக்கியமானவரான சித்சுகாசிரியார் என்பவர் இயற்றிய பிரஹத் சங்கர விஜயம், 32 ஆவது பிரகரணத்தில் அவரது பிறப்பின் ஜாதகம், திதி, வார, யோக, கரணங்களுடன் கூறப்பட்டுள்ளது. அதில் அவர் யுதிஷ்டிர சகாப்தம் 2631 ல் பிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அது கலி 2593 கி.மு. 509 கீளயே குறிப்பதாகும்.

எனவே, ஆதிசங்கரர் பிறந்து வாழ்ந்தகாலம் கி. மு. 509 லிருந்து 477 வரை என்பதும், அவர் கிறிஸ்தவ சகாப்தம் தோன்றுவதற்கு முன்பே பிறந்தவர் என்பதும், அவர் நிச்சயமாக ஒன்பதாவது நூற்ருண்டைச் சேர்ந்தவரல்ல என்பதும் தெளிவாகிறது. இதுவே நமது துணிபும் முடிவும் ஆகும்.

சங்கரர் காலத்தில் பற்பல முரண்பாடுகள் இருந்தாலும், அவரது வாழ்வில் அவர் செய்த அரும்பெருஞ் செயல்கள் யாவுமே, அவர் காலாதீதமானவர், காலத்தை வென்றவர் என்பதையே வற்புறுத்துவனவாக உள்ளன.

# அத்வைத குரு பரம்பரை!

ஹிந்துக்கள் அனைவருமே, வேதாந்த தத்துவங்கள் யாவையும் ஒரு குருவின் மூலமாகத்தான் அறிந்து கொள்ள வேண்டும் என்று கருதுபவர்கள். அதற்கென ஒரு குருபரம்பரையே இருப்பதாக நம்புபவர்கள். அத்வைத ஆத்ம வித்தையுங்கூட அந்தக் குருபரம் பரையினரில் ஒருவர் மூலமாகவே, ஆதிசங்கரருக்கு உபதேசிக்கப்பட்டதாகவும், அதனால்தான் அவர் ஜகத் குருவாக விளங்கியதாகவும் கருதுகின்றனர்.

அத்வைத வித்தைக்கு ஆரம்பத்தில் சதாசிவமே ஆதி குருநாதர். அவர்தான் நாராயணருக்கு, அந்த வித்தையைப் போதித்தார். அவர் பிரம்மாவுக்கும், பிரம்மா வசிஷ்டருக்கும், வசிஷ்டர் தம் மகனை சக்திக்கும், சக்தி தம் மகனை பராசரருக்கும், பராசரர் தம் மகனை வேதவியாசருக்கும், வேதவியாசர் தம் மகனை சுகருக்கும் அந்த வித்தையைப் போதித்தனர்.

அந்தச் சுகர், பிறக்கும்பொழுதே ஜீவன் முக்தராகப் பிறந்தவர். ஜீவன் முக்தர்கள் என்போர் உலகத்தில் வாழும்போதே, கடவுளின் படைப்புக்கள் எல்லா வற்றையுமே பரமாத்ம தத்துவமாகக் கருதுபவராவர். அத்தகையோர் உலக. பந்தங்களில் சிக்குவதில்லை; உலக உறவும் தொடர்பும் அவர்களுக்குப் பந்தமாக இருப்பதில்லை. எங்கும், எதிலும் அவர்கள் பரப்பிரம் மத்தையே காண்பவராக இருப்பர். அத்தகைய ஜீவன் முக்தரான சுகர்ப்பிரம்ம ரிஷியிடமிருந்து அத்வைத வித்தையானது, அவரது மாணவரான கௌடபாதர் என்பவருக்குக் கற்பிக்கப்பட்டது.

கௌடபாதர், அந்த ஞானத்தைத் தமது மாணவ ரான கோவிந்த பகவத் பாதருக்குக் கற்பித்தார். அந் தக் கோவிந்த பகவத் பாதர், ஆதி சங்கரருக்குப்

போதித்தார். வேதாந்த தத்துவ வகுப்பு மாணவர்கள், இத்தகைய ஆதி சங்கராரின் குருபரம்பரையினரின், வமிசாவழியைக் குறிக்கும் ஒரு வடமொழிப் பாடலை இசைப்பார்கள்.

அந்தப்பாடல் வரிகள் 'குருத்துவ' முறைக்குச் செய்யும் அஞ்சலியாகப் பயன்படுகிறதே தவிர, ஒரு குறிப்பிட்ட குருவைப் போற்றுவதாக இல்லை. ஆதி சங்கரரிடமிருந்து, இந்த அத்வைத தத்துவமானது அவருடைய நான்கு மாணவர்களுக்கும், பின்னர் அவர்கள் மூலமாக உலகம் எங்கிலும் பரவலாயிற்று.

வரலாற்று ரீதியாக ஆராய்ந்தால், கௌடபாதர் என்பவரே, இந்தக் குருபரம்பரையின் முதல்வராகக் கருதப்பட வேண்டியவராவர். இவர்தான், மாண்டூக்கிய உபநிஷதத்திற்குக் காரிகை என்ற நூலை இயற்றியுள்ளார். அந் நூல் இன்றும் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. அந் நூலில் கௌடபாதர் அத்வைதத் தத்துவக் கருத்துணர்வை வெளிப்படுத்தியுள்ளார். ஆதிசங்கரர், அந்த அத்வைதக் கருத்தின் மாண்பினைத் தமது மகத்தான அறிவுத்திறனால் பிரபலமடையச் செய்துவிட்டார். கௌடபாதரின் கருத்தைச் சரிசெய்து சமநிலைப்படுத்திய ஆதிசங்கரர், அத்வைதக் கருத்தை, மிகவுயர்ந்த உண்மையாக, அசைக்க முடியாத அஸ்திவாரத்துடன் பலப்படுத்தி விளக்கினார்.

மேற்குக் கடற்கரைப் பகுதியைச் சேர்ந்த கொங்கண நாட்டில், கௌடபாதாச்சாரியர் மடம் என்ற ஒரு மதஸ்தாபனம் கௌடசரஸ்வதர் என்ற இனத்தாரின் பொறுப்பில் உள்ளது. இந்த மடத்தின் தலைமை நிலையம் கோவாவில் ஷீரோடா என்ற இடத்தில் உள்ளது.

'பதஞ்சலி விஜயம்' என்ற வடமொழி நூலில் கௌடபாதர், கோவிந்த பகவத்பாதர் ஆகிய இருவரின் வரலாறுகளும் தெளிவாகவும் விவரமாகவும் கூறப்பட்டுள்ளன. ஆதிசங்கரருக்கும் முன்னோடிகளான அவர்களது வரலாறுகள், இந் நூலுக்குத் துணை செய்வதாகும். அவர்களைத் தெய்வாம்ச முடையவர்களாகக் கருதாமல், சரித்திர முக்கியத்துவ முடையவர்களாக ஆராய்வதே இந் நூற்பயனாகும்.

வடமொழிக்கு இலக்கணம் வகுத்த பாணினி என்பவர் இயற்றிய வியாகரண சூத்திரங்களுக்கு, பதஞ்சலி முனிவர் என்பவர் விளக்கவுரைகள் எழுதியுள்ளார். அவரது மாணவர்தான் கௌடபாதர் என்பவராவர். பதஞ்சலி எழுதிய வியாகரண சூத்திரங்களுக்கு 'மகா பாஷ்யம்' என்று பெயர்.

தென்னிந்தியாவிலுள்ள சிதம்பரம் நடராஜர் கோயிலில் தமது மகாபாஷ்யச் சொற்பொழிவுகளை நிகழ்த்திக் கொண்டிருந்தார்—பதஞ்சலி. இந்தப் பதஞ்சலி முனிவர் கி. மு. இரண்டாம் நூற்றுண்டைச் சேர்ந்தவர். ஊர் ஊராக நல்லதொரு குருநாதரைத் தேடிக் கொண்டிருந்த கௌடபாதர், சிதம்பரத்தில் பதஞ்சலி முனிவர் இருப்பதை அறிந்து அங்கு வந்து சேர்ந்தார்.

'பதஞ்சலி' என்பவர் ஆதிசேஷனின் அம்சமுடையவராகக் கருதப்பட்டு வந்தார். அவர் புஷ்யமித்ர சுங்கன் என்ற மன்னரவையில் இருந்தவர். யோகசாதனைகள், யோகாசனங்கள், சூத்திரங்கள், வைத்தியம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட பற்பல விஷயங்களை யெல்லாம் விளக்கத் தகுந்த அபூர்வ ஆற்றலைப் பெற்றிருந்தார். மிகப் பெரிய ஆத்மசிந்தனைக் கருத்துக்களை மிகவும் எளிதாக விளக்கஞ் செய்யும் நாவன்மையுடையவராகவும் இருந்தார். அவரது போதனைகளை அறிந்துகொள்ள ஓராயிரம் மாணவர்கள், கௌடபாதர் உட்பட அவரிடம் பாடங்கேட்டு வந்தனர். அந்த ஆயிரம் மாணவர்களில், ஒவ்வொருவருக்கும் தெளிவாகப் போதிப்பதற்கு விரும்பிய அவர், தமது சுயவுருவாகிய ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷனுக இருந்தால்தான், எல்லோருக்கும் தனித்தனியே போதிக்க முடியும் என்பதை உணர்ந்தார். எனவே, அவர் தமது போதனைகளைத் தொடங்குவதற்கு முன்பாகத் தமது மாணவர்களுக்கு இரண்டு நிபந்தனைகளை விதித்தார். ஒரு திரைச் சீலையைக் கட்டித் தொங்கவிட்டு, அதன் பின்புறமாகத் தாம் இருந்து பாடம் போதிக்க விரும்புவதாகவும், போதனை போதிக்கப்படும்பொழுது எந்த மாணவனும் அந்தத் திரைச்சீலையை உயர்த்தியோ விலக்கியோ தம்மைப் பார்க்க முயற்சிசெய்யக் கூடாது என்று முதல் நிபந்தனையை விதித்தார். அதாவது

அவர் திரைமறைவில், இருக்கும்போது, விஷச்சுவாலை வீசும் தமது ஆயிரம் நாவுகளுடன் கூடிய சுயரூபத்தில் இருப்பார். ஆகவே அந்த நச்சுக் கனல் மாணவர்களை அழித்துவிடக்கூடாது என்பதற்காகவே அத்தகைய நிபந்தனையை விதித்தார். இரண்டாவது நிபந்தனையாக, 'தாம் போதனை செய்யும்போது எந்த மாணவனாவது வகுப்பு அறையைவிட்டு வெளியேறினாலும், கட்டுப்பாட்டை மீறினாலும் அந்த மாணவன் பிரம்ம ராக்ஷசனாகி விடுவான்' என்றும் கூறினார். இந்த இரண்டு நிபந்தனைகளையும் விதித்த பிறகு, பதஞ்சலி முனிவர், திரைச் சீலையைத் தொங்கவிட்டு, அதன் பின்னே தம் யோக சாதனையால் சுயவடிவாகி, ஆயிரந் தலையுடைய ஆதிசேஷனாக வீற்றிருந்து, மஹாபாஷ்யத் தெளிவுரைகளைப் போதித்துக் கொண்டிருந்தார். மாணவர் ஒவ்வொருவருடைய சந்தேகத்தையும், அத்தகைய நிலையில்தான் அவரால் விளக்கிப் போதிக்க முடிந்தது.

தினந்தோறும் போதனைகள் சிறப்பாகப் போதிக்கப்பட்டு வந்ததால், மாணவர்கள் தெளிவு பெற்று வந்தனர். ஒருநாள் கௌடபாதர் தமது இருக்கையை விட்டு எழுந்தார். தமது ஆசிரியர் கூறிய நிபந்தனையை மறந்து, அவர்அந்த அறையை விட்டு வெளியே சென்றார். அதே சமயத்தில் மற்றொரு மாணவருக்கு, 'தமது ஆசிரியரால் எப்படி ஆயிரம் மாணவர்களில் ஒவ்வொருவருக்கும் தமது போதனையைத் தெளிவுறப் போதிக்க முடிகிறது என்பதை அறியவேண்டும்' என்ற ஆர்வம் தோன்றியது. அவர் தமது குருநாதர் கூறிய நிபந்தனையையும் மறந்து, அவரை மறைத்திருந்த திரைச் சீலையை அகற்றி உள்ளே பார்த்தார். திரைச்சீலையைச் சிறிது உயர்த்தியதுமே, ஆதிசேஷ உருவத்தில் இருந்த அவரது ஆயிரம் நாவுகளும் விஷக் கனலைக் கக்கியதால், அந்த வகுப்பு அறையிலிருந்த அனைவரும எரிந்து சாம்பலாயினர். இந்த நிகழ்ச்சி, பதஞ்சலி சரித்திரம் என்ற வடமொழி நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆதிசேஷனாகத் தமது சுயவுருவில் இருந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சியை உணர்ந்த பதஞ்சலி முனிவர்,

தமது மஹாபாஷ்யத்தைத் தம்மாலேயே பரவச் செய்யமுடியாத நிலையேற்பட்டதற்காக வருந்தினார்.

அதே சமயத்தில், வெளியே சென்றிருந்த கௌட பாதர் மண்டபத்திற்குத் திரும்பி வந்தார். மாணவர் கள் ஒருவருமே காணவில்லை! எங்கும் ஒரே சாம்பல். அந்தச் சாம்பற் குவியலின் மத்தியில் பதஞ்சலி முனிவர் உட்கார்ந்திருப்பதைக் கண்டு பயந்தார். தயங்கித் தயங்கி உள்ளே சென்றார். கௌடபாதரைக் கண்ட பதஞ்சலி முனிவருக்கு ஒரே திகைப்பு. நடு வகுப்பில், வெளியேறக் கூடாது என்ற தமது நிபந்தனையை ஒரு சீடன் மீறிவிட்டானே என்று அவர் ஆத்திரப்பட வில்லை. ஆயிரம் மாணவர்களில் அந்த ஒரு மாணவனா வது தம்மிடம் வந்தானே என்று ஆறுதல் கொண்டார். கௌடபாதர், பதஞ்சலி முனிவரை வணங்கினார். பதஞ்சலி முனிவர், தமது மகாபாஷ்யம் என்ற ஒப் பற்ற செல்வத்தைக் கௌடபாதரிடம் ஒப்படைக்க முடிவு செய்தார். அதற்காக நெடுங்காலம் பாடங் கற்பிக்காமல், "எனக்குத் தெரிந்தவை யாவும் உனக் குத் தெரிவதாகுக" என்று கூறி, ஒருமித்த மனத்தோடு ஞான அனுக்கிரஹம் செய்தார். அதே கணத்தில் கௌடபாதர் பிரம்ம ராக்ஷசனாக மாறினார் !

கௌடபாதருக்குத் தமது உருவம் திடீரென்று மாறியது கண்டு திகைப்பேற்பட்டது. பதஞ்சலி முனிவரோ, "மாணவ! நீ நடுவகுப்பில் வெளியேறி யது எனக்குத் தெரியாது. என் நிபந்தனைகளை மீறிய ஒருவன் திரைச் சீலையைத் தூக்கிய குற் றத்தால், ஆயிரம் மாணவர்களும் பஸ்பமாகி விட்டார்களே என்று நினைத்து ஏங்கினேன். அந்த ஆயிரத்தில் ஒருவனாக நீ மட்டும் பிழைத்து என் னிடம் வந்ததைக் கண்டேன். இது கண்ட எனக்கு வியப்பாகிவிட்டது. நீ ஒருவனே என்னிடம் பாடங் கேட்டுப் பயன் அடைந்தாய். இதனால் உலகுக்கும் நன்மையுண்டு. ஆயினும் நீயோ ஒரு தவறு செய்தவன். என் நிபந்தனையை மீறியவன். அதனால் நீ செய்த தவற்றுக்கு உரிய தண்டனையை அனுபவிக்க வேண்டி வந்து விட்டது. என் சாபம் பலித்ததால் பிரம்ம ராக்ஷசனாகி விட்டாய். இதை என்னால் மாற்ற முடி

யாது. ஆயினும் இந்தச் சாபத்திலிருந்து விமோசனம் எப்போது அடைவாய் என்பதை மட்டும் என்ஞல் சொல்ல முடியும். அதாவது, நீ கேட்கும் கேள்விகளுக்கு எவன் ஒருவன் உனக்குத் தக்க விடையளிக்கிருனே அவனுக்கு நான் உனக்குப் போதித்த மகாபாஷ்யத்தை நீயே போதிப்பாயாக. அப்போதே நீ உனது சுயவுரு வத்தைச் சிறுகச் சிறுகப் பெற்றுவிடுவாய்' என்று கூறிஞர்.

அதன் பிறகு பிரம்மராக்ஷசராகிய கௌடபாதர், வான வெளி வழியாகப் பறந்து எங்கெங்கோ மன அமைதியைத் தேடி அலைந்தார். இறுதியில் நர்மதை யாற்றங் கரையில் வந்திறங்கிஞர். அங்கு பெரிய தொரு ஆலமரம் இருப்பதைக் கண்டு, அதன் மீது ஏறி உட்கார்ந்து கொண்டார். பதஞ்சலி முனிவரிடம் மகாபாஷ்யம் என்ற நூலைக் கற்றிருந்ததால், பிரம்ம ராக்ஷசஸ் உருவத்தைப்பெற்றவராக இருந்தும், சிறந்த மேதைத் தன்மையுடன் அந்த ஆலமரத்தில் தங்கி யிருந்தார். அந்த ஆலமரத்தை ஒட்டினுற்போல ஒரு நெடுஞ்சாலை இருந்தது. அந்தச் சாலை வழியாகத்தான் தெற்கிலிருந்துவடக்கு நோக்கிச் செல்லும் பிரயாணிகள் செல்வது வழக்கம்.

'பிரம்மராக்ஷஸ்' என்பது பைசாச வகையைச் சேர்ந்த ஒருவகை ஆவியுருவமாகும். அது வேத அத்தி யயனம் செய்தவர்களைக் கேள்விகள் கேட்கும். அந்தக் கேள்விகளுக்குப் பிரயாணிகள் விடை சொல்லாவிட் டால், அவர்களை அடித்துக்கொன்று தின்பதுதான் அந்தப் பிரம்ம ராக்ஷஸின் வழக்கமாகும். அங்ஙனம் பிரம்மராக்ஷசாக இருந்த கௌடபாதர், அந்த நெடுஞ் சாலை வழியாக வருவோரையும் போவோரையும் சாஸ்திர சம்பந்தமான கேள்விகளைக் கேட்பார். அவர்கள் சரியாகப் பதில் சொல்லாமற்போஞல் அவர்களை அடித்துக்கொன்று தின்றுவிடுவார்.

சமஸ்கிருத இலக்கணத்தில் 'பிரத்தியயம்' என்பது ஒரு சொல்லின் பகுதியாகும். அச் சொல்லின் பகுதி யுடன் 'நிஷ்டா பிரத்தியயம்' என்ற விகுதியைச் சேர்த் தால் அது செயப்பாட்டு வினையாகும். உதாரணமாக

'புஜ்' என்ருல் 'சாப்பிடு' (உண்) என்று பொருள். அத னுடன் 'க்த' என்ற நிஷ்டா பிரத்தியயத்தைச் சேர்த் தால், அது 'புக்தம்' (உண்ணப்பட்டது) என்று ஆகும். அதுபோலவே, ரக்தம், ஸிக்தம் என்ற சொற்கள் உண்டாகும்.

ஆனுல் அதுபோல 'பச்' என்ற பிரத்தியயத்துடன் மட்டும் நிஷ்டா பிரத்தியயத்தைக் கூட்டினுல் 'பக்தம்' என்று ஆகாது. 'பக்வம்' என்றுதான் மாறும். இது சமஸ்கிருத இலக்கணத்தில் உள்ள பாணினி சூத்திரம் 8, 2, 52இல் தெளிவு படுத்தப்பட்டுள்ளது. இது அந்தக் காலத்தில் பல அறிஞர்களுக்குக் கூடத் தெரியாமல் இருந்தது. எனவே, பிரம்மராக்ஷஸ், தான் கண்ட பிரயாணிகளை நயமாக விவாதத்துக்கு அழைத்து, 'புஜ்' முதலிய தாதுக்களின் நிஷ்டா ரூபத்தைக் கேட்டு, கடைசியில் 'பச்' என்பதற்கும் நிஷ்டா ரூபத்தைச் சொல்லச் சொல்லிக் கேட்கும். விஷயம் தெரிந்தவர் களும் சரியான விடைசொல்ல முடியாமல், 'பச்' என்ப தற்கு 'பக்தம்' என்று சட்டென்று சொல்வார்கள். பிரம்ம ராக்ஷஸோ 'பக்வம்'தான் சரியானது; நீ சொல் வது சரியல்ல; நீயும் நான் சாப்பிடுவதற்குப் 'பக்வம்' தான்" என்று சொல்லி அவர்களை அடித்துக் கொன்று விடும். இவ்விதமாகப் பலநாட்கள் நிகழ்ந்து வந்தது.

ஒருநாள் சந்திர சர்மா என்ற அறிஞர் அந்தச்சாலை வழியாகச் செல்லும்போது, பிரம்மராக்ஷஸ் இருந்த அந்த ஆலமரத்தைக் கடந்துசெல்ல வேண்டியிருந்தது. பிரம்மராக்ஷசரான கௌடபாதர் அவரது அழகிய உருவத்தைக் கண்டு மகிழ்ந்து அவரை அழைத்து, அவரிடம் தமது விவாதத்தைத் தொடங்கினுர். அவர் வழக்கம்போலக் கேட்கும் கேள்விகளைக் கேட்டு, கடைசி யாக 'பச்' என்பதன் நிஷ்டா ரூபத்தைக் கேட்டார். அந்தச் சந்திர சர்மா என்ற அந்தணர், சட்டென்று 'பக்வம்' என்ற சரியான பதிலைச் சொல்லிவிட்டார். பிரம்ம ராக்ஷசராக இருந்த கௌடபாதர் தமது குருநா தர் பதஞ்சலி முனிவரின் கட்டளைப்படி, தமது பேயுரு வம் விரைவில் மாறிவிடும் என்பதை உணர்ந்து மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அவர் சந்திர சர்மாவை நோக்கி "உன் அறிவுத்திறன் மெச்சத் தகுந்தது. அதனுல்

உனக்கு மகாபாஷ்யம் என்ற ஒப்பற்ற நூலைப் போதிக்க விரும்புகிறேன். நான் மகாபாஷ்யத்தை ஒவ்வொரு நாளாக உனக்குப் பாடம் போதிக்க அவகாசமில்லை. ஆகையால் நான் சொல்லச் சொல்ல, சொல்வதை நீ விரைவாக எழுதிக் கொள்ள வேண்டும். நடுவில் மரத்தைவிட்டுக் கீழே இறங்கக் கூடாது; சாப்பிடக்கூடாது; தூங்கக்கூடாது. கடமையை உறுதியாகவும் உற்சாகத்துடனும் விரைவாகவும் முடிக்க வேண்டும்" என்றார்.

பிரம்மராக்ஷஸ் சொல்வதை எழுதிக் கொள்வதாக ஒப்புக்கொண்ட சந்திர சர்மாவிடத்தில், ஏடும் இல்லை; எழுத்தாணியும் இல்லை. எனவே அவர், அந்தஆலமரத்தின இலைகளைப் பறித்துத் தம் தொடையைக் கிழித்துத் தமது செங்குருதியை மையாகக் கொண்டு, அந்த இலைகளில், மகாபாஷ்யத்தை விரைவாக எழுதலானார். இவ்விதம் ஓய்வு உறக்கம், உணவு எதுவுமேயின்றி ஊக்கத்துடன் எழுதி முடித்தார். எழுதிய இலைகளைத் தம் மேலாடையில் போட்டு, ஒரு கட்டாகக் கட்டிக் கொண்டார். பிரம்ம ராக்ஷசராக இருந்த கௌடபாதர் சுயவுருவம் பெற்று, சந்திர சர்மாவை ஆசீர்வதித்து, விடைபெற்று, இமயமலைச் சாரலுக்குச் சென்றுவிட்டார். சந்திர சர்மா இலைமூட்டையைத் தோளில் போட்டுக்கொண்டு, அருகாமையிலிருந்த ஒரு கிராமத்தை நோக்கி நடந்தார். பசியாலும் தாகத்தாலும் வருந்திய அவரது நடை தளர்ந்தது;கண்களைத் தூக்கம் சுழற்றியது. மகாபாஷ்யம் எழுதிய இலை மூட்டையை அப்படியே கீழே போட்டுப்படுத்தார். அயர்ந்து தூங்கி விட்டார்.

அப்பொழுது அந்தப் பக்கமாகச் சென்ற ஆடு ஒன்று, அவரது கையருகே வைத்திருந்த இலை மூட்டையை முகர்ந்தது. உடனே அதனுள்ளே இருந்த இலைகளை மடமட வென்று தின்னலாயிற்று. அந்தச் சப்தம் கேட்டு விழித்தெழுந்த சந்திர சர்மா, அந்த ஆட்டைத்துரத்தினார்.மகாபாஷ்யம் எழுதிய இலைகள் என்று அந்த ஐந்தறிவுப் பிராணிக்குத் தெரியாமற் போயிற்று. சந்திர சர்மா அதை அடிக்கவில்லை. அதைத் துன்புறுத்தவில்லை. எஞ்சியிருந்த இலைகளை மட்டும் மீண்டும் மூட்

டையாகக் கட்டிக் கொண்டு தூக்க மயக்கத்திலேயே உஜ்ஜயினிநகரத்தைச் சேர்ந்தார். வழிநடந்தஅலுப்பும் களைபபும் பலநாள் பசிமயக்கமும் அவரை வாட்ட, அவர் அங்கிருந்த ஒரு வீட்டின் திண்ணையில் மீண்டும் மயக்கத்தில் தூங்கலானார். அந்த வீடு ஒரு வணிகரின் வீடு. அந்த வீட்டுவாசலைப் பெருக்க வந்த வணிகர் மகள், திண்ணையிலே ஒருவர் மயங்கிக் கிடப்பதைக் கண்டாள். அவர் பசிமயக்கத்தில்தான் பிரக்ஞையற்றிருக்கிறார் என்பதை உணர்ந்தாள். உடனே, உள்ளே சென்றாள். சோற்றையும் தயிரையும் சேர்த்துப் பிசைந்த தயிர்ச் சாதத்தை எடுத்து வந்து, அவரை எழுப்பினாள். அவர் எழுந்திருக்கவில்லை. ஒரே மயக்கம்! அவள் அந்தத் தயிர்ச் சோற்றை அவரது வயிற்றில் தேய்த்தாள். அன்னசாரம் மேனித் துவாரங்களூடே சென்றது. அவர் விழித்தார். அவள் அவரை உபசரித்தாள். பின்னர், அவள் அவரையே மணந்துகொள்ள ஆசைப்பட்டுப் பிடிவாதம் செய்தாள். சந்திர சர்மாவோ, மகாபாஷ்யத்தை உலகத்தில் பரவச் செய்வதிலேயே தமது வாழ்நாளைக்கடத்த வேண்டும் என்று எண்ணியிருந்ததால், அவளது ஆசைக்கு உடன்பட மறுத்தார். அவள் தன் விருப்பத்தைத் தன் தந்தைக்கு அறிவித்தாள். அந்த வணிகன், "உனது உயிர் என் மகள் அளித்த பிச்சை! அவள் உணவளித்து உன்னைக் காப்பாற்றாமல் இருந்திருந்தால் நீ ஏது? உன் பாஷ்யமேது? லட்சியம் ஏது? ஆகையால் நீ எங்கள் சொத்து!" என்று வாதிட்டான். வாதம் முற்றியது. வணிகன், அரசனிடம் வழக்குத் தொடர்ந்தான்.

சந்திர சர்மாவின் அழகு அந்நாட்டு அரசனையும் கவர்ந்தது. அவன் தன் மகளையும் அவருக்கு மணம் செய்விக்கலாமே என்று கருதினான். எனவே தனது அமைச்சரின் அபிப்பிராயத்தைக் கேட்பதற்காக அவரை அழைத்துவர ஆளனுப்பினான். அந்தணரான அமைச்சருக்கும் ஒரு மகள் இருந்தாள், அவளுக்காகத்தான் அரசன், வரன் ஒருவனை நிச்சயித்திருக்கிறான் என்று நினைத்த அமைச்சர் அவசர அவசரமாக அரண்மனைக்குச் சென்றார். திருமணமே செய்து கொள்ள வேண்டாம் என்றிருந்த சந்திர சர்மாவுக்கு

மூன்று வருணத்தினரும் பெண் கொடுக்க முன் வந்தனர். அந்தக் காலத்தில் அந்தணர்கள் தம்மைவிடத் தாழ்ந்த குலத்துப் பெண்களை மணப்பதானுல் ஒரே முகூர்த்தத்தில், பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்ற நான்கு வருணத்துப் பெண்களையும் மணந்து கொள்ளவேண்டும் என்ற நியதி இருந்ததால், சந்திர சர்மா நான்கு வர்ணத்துப் பெண்களையும் மணந்து கொண்டு, இல்வாழ்க்கை நடத்தி வந்தார். ஆயினும் தம் வாழ்வில் கொண்டிருந்த இலட்சியத்தையும் கடமையையும் அவர் மறக்கவில்லை. நான்கு குலத்து மங்கையரும் நான்கு புத்திரர்களைப் பெற்றனர். அவர்கள் தான் (வரருசி) வல்லபரிஷி, விக்கிரமாதித்தன், பட்டி, பர்த்ருஹரி என்பவராவர். அவர்கள் வாலிபப் பருவம் அடைந்தவுடன் சந்திர சர்மா, மீண்டும் தமது குருவான கௌடபாதரைத் தேடி இமயமலைச் சாரலுக்குச் சென்ருர். அங்கே அவர் கௌடபாதரைச் சந்தித்தார். அவர் சந்திர சர்மாவிற்குச் சந்நியாசம் வழங்கினுர். அப்பொழுதிலிருந்து சந்திர சர்மா, கோவிந்த பகவத் பாதாசாரியர், என்று வழங்கப்பட்டார். பதரிகாசிரமத்தில் அவர் தங்கியிருந்தார். அங்கு அவருக்கு வியாசர், சுகர் என்ற இருவரையும் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அப்போது வியாச முனிவர் “இந்தக் கலியுகத்தில் சிவபெருமானே பூமியிலே மனிதப் பிறவியெடுத்து, துறவு நிலையில் அறத்தைப் போதிக்கப் போகிருர். ஆகவே, அவருக்குச் சந்நியாசம் வழங்க, கோவிந்தர், நர்மதைக் கரையை அடைந்து அங்குச் சங்கரரின் வருகைக்காகக் காத்திருக்க வேண்டும்” என்றும், “அந்தச் சங்கரரே பிரம்ம சூத்திரத்திற்குப் பாஷ்யம் எழுதுவார்” என்றும் “கோவிந்தர் அங்கிருந்து அவருக்குத் துணைசெய்ய வேண்டும்” என்றும் கூறினுர்.

உடனே கோவிந்த பகவத்பாதர், தமக்குப் பழக்கமான நர்மதை நதிக்கரையை அடைந்தார். எந்த ஆலமரத்திலிருந்து கௌடபாதர் சொல்ல மகாபாஷ்ய உரையை இலைகளில் எழுதினுரோ, அந்த ஆலமரத்தின் அருகேயிருந்த ஒரு மலைக்குகையில் அமர்ந்து தியானத்தில் இருந்தார். கௌடபாதரின் சீடரான கோவிந்த பகவத் பாதர், ஆதிசங்கரரின் குருவான வரலாற்று

விபரங்களை, இனிவரும் அத்தியாயங்களில் காணலாம். அத்வைத குருபரம்பரையில் ஆதிசங்கரர்—பதினோரா வது குருவாவார்.

## ஆதி சங்கரர் தோற்றம்!

மலைவளங் கொழிக்கும் மலையாள நாட்டில், மலையாள மொழி தோன்றுவதற்கு முன்னால், தென்னவரான பண்டைய தமிழ் மன்னர் பரம்பரையினர் ஆண்டு வந்த காலத்தில், அங்கெல்லாம் தமிழ்மொழியே பேசப் பட்டு வந்தது. அங்குத் தமிழிலே ஆலவாய்ப்புழை என்றும், வடமொழியில் சூர்ணாநதி என்றும் வழங்கப் படும் நதிக்கரையில், காலடி என்ற இனிய தமிழ்ப் பெயரைக் கொண்ட சிற்றூர் ஒன்று உண்டு. அந்த ஊர் ஆலவாய் இரயில் நிலையத்திலிருந்து ஆறு மைல் தொலைவில் அமைந்துள்ளது.

அந்த ஊரில் ஞானமூர்த்தியான தத்தாத்ரேயரை உலகுக்கு அளித்த ஆத்ரேய கோத்திரத்தைச் சேர்ந்த வித்யாதிராஜர் என்ற வேதியர் ஒருவர் இருந்தார். அவர் வேதவேதாங்கங்களை அறிந்தவராகவும், சீரும் சிறப்பும் செல்வமும் மிக்க புண்ணிய சீலராகவும் இருந்தார். அவருக்குச் சிவகுரு என்று ஒரு மகன் உண்டு. அந்தச் சிவகுரு என்பவர், வடமொழியில் மாபெரும் புலவராகவும் நாவலராகவும் விளங்கி வந்தார். அவர் மகாபண்டிதர் என்பவரின் மகளான ஆர்யாம்பிகை என்பவரை மணந்து இல்லறத்தைச் சிறப்புற நடத்தி வந்தார். நற்குண நற்பண்புகள் வாய்ந்த அந்த மங்கை நல்லாள், கணவனுக்குரிய பணிவிடைகளைச் செய்து கற்பு நலங்காத்து வந்தாள். அப்படியிருந்தும், அந்தத் தம்பதிகளுக்கு நெடுங்காலம்வரை மகப்பேறு உண்டாகவில்லை. இந்நிலையில் சிவகுருவின் பெற்றோர்கள் இறந்தனர். சிவகுரு குடும்பத் தலைவரானார்.

எல்லா வகையான செல்வங்களும் அமையப்பெற்ற சிவகுருவுக்குப் பிள்ளையில்லாக் குறையே பெருங் குறையாக இருந்தது. எனவே, தம்பதிகள் இருவரும்

அருகாமையிலிருந்த விருஷாசலீஸ்வரர் கோயில் என்ற சிவபெருமானின் திருக்கோயிலுக்குச் சென்றனர்.

அந்தக் கோயில், மலபாரிலுள்ள திருச்சூர் என்ற ஊரில் உள்ளது. இன்றும் அங்குக் கோயில் கொண்டுள்ள பெருமானுக்குத் தூய்மையான நெய்யையே அபிஷேகம் செய்து வருகின்றனர். இந்த முறை சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நிகழ்ந்து வருகின்றது. இப்பொழுது அந்தக் கோயில் வடக்கு நாதன் கோயில் என்று வழங்கப்படுகின்றது.

மலையாள நாட்டில், மகப்பேறு பெருத தம்பதிகள், இவ் விறைவனின் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டுத் தொடர்ந்தாற்போல, ஒரு மண்டலம் அங்கேயே தங்கித் தவமிருப்பது வழக்கம். அங்குள்ள திருக்குளத்தில் குளித்து, கட்டுப் பாட்டுடன் தியானமும் வழிபாடுமாக இருந்து, தாம் கோருவதை அடையத் தவமிருப்பதுண்டு. இதனை மலையாளத்தார் 'பஜனம் இருப்பது' என்பர்.

சிவகுரு தம்பதிகள் விருஷாசலீஸ்வரர் கோயிலிலுள்ள இறைவனை வழிபட்டு, மகப்பேறு வேண்டித் தவமிருந்தனர். கனவிலும் நனவிலும் இறைவனிடம் மகப்பேறு பெற வரம் பெறுவதிலேயே கவனமாக இருந்தனர்.

இது இப்படியிருக்க, அந்தக் காலத்தில் பாரத நாட்டின் வரலாற்றைக் கவனிப்போமாக. இந்த நிகழ்ச்சி, சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்தது. அப்பொழுதுதான் கௌதம புத்தர் என்பவர், ஹிந்துக்களில் வேதமறிந்தவர் செய்து வந்த யாகங்களில், உயிர்க் கொலை புரிவதைக் கண்டித்துப் புதியதொரு மதத்தைப் பரப்பி வந்தார். அவரது கொள்கைகள் வெகு வேகமாகப் பரவின. சமண மதமும் பரவிக் கொண்டிருந்தது.

'சமணரும், பௌத்தரும் வேதங்களை இகழ்ந்தும் வேதங்கள் விதித்த வேள்வி முதலியவைகளைக் கண்டித்தும் தமது கொள்கைகளைப் பரப்பி வந்தனர். வேதங்களில் கூறப்பட்ட கர்ம காண்டத்தையே பின்பற்றி வந்த மக்கள் மத்தியில், அவற்றில் கூறப்பட்ட

ஞான காண்டத்தின் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துரைக்கவல்ல அறிஞர்கள் இல்லாததால், பௌத்த சமண வாதங்கள் எளிதில் வென்று வந்தன. வேதங்கள் மறைந்து விடுமோ, வேத மார்க்கம் போய் விடுமோ என்ற நிலையுண்டாயிற்று. வேதம் அநாதி என்றும் கட்டுக் கதைதானே என்றும் நினைக்கும் நிலைமையாயிற்று.

## வேத ஞானியரின் சிந்தனை

இந் நிலையில் வேத மார்க்கத்தில் வேதங்கள் கூறும் செயல், அறிவு என்ற இரு பெரும் அனுபவ தத்துவங்களுக்கு முதல்வனான இறைவனையே, தம் இறைவனாகக் கொண்ட வைதிகர்கள் "உலகில் அறங் குறைந்து மறம் தலையெடுக்கும் பொழுது நான் வருவேன்" என்ற கீதா வாக்கியக் கருத்தோடு, பிற மதக் கோட்பாடுகளிடையே தம் மதத்தைக் காக்கும் எண்ணத்தில் இறைவனையே எண்ணிக் கொண்டிருந்தனர். அவர்கள் கனவிலும் நனவிலும் இதே எண்ணமாகத்தான் இருந்தனர். இறைவனே குருநாதனாகத் தோன்றி, நல்லதொரு ஞான மார்க்கத்தை மக்களுக்குப் போதித்து நிரூபணம் செய்தாலொழிய, வேறு வழியில்லை என்று ஏங்கியிருந்தனர். பேச்சுத் திறனும் எழுத்துத் திறனும் யோக சித்தியும் வாய்ந்த மனிதப் பிறவியில் இறைவனே பிறந்து, மனித தெய்வமாக விளங்கினால் ஒழிய, அதர்மக் கொள்கைகளை எதிர்க்க . இயலாது என்று மனங் கலங்கி இருந்தனர்.

அண்ட புவன சராசரங்கள் அனைத்திலுமுள்ள இருப்பனவும் இயங்குவனவும் ஆகிய யாவும், ஜீவ சக்தியினாலும் ஆன்ம சக்தியினாலும்தான் நிலைத்து இயங்குகின்றன. இவற்றை யெல்லாம் இயங்க வைப்பதும் இருக்க வைப்பதும் பரமான்மா ஒன்றேதான். அதுவே, எல்லாமாகவும் எங்கும் எதிலும் பரவியதாகவும் உள்ளது" என்ற உள்ளக் கிடக்கையுடன் இருந்த உயர்ந்த ஞானியர்கள், இறைவனின் குரு ரூப போதனை ஒன்றால்தான் உலகத்தில் உயர்ந்ததொரு ஞான மார்க்கத்தைப் போதிக்க முடியும் என்று கருதியிருந்தனர்.

அவர்கள், அத்தகைய பரம்பொருளை ஞானமூர்த்தி யாக, மோன மோகன மூர்த்தியாக, காலத்தை வென்ற அமர மூர்த்தியாக, தென் திசையை நோக்கி வீற்றிருக் கும் தட்சணாமூர்த்தியாகவே, நினைத்துத் தியானித் திருந்தனர். அவர்கள் கற்பனையிலே ஒரு காட்சி!

"முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொரு ளாகவும், பின்னைப் புதுமைக்கும்" புதியவனாகவும் அமர்ந்துள்ள அந்த இறைவன் முன்பு சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் என்ற யோகியர்கள் வீற்றிருந்த னர். நான்கு மறைகளையும் ஆறு அங்கங்களையும் அறிந் திருந்த அந்த யோகியர், எல்லாவற்றையும் கற்றிருந் தும் அமைதியின்றித் தக்க குருவினை எங்கெங்கோ தேடியலைந்தனர். இறுதியில் அவர்களுக்கு இறைவனே குருவாகத் தோன்றினான். ஆனால் அந்தக் குருவோ சுவடியிலிருந்து எதையும் எடுத்துச் சொல்லாமல், தன்னிலேயே ரமித்துக் கொண்டு மௌனமாகச் சின் முத்திரை காட்டி இருந்து விட்டான்! உருவமுடைய அவனே உருவற்றவனாகி விட்டான்! இந் நிலையில் தேவர்கள் இறைவனை அணுகினர். படைப்புத் தேவ னான பிரமன் இறைவனை நோக்கி, "எல்லாம் வல்ல இறைவனே! நீங்கள்தான் பாரத தேசத்தில் தங்களது மூச்சுக் காற்றாகிய வேதத்தைப் பரவும்படி செய் தீர்கள். அங்குள்ள மக்கள், பிறந்ததுமுதல் மரணம் அடையும்வரை, தத்தமக்குரிய தமது மூதாதையருக் கும், தம் வழித்தோன்றல்களுக்கும், எங்களுக்கும், உங் களுக்கும் செய்ய வேண்டிய கடமைகளை வேதங்களி லுள்ள கர்ம காண்டத்தில் கூறியுள்ளீர்கள். மக்கள் அறிவுத் தெளிவு பெற்று உள்ளும் புறமும் நிறைந் துள்ள உங்களை, தங்களுக்குள்ளேயே கண்டு, அமர நிலை அடைவதற்கான ஞான வழியை வேதங்களின் முடிபாகிய உபநிஷதங்களில் கூறியுள்ளீர்கள்.

அத்தகைய வேதங்களுக்கும், வேத நெறிகளுக்கும், தர்மத்துக்கும் இப்போது ஆபத்து வந்து விட்டது. கர்மம், பக்தி, ஞானம் என்பவையெல்லாம் சிதைந்து வருகின்றன. வேதத்தையே பிரமாணமாகக் கருது வோர்கள், கர்ம காண்டத்தைப் பின்பற்றினாலும் பக்தி யோடும் ஞானத்தோடும் அந்தக் கர்மங்களை இணைக்

காமல் பிறந்து இறந்து அழிகின்றனர். பக்தி என்று நினைத்து, நரபலி, மிருகபலி முதலிய உயிர்க் கொலைகளைச் செய்கின்றனர். தெய்வங்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பிக்கின்றனர். பகுத்தறிவு வழியில் அன்பையும் அருளையும் போதிக்கும் புத்தரும் சமணரும் இறைவனாகிய தங்களைப்பற்றி ஒரு முடிவும் சொல்லாததால், மக்களுக்கு எதிலுமே பிடிப்பில்லை. எல்லோருமே இறைவனாகிய உங்களால் படைக்கப்பட்டவர்கள், எல்லாச் செயல்களின் பயன்களையும் நீங்களே அளிப்பவர்கள் என்ற திடமான உணர்வு இல்லாமையால். அன்பு செய்ய வேண்டிய அவசியமும், தவறு செய்வதால் ஏற்படும் பாவமும் மக்களுக்கு விளங்கவில்லை. தங்களது ஆத்மா என்ன என்பதையே அவர்களால் அறிய முடியவில்லை. எனவே, அதர்மமும் அஞ்ஞானமுமாக இருப்பதால் எழுபத்திரண்டு மதங்கள் ஏதேதோ கொள்கைகளைக் கூறி, மக்கள் மனத்தையும் அறிவையும் குழப்புகின்றன. இத்தருணத்தில் இறைவராகிய, தாங்கள் ஆத்மானந்தத்தில் திளைத்திருந்தால் உலகம் என்னுவது?'' என்றான். அதற்குமேல் நான்முகனுக்கு நாத்தழுதழுத்தது. மோன மூர்த்தியும் மௌனமாகவே இருந்தார்.

நான்முகன், வாக்கில் வல்லவளான நாமகளைத் தேடினான். இறைவன், தன்னையறிய வழி தேடுவதில் அவ்வளவு அக்கறை காட்டிய மக்களைத் தேடித் தானே செல்ல முனைந்தான். தேவர்கள், அவரை மனித உருவில் தோன்ற வேண்டும், என்று பிரார்த்தித்தனர். இறைவனே, மக்களுக்கு நிரந்தர இன்பம் தோன்றச் செய்பவனாக—சங்கரராக அவதரிக்கச் சித்தங் கொண்டான்.

## சிவகுருவின் தவமும் கனவும்

இந் நிலையில், சிவபொருமான் திருக்கோயிலில் மகப்பேறு வேண்டித் தவங் கிடக்கும் சிவகுரு தம்பதிகள், சிவபெருமானை வலம் வந்த களைப்பால் நித்திரை செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது சிவபெருமான் அவர்களது கனவில் தோன்றி, ''அன்பனே!

உனக்கு ஒரு மகன் தேவையா? நூறு பிள்ளைகள் தேவை என்று இச்சிக்கின்றாயா? நூறு பிள்ளைகள் வேண்டும் என்று விரும்பினால் அவர்கள் எல்லோருமே தீர்க்காயுசுடன் இருப்பார்கள். ஒரே ஒரு மகன் வேண்டும் என்றால், அவன் குறுகிய ஆயுளுடன் இருப்பான். நூறு பிள்ளைகள் அறியாமையுடையவர்களாக இருப்பார்கள். ஒரே மகன் வேண்டினால் அவன் சர்வக்ஞனாகவும் எல்லாம் அறிந்தவனாகவும் இருப்பான். உனக்கு நூறு பிள்ளைகள் வேண்டுமா? ஒரே மகன் வேண்டுமா?'' என்று கேட்டார்.

இந்தக் கனவு நிகழ்ச்சியைச் சிவகுரு, தன் மனைவியை எழுப்பி அவளிடத்தில் கூறினார். பிறகு இறைவனை எண்ணித்தியானித்து, "எல்லாம் வல்ல இறைவனே! உன் சித்தப்படியே, யாவும்நடக்கும். ஆகையால் எது நன்மையென்று நீ கருதுகிறாயோ அதனையே செய்வாயாக!'' என்றுவேண்டிக்கொண்டு,மீண்டும் படுத்துக்கொண்டார். இறைவன் தன் அருட்பெருஞ் சோதியைக் காட்டி, தானே அவர்களுக்கு அருமைக் குமாரனாகப் பிறப்பதாகவும், குறுகிய வாழ்நாட்கள் வாழ்வதானாலும், நான் பிறக்கிறேன்—உங்கள் மகனாக!'' என்று அருள் செய்தான். கணவன் மனைவி ஆகிய இருவரும் தமது வேண்டுதலுக்கு இறைவன் அருள் புரிந்தது குறித்து மகிழ்ந்து, இறைவனின் திருக் கோயிலுக்குச் சென்று வணங்கிவிட்டுக் காலடிக்குத் திரும்பிச் சென்றனர். ஆர்யாம்பிகை கருவுற்றாள். இறைவனே சிவகுருவின் சிசுவாக அவதரிக்கத் திருவுள்ளங் கொண்டதால், கருவுற்ற ஆர்யாம்பிகையின் மேனி, இராமனைக் கருவுற்ற கோசலையின் மேனியைப் போலவும், கண்ணனைத் தாங்கிய தேவகியின் மேனியைப் போலவும் ஒளி பெற்று விளங்கியது.

இந்நிலையில் ஆர்யாம்பிகை பத்தாவது மாதத்தில் கலியுகாதி இரண்டாயிரத்து ஐந்நூற்றுத் தொண்ணூற்று மூன்றாம் ஆண்டு, நந்தன வருஷம் வைகாசி மாதச் சுக்கில பக்ஷத்துப் பஞ்சமி திதியில், சூரியன் மேஷத்தில் இருக்கும் ஞாயிறு தினத்தன்று, சந்திரன் புனர்வசுவுடன் கூடிய கர்க்கடக லக்கினத்தில் சூரியன் உதித்து 15 கடிகைக்குப் பின் அபிஜித்

முகூர்த்தம் என்கின்ற நெருங்கிய நண்பகலில், லக்கினத்தில் சுபக்கிரகமான குரு இருக்க, சனி, குஜன், ரவி, சுக்கிரன் முதலிய கிரகங்கள் உச்சமாயிருக்க, புதன் சூரியனோடு கூடியிருக்குங் காலத்தில், ஆர்யாம்பிகை, பார்வதி தேவி ஷண்முகனைப் பெற்றதைப்போல, ஓர் ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள்.

யுதிஷ்டிர சகாப்தம் 2631 என்பது, கலியுகாதி ஆண்டு 2593க்குச் சமமாகும். அதாவது கி. மு. 509 ஆகும். அந்தக் குழந்தையின் ஜனன ஜாதகம் பின்வருமாறு :—

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | சந்திரன் |
| | இராசி | | குரு / ல |
| குஜன் | | | |
| | | சனி | |

இறைவனருளால் தமக்கும் தமது மனைவிக்கும் முதுமை நெருங்கிக் கொண்டிருக்கும் காலத்தில் பிறந்த, அந்தக் குழந்தைக்குரிய ஜாதகருமம் முதலிய சடங்குகளை உரிய காலத்தில் நிறைவேற்றினார்—சிவகுரு. அந்தக் குழந்தைக்குச் '**சங்கரர்**' என்று பெயர் சூட்டினார். ஏனென்றால் மலையாள நாட்டில் குழந்தை

பார்க்க : பிரஹத் சங்கர விஜயம் 32 பிரகரணம்.

பிறக்கும் போது கிரகங்கள் இருக்கும் நிலையையும் நட்சத்திரத்தையும் அனுசரித்தே பெயர் சூட்டுவது வழக்கம். உதாரணமாக, திருவாங்கூர் மன்னர்களின் வரலாற்றில் சுவாதித் திருநாள், மூலம் திருநாள் என்ற பெயர்களைக் காண்கிறோம்.

அவை அந்தந்த மன்னர் பிறந்த நட்சத்திரத்தைக் குறிப்பது போல, சங்கரர் என்ற வடமொழிச் சொல்லி லுள்ள எழுத்துக்களுக்குரிய எண்ணிக்கையில், 5, 2, 1, என்று வருவதால், முதல் பக்ஷத்தில் இரண்டாவது மாதமாகிய வைகாசியில் 5 ஆவது திதியாகிய பஞ்சமி யில், அவர் பிறந்ததைக் கொண்டு பெயர் சூட்டினர்.

வேதமறிந்த பெரியோர்கள், சங்கரரே, சங்கரராக அவதரித்ததாகக் கருதினர். சிவகுருவுக்கு அளவிலாத ஆனந்தம். அவர் இல்லமே குதூகலமாக இருந்தது. உற்றோரும் பெற்றோரும் மகிழச் சங்கரர் சீரும் சிறப்பு மாக வளர்ந்து வந்தார். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்பார்கள். தெய்வமே குழந்தையாகப் பிறந்ததென்றால், அந்தக் குடும்பத் தின் மகிழ்ச்சியை அளவிட முடியுமா? குழந்தை சங் கரர் வளர வளர, அவர் தமது மூன்றாவது வயதுக் குள்ளாகவே தமது குடும்ப மொழியான மலையாள மொழிச் சொற்களைச் சரளமாகப் பேசத் தொடங்கி னார். தந்தையோ வேதங்களையும் உபநிஷதங்களையும் கற்றுத் தெளிந்த நாவலர். வட மொழியில் விற்பன்னர். குழந்தை மனோதத்துவக் கலைஞர்களையே திகைக்க வைக்கும் ஆற்றல், அபூர்வமான சில குழந்தைகளுக்கு இயல்பாகவே தோன்றி வளர்வதுண்டு. அதற்கு அந்தக் குழந்தையின் பிறவியே காரணமாகும். சங் கரர் தெய்வத் தன்மை வாய்ந்த குழந்தையாக இருந்த தால் மற்ற சாதாரணக் குழந்தைகளுக்கு இல்லாத அற்புத ஆற்றல் சங்கரருக்கு இருந்தது. அவரது ஒவ்வொரு செயலிலும் தெய்வத் தன்மை பரிணமித் தது. அத்தகைய ஒரு நிகழ்ச்சி இங்குக் குறிப்பிடத் தக்கதாகிறது.

ஒரு சமயம் சிவகுரு வெளியூர் போய் இருந்தார். அவர் வழக்கமாக வீட்டிலே பூஜை செய்யும் போது

சங்கரர் அவர் அருகிலேயே உட்கார்ந்து அவர் பூஜை செய்யும் முறைகளையும் தூபதீப ஆராதனை செய்து நிவேதனம் செய்யும் முறைகளையும் பார்த்துப் பார்த்துப் பழகியிருந்தார். இறைவனுக்கு நிவேதனம் செய்த பிறகுதான் வீட்டிலே உள்ளவர்கள் உணவருந்துவது என்ற தந்தையின் கண்டிப்பான முறையைச் சங்கரரும் கடைப்பிடித்து வந்தார். பால சங்கரருக்கு அன்று ஒரே பசி. பச்சிளங் குழந்தையான அவர் உள்ளத்தில் இறைவனுக்கு நிவேதனம் செய்து விட்டுத்தான் தமது உணவை அருந்த வேண்டும் என்று தோன்றியது.

உடனே, தம் தந்தையின் தெய்வ வழிபாட்டுக்குரிய அவரது பூஜையறையினுள் நுழைந்தார். இறைவனின் திருவுருவின் மீது மலர்களைத் தூவினார். ஒரு கிண்ணத்தில் தாம் அருந்த வேண்டிய பாலையும், நேந்திர வாழைப் பழத்தையும் இறைவனின் திருவுருவின் முன்னே வைத்து, தம் தந்தை வழக்கமாகக் கூறும் வட மொழித் துதியை நினைத்து, "க்ஷீரம் நிவேதி யாமி! கதலிபலம் நிவேதியாமி! என்று கூறிக் கண்களை மூடித் தியானித்தார். இறைவனின் திருவுருவத்தோடு இறைவியின் திருவுருவும் இணைந்திருந்த அந்த விக்கிரகத்தினுள்ளேயிருந்து பேரொளி ஒன்று தோன்றியது. அன்னை உமையாள் அற்புதச் சிறுவன் அன்புடன் அளித்த நிவேதனப் பொருள்களைக் கடைக் கண்களால் பார்த்தாள். அதற்குள் சிறுவர் சங்கரரும் கண் விழித்தார். பாற் கிண்ணத்தைப் பார்த்தார். பால் இல்லை. பழத்தைப் பார்த்தார். பழமிருந்த இடம்தான் இருந்தது. பாலகரின் கண்களில் கண்ணீர் மல்கின. அவரது பிஞ்சு உதடுகள் துடிதுடித்தன.

சீர்காழியிலே, தம் தந்தையான சிவ பாத இருதயர் குளத்திற்கு நீராடச் செல்ல, கரை மீது இருந்த குழந்தையான திருஞான சம்பந்தர், பாலுக்காக அழுதபோது, பார்வதியம்மையே அந்தப் பாலகருக்கு ஞானப்பால் வழங்கியதைப் போல, ஜகன் மாதாவாகிய பராசக்தியே பால சங்கரருக்கு ஞானப்பாலைப் பொழிந்து ஊட்டினாள். திருஞான சம்பந்தக் குழந்

தையோ ஞானப்பாலைப் பருகியவுடன் தீந்தமிழ்ப் பாசுரங்களைப் பாடியது. பால சங்கரரோ, ஞானப் பாலைப் பருகியுடன் வட மொழியில் இனிய பாடல்களை இயற்றும் தத்துவக் கவிஞரானார். சங்கரரைப் பெற்ற தாயான ஆர்யாம்பிகை தன் அன்பு மகனை வாரி யணைத்து முத்தமிட்டு மகிழ்ந்தாள். வெளியூருக்குச் சென்றிருந்த சிவகுரு வீட்டுக்குத் திரும்பி வந்தார்.

## தேர்த் தட்டில் பால சங்கரர் !

ஒருநாள் உள்ளூர்க் கோயிலில் தேரோட்டத் திருவிழா ! சிவகுரு தம் அன்பு மகனைத்தோளில் ஏற்றி உட்கார வைத்துக் கொண்டு, திருவிழாக் காணச் சென்றார். ஒரே ஜனக் கூட்டம். தேரிலுள்ள உத்சவ விக்ரகத்தைப் பார்த்துக் கொண்டேயிருந்த சிவகுரு தம் மகனை மறந்து இறைவனையே துதித்துக் கொண்டிருந்தார். தமது தோளிலே வீற்றிருந்த அன்பு மகனைக் கூட மறந்து விட்டார். அந்த மெய்ம்மறந்த நிலையிலேயே கண் திறந்து பார்த்தார். தன்னுணர்வு மீண்டது. தோளைத் தடவினார். குழந்தை சங்கரரைக் காணவில்லை. தேரிலுள்ள இறைவனின் திருவடியைப் பார்த்தார். தேர்த் தட்டிலே பால சங்கரர் காணப் பட்டார். அவருக்கு ஒரே வியப்பு ! திகில் ! பக்தி ! அன்பு மகனை அழைத்துக் கொண்டு வீடு திரும்பினார். தமக்குப் பிறந்த பிள்ளை, இறைவனின் அற்புதச் செயல்களையே தம் கண் எதிரிலேயே நடத்துவதைக் கண்ட சிவகுருவுக்கு, அந்த அருமைக் குழந்தையை வேண்டித் தாம் அருந்தவமிருந்ததும், இறைவன் கனவிலே தோன்றி, குறைந்த ஆயுள் உள்ள பரி பூரண ஞானியாகத் தாமே பிறப்பதாகக் கூறியது அவருக்கு நினைவுக்கு வந்தன. அன்பு மகன், அற்புதத் திருக்குமரன், தெய்வத் திருமகன், அற்புதங்களையெல்லாம் செய்யவல்ல அருட் பிறவி, அற்பாயுசில் இறந்து விட்டால்...? அவருக்கு அதே திகில் ! அதே பயம் ! ஏதை எதையோ இழப்பவர்கள் எல்லாம் தம்மைத் துர்ப்பாக்கியசாலிகள் என்று சொல்லிக் கொள்வார்கள். இறைவனையே மகனாகப் பெற்றும், அவனை இழந்துவிட எந்தத் தந்தைக்குத்தான் எப்படித்தான்

மனம் துணியும்? அந்த நிலையேற்பட்டால் தம் இதயமே வெடித்து விடும் என்று எண்ணிய சிவகுரு இரவும் பகலும் அதே வேதனையோடு, தம் அன்பு மகனைப் பார்க்கும்தோறும், அவன் ஆடல்களைக் காணும்தோறும் கண்ணீர் வடிப்பார். ஆயினும் அதனைச் சங்கரர் காணாதவாறு துடைத்துக் கொள்வார். இந்நிலையில், சங்கரருக்கு நான்காவது வயது நடக்கும் போது, சிவகுரு சிவகதியை அடைந்து விட்டார். அன்று முதல் ஆர்யாம்பிகையே, சங்கரர்க்குத் தாயும் தந்தையும் ஆயினள். கணவனை இழந்த துயரத்துடன் இருந்த அவள், தன் மகனை வளர்ப்பதற்காகவே உயிருடன் இருந்தாள். நான்காவது வயதில் தந்தையை இழந்த சங்கரர் இயல்பாகவே அறிவு நிரம்பப் பெற்று, ஐந்து வயதில் வேதம் ஓதும் உரிமையைப் பெறும் பொருட்டு, உபநயனம் செய்யவிக்கப் பெற்றார். பிறகு, சங்கரரைக் குருகுலத்துக்கு அனுப்பி வைத்தாள். ஏழு வயதிற்குள்ளாகவே, சங்கரர் வேதம், வேதாந்தம், வேதாங்கங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், காவியங்கள் ஆகிய யாவற்றையும் கற்றுத் தேர்ந்தார்.

## ஏழ்மை கண்டிரங்கிய ஏந்தல்!

அந்தக் காலத்தில், அந்தணப் பிள்ளைகள் பிரமச்சாரிகளாக இருக்கும்போதே, குருகுலத்தில் இருந்து, குருவுக்குப் பணிவிடை செய்து, வீடு வீடாகச் சென்று பிச்சை யெடுத்து உண்பது வைதீக முறையாக இருந்து வந்தது.

அதுபோலவே, பிஞ்சுப் பருவத்திலேயே தந்தையை இழந்து, மாட மாளிகையை நீத்து, அருமை அன்னையையும் பிரிந்து, குருகுலத்தில் பயின்று வந்த சங்கரர், ஒருநாள் பிச்சைக்குச் சென்றார்.

அன்று துவாதசி. முதல்நாள் ஏகாதசி விரதம். அன்று விரதம் இருந்தவர்கள் மறுநாள் விடியற்காலையிலேயே உணவை அருந்தி விடுவது வழக்கம். சங்கரர், துவாதசியன்று, ஓர் அந்தணர் வீட்டுக்குப் பிச்சைக்குச் சென்றார்.

அயாசகன் என்ற அந்தணன் வீட்டு வாசலில் நின்று, "பவதி பிக்ஷாம் தேஹி!" என்று வேண்டி நின்றார். அந்த வீட்டுத் தலைவியின் காதுகளில் சங்கரரின் வெண்கலக் குரல் கணீர் என்று ஒலித்தது. அந்த வார்த்தைகளின் பொருளில் கூட அவள் மனம் செல்ல வில்லை. இவ்வளவு இனிய குரலுடன் கூவுவது யார் என்று அறிந்து கொள்ளும் ஆர்வத்தோடு வெளியே வந்து பார்த்தாள்.

வாசலிலே சிறுவர் சங்கரர்! அழகு நிறைந்த முகமும், அரும்புப் பற்களும், செம்பவள உதடுகளும் சிவக்க, "பவதி பிக்ஷாம் தேஹி!" என்று கூவுவதைக் கேட்டாள். அந்தச் சின்னஞ்சிறு நெற்றியில் திருநீற் றுப் பூச்சு. மார்பிலே முப்புரி நூல். இடையிலே உள்ள ஆடையின் மீது மான் தோல். தாமரை மலர் போன்ற அவரது கரங்களில் பிக்ஷைப் பாத்திரத்தைக் கண்டாள். 'இவ்வளவு அழகுக் குமரன் போயும் போயும் தன் வீட்டிற்கா பிக்ஷைக்கு வரவேண்டும்?' என்று எண்ணி னாள்.

உடனே உள்ளே ஓடினாள். அவளால் ஓடக்கூட முடியவில்லை. அந்தச் சிறுவனுக்கு ஏதாவது பிக்ஷை யிட வேண்டும்? அவள் வீட்டில் பிக்ஷையிடுவதற்கு ஒரு மணியரிசிகூட இல்லை. அவ்வளவு அஷ்ட தரித் திரம். முதல் நாள் ஏகாதசியில் அவளும் பட்டினியாக இருந்தாள். இன்றும் அவளுக்கு ஏகாதசிதான், துவாதசி யல்ல. அவ்வளவு வறுமை—அவள் வீட்டில்! இருந் தாலும் பிக்ஷைக்கு, தன் வீடு தேடி வந்திருக்கும் அந்த அழகுக் குமரனுக்கு இல்லையென்று சொல்லாமல் ஏதாவது கொடுக்காவிட்டால் அவளது பெண் உள்ளமே வெடித்துவிடும் போலிருந்தது. அவனுக்கு எதைக் கொடுப்பது? அவளது மனம் தடுமாறியது. பசியாக இருந்த அவளது நடை தடுமாறியது. உடல் தடுமாறியது. கையை ஊன்றிக் கொண்டாள். அவள் கையூன்றிய இடத்திலே ஒரே புரை. அதிலே இரண்டு நெல்லிக் கனிகள்!

அத்தனை ஏழ்மை நிலையில் இருந்த போதிலும் அவள் கணவனுக்கு சாஸ்திர நம்பிக்கை விட்டுப் போக

வில்லை. அவன் தூரத்து நதியில் நீராடிவிட்டு, வீடு திரும்பியவுடன் துவாதசிப் பாரணை செய்வதற்கு அவனுக்கும் அவளுக்குமாக இரண்டு நெல்லிக் கனிகளை அந்தப் புரையில் வைத்திருந்தான். அந்தக் கனிகள் அவள் பார்வையில் பட்டன.

நேற்று ஏகாதசி. வாசலில் வந்து நிற்கும் வைதீகச் சிறுவன் நேற்று முழுவதும் உபவாசம் இருந்திருப்பான். தனக்குரிய பங்கான அந்த நெல்லிக் கனிகளில் ஒன்றை அவனுக்குக் கொடுத்துவிட முடிவு செய்தாள். கனியை எடுத்துக் கொண்டு, வாசலுக்கு ஓடி வந்தாள். அங்கே பால சங்கரர் நின்றிருந்தார். நெல்லிக் கனியை அவரது பிட்சைப் பாத்திரத்தில் போட்டாள். அன்னமிட வேண்டிய அன்புக் கை நெல்லிக்கனியைப் போட்டது. அப்போதுதான் அவளுக்கு ஏழ்மை எவ்வளவு கொடியது என்பது விளங்கியது. அவள் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. அவள் நெஞ்சு விம்ம உள்ளே ஓடி விட்டாள்.

அவள் இட்ட நெல்லிக் கனியைப் பார்த்தார்—சங்கரர். அந்தப் பெண்ணின் செயலும் அந்த நெல்லிக் கனியும் உலகத்திலுள்ள ஏழ்மை நிலையை அவருக்கு உணர்த்தின. செல்வ வளம் இருப்பவர்கள் செல்வத்தைத் தானம் செய்வார்கள். நெல்வளம் இருப்பவர்கள் நெல்லைத் தானம் செய்வார்கள். இவள் தன் இதயத்தின் எண்ணத்தையே அல்லவா சொல்லாமல் தானம் செய்து விட்டாள். உடனே, சங்கரர் அந்தக் குடும்பத்தின் ஏழ்மை நிலையை உணர்ந்தார். அந்த உணர்ச்சிப் பிரவாகத்தில் யாரைத் துதித்தால் செல்வ வளம் கொழிக்குமோ அந்தச் செல்வத் திருமகளைத் துதித்தார். அந்தத் திருமகள் தன் கடைக்கண் பார்வையை அந்த ஏழைக் குடும்பத்தின்மீது செலுத்துமாறு வேண்டினார்.

“அன்னையே! திருமகளே! உன் கமலவிழிப் பார்வை கமலநாதனின் மேனிமீது பட்டு விட்டால், அவன் மேனியில் ஒரு சிலிர்ப்பு ஏற்படும். உடனே, உன் திருப்பார்வை வெட்கத்தால் அவனை விட்டுச்

சற்றே விலகும். அத்தகைய கருணைப் பார்வையை இந்த ஏழையர்கள் மீது சிறிது செலுத்தலாகாதோ?"

"தண்ணீர்த் தாகத்துடன் விண்ணிலே பறந்து செல்லும் சாதகப் பறவையின் கண்டத்துவாரத்தின் வழியாக மழை நீர் தானுகவே உள்ளே சென்று அதன் தாகத்தைத் தணிப்பது போல, உனது கருணை கடாட்சம் என்ற அருள் மழையினை, வறுமையால் வாடும் இவர்களுக்கு நீயாகவே வலிய வந்து பொழியக் கூடாதா? ஒரு வேளை இவர்கள் தமது முந்திய பிறவி களில் தீவினைகளைச் செய்திருக்கலாம். எனினும் அந்தத் தீயை அணைக்க அந்த மழையை அடித்துச் செல்லும் தென்றலும் உன்னிடமே இருக்கிறதே! என்றெல்லாம் அன்புள்ளம் நெகிழத் தீன......... தயாளரான சங்கரர் சாதுரியமாக வடமொழியில் பாடி ஞர்.

வாடிய பயிரைக் கண்டு வான்மழை பொழிந்தாற் போல அவர் வடமொழியில் கனிவாகப் பாடிய திரு மகளின் துதிப்பாடல்தான் கனக தாராஸ்தவம் என்று இன்றும் வழங்கப்படுகிறது. கருணையிலே தோன்றிய கவிதையைக் கேட்ட திருமகளின் அன்பு இதயமும் கனிந்தது. உடனே அவளருளால், சங்கரர்க்கு நெல்லிக் கனியை ஈந்த அன்புடையாள் வீட்டில், பொன்னுலான நெல்லிக் கனிகள் மழை போலப் பொழிந்தன. அது கண்ட அந்த மனைத் தலைவி சங்கரரை மனமார, வாயார வாழ்த்தினுள்.

சங்கரர் குருகுலத்துக்குத் திரும்பினுர். எட்டு வய துக்குள் வேதங்களையும் சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்ததால், குருகுல வாசம் முடிவுற்றது. சங்கரர் வீடு நோக்கி வந்து கொண்டிருந்தார்.

ஆல்வாய்ப்புழை நதிக்கரை வழியாக வந்து கொண்டிருந்த சங்கரர், நதிக்கரையில் மயங்கிவிழுந்து கிடந்த தம் தாயைக் கண்டார். ஆற்றுக்குக் குளிக்க வந்த, ஆர்யாம்பிகை நடக்கவும் சக்தியற்று மயங்கி விழுந்து கிடப்பதைக் கண்ட சங்கரர், தம் அருமைத் தாயின் அருகே சென்று, தம் மடியில் அவள் தலையை வைத்துக் கொண்டு முகத்தில் தண்ணீரைத் தெளித்

தார். அவள் கண் விழித்துப் பார்த்தாள். தம் அருமை மகன் மடியிலே தான் தலை வைத்துப் படுத்திருப்பதை உணர்ந்தாள். பிறகு, தம் தாய் நதிக்கு வந்து குளிக்க முடியாமையை உணர்ந்த சங்கரர், அந்த நதியைத் துதித்தார். உடனே, அந்த நதியானது தனது போக்கை மாற்றிக் கொண்டு, சங்கரரின் வீட்டை யொட்டினாற் போலச் செல்வதாயிற்று. இன்றுங்கூட, காலடியின் அருகே, பழைய நதியின் படுகை தனியாகக் காணப்படுகிறது. அதன் பிறகு சங்கரர் தம் தாயை யும் அழைத்துக் கொண்டு வீடு சென்றார்.

மறு நாளிலிருந்து தம் தாய் ஆற்றுக்குச் செல்லும் போதெல்லாம் சங்கரர் அவளுடன் துணையாகத் தாமும் செல்வதை வழக்கமாகக் கொண்டார். ஆர்யாம் பிகைக்கோ, தன் மகனுக்குத் திருமணம் செய்து பார்க்க வேண்டும் என்ற ஆசை எழுந்தது. ஒருநாள் அந்த எண் ணத்தைத் தன் மகனிடம் தெரிவித்துக் கொண்டே ஆற்றுக்கு நடந்து சென்று கொண்டிருந்தாள்—தாய்.

இந்நிலையில் அகஸ்தியர், நாரதர் போன்ற சித்தர் கள், அந்தண வடிவு தாங்கி, சங்கரரைச் சந்தித்து, வணங்கி, "ஐயனே! தங்களது அவதார காரியத் தைத் தொடங்கக் காலம் நெருங்கி விட்டது!" என் றனர்.

"காலம் நெருங்கி விட்டது" என்ற வார்த்தைகள் மட்டுமே சங்கரரின் வயோதிகத் தாயின் காதுகளில் விழுந்தன. அவளுக்கோ, அந்த வார்த்தைகள் எதையோ நினைவுபடுத்தின. விருஷாசலர் தனக்கு அற்ப ஆயுளுடைய மகனையல்லவோ நல்கினார்! அதற்குத்தான், 'காலம் நெருங்கி விட்டது' என்று அந்த முதியவர்கள் கூறுகிறார்களோ என்று எண்ணி னாள்—அந்த மூதாட்டி. அருமைக் கணவன் இறந்து விட்டார். அருமை மகனையும் இழந்துவிட வேண்டுமோ? என்று எண்ணிய அவள் கண்களில் கண்ணீர் மல்கியது. அதைக் கண்டார் சங்கரர். அவர் கள் இருவரையும் அந்நிலையில் கண்ட அகஸ்தியர், தாயின் மனம் தெளிவு பெறும் பொருட்டு, "இல் வாழ் வுக்கு இவர் உரியவரல்லர்; துறவறமே இவரால்

பெருமையுறும்" என்று கூறிவிட்டு மறைந்தார். அதைக் கேட்ட ஆர்யாம்பிகை ஓவென்று அழுதாள். சங்கரர் தம் தாயைச் சமாதானப்படுத்த முயன்றார்.

"அம்மா, நான் உன்னை விட்டுப் போய்விடப் போகிறேனே என்று கவலைப்படுகிறாய்? இதற்காக நீ ஏன் அழ வேண்டும்? நான் அற்பாயுளில் போய் விடுவேன் என்று இறைவனே அருளியிருக்கும் போது, அதை மாற்றத்தான் முடியுமா? அதற்காக நீ அழுவதால் என்ன பயன்? கடவுளின் ஆணையை யார்தான் மாற்ற முடியும்? அம்மா! இதற்கு முன்பு உனது முந்தைய பிறவிகளில் எத்தனை மக்களை ஈன்றெடுத்தாயோ? அவர்களுக்கும் உனக்கும் இப்பொழுது ஏதாவது தொடர்பிருக்கிறதா? மனித உறவுகள் எல்லாமே இப்படிப்பட்ட அழிவுத் தொடர்புகள்தான். அம்மா! நிராந்தரமான ஒரு பொருளுடன் ஏற்படுத்திக் கொள்ளும் உறவல்லவோ உறவு! அதுவல்லவோ நிலையானது!" என்றார் சங்கரர். ஆர்யாம்பிகை தன் மகன் பேசுவதை ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தாள். அவர் தமது இனிய குரலில் மேலும் தொடர்ந்து பேசலானார்.

"தாயே, நுங்கும் நுரையுமாகப் பெரு வெள்ளம் பொங்கிப் பெருகும்போது, அதிலே எத்தனையோ நீர்க் குமிழிகள் தோன்றும். அவைகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டிருக்கும். நீராலும் காற்றாலுமான அந்தக் குமிழிகள் எவ்வளவுதான் அழகாக இருந்தாலும் அதிக நேரம் நீடித்து நிலைப்பதில்லை. அவை வெள்ளத்திலே வெடித்துக் கலந்து விடுகின்றன. அது போன்று கால வெள்ளத்தில் தோன்றிய குமிழிகள் தானே—நாம்" என்றார் சங்கரர்.

ஆர்யாம்பிகை திகைத்தாள். அன்பு மகன் கூறும் வார்த்தைகளின் உட்பொருளை அவளால் உணர்ந்து கொள்ள இயலவில்லை! "மகனே, நீ ஏதேதோ பேசுகிறாயே! உனக்குக் கல்யாணம் செய்து, நான் கண் குளிரக் காண வேண்டாமா?" என்றாள். அவள் பேதை நெஞ்சிலேதான் எத்தகைய ஆசை!

திருமணத்தைப் பற்றித் தமது தாயார் பேசும் போது, சங்கரர், சந்நியாசியாவதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். தனக்காகவோ, தம் மனைவி, குழந்தை, குடும்பம், வீடு, வாசல், நாடு, நகரம் என்ற தனி வாழ்வுக்காகவோ தம்மை அர்ப்பணிக்காமல், உலக நலனுக்குத் தம்மை அர்ப்பணிக்க எண்ணிக் கொண்டிருந்தார்—அவர்.

தாயின் அனுமதியின்றித் துறவு பூண அவர் விரும்பவில்லை. அவளது உத்தரவை எப்படிப் பெறுவது? என்று சிறிது யோசித்தார். யோசனை தோன்றியது.

“அம்மா, நதியிலே குளிக்கப் போவோமா?” என்றார். தாயும் மகனும் நதியை அடைந்தனர். தண்ணீரில் இறங்கிய சங்கரர், நீரில் மூழ்கி மூழ்கி எழுந்தார். திடீரென்று “அம்மா! அம்மா!” என்று ஒரு கூக்குரல்.

“என்னடா சங்கரா, என்ன என்ன?” என்று கத்தினாள்—ஆர்யாம்பிகை. சப்தம் வந்த திசையைப் பார்த்தாள்.

அங்கே அவள் கண்ட காட்சி, அவள் உடலை உலுக்கியது. ஒரு முதலை சங்கரரின் காலைக் கௌவிக் கொண்டிருந்தது. அதன் கூரிய பற்கள் சங்கரரின் கால்கள் ஒன்றில் பதிந்திருந்ததைக் கண்ட ஆர்யாம்பிகை கூக்குரலிட்டுக் கதறினாள். ஊர் மக்கள் கூடினர். முதலையை விரட்ட அவர்கள் எவ்வளவோ முயன்றனர். தான் பெற்ற பிள்ளை தன் கண் எதிரிலிலேயே முதலையின் வாயில் சிக்கித் தவிப்பதைக் கண்ட அவள் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது. அப்போது சங்கரர், “அம்மா! இப்போது நீ மனம் வைத்தால் நான் இந்த முதலையின் மரணப் பிடியிலிருந்து தப்பி விடுவேன்” என்றார்.

“அவலமான நான் எப்படியடா உன்னைக் காப்பாற்றுவேன்?” என்று கேட்டாள்—தாய்.

சங்கரர், தம் மனவுறுதியால் தமது காலை முதலையின் வாயில் பலமாக ஊன்றிக் கொண்டு, “தாயே!

துறவியாகிப் பிறவிப் பயன் அடையக் கருதிய என்னை எமனே அழைக்க வந்து விட்டான். அதனால்தான் தண்ணீரில் இப்படி உயிர்விட நேர்ந்துள்ளது. இப்பொழுது நீ அருள் கூர்ந்து, "மகனே துறவு பூண்க!" என்று ஆணையிட்டால் நான் உயிர் வாழ்வேன்" என்றார்.

ஆர்யாம்பிகை வேறு வழியின்றி, "மகனே நீ சந்நியாசியாகவோ, ஆண்டியாகவோ உலகத்தின் எந்த மூலையிலாவது உயிருடன் வாழ்ந்தால் போதுமடா மகனே!" என்று கண்ணீர் விட்டுக் கதறினாள்.

உடனே சங்கரர் துறவறத்துக்கு உரிய மந்திரங்களைக் கூறிச் சூரணு நதியில் மூழ்கி எழுந்தார். அப்போதே, அவருடன் இகலோக உறவுகள் மூழ்கின. அவர் துறவியாக எழுந்தார். அவரது காலைப் பற்றி இருந்த முதலையும் நற்கதியை அடைந்தது.

அதன் பிறகு சங்கரர், தமக்கெனத் தனி வாழ்வற்ற பிறர்க்குரியாராகி விட்டார். "எந்த உயிரும் என்னைக் கண்டு அஞ்சாத நிலையை அடைய வேண்டும்" என்ற ப்ரைஷ மந்திரத்தைக் கூறித் துறவியாகி விட்டார்—சங்கரர்.

சங்கரர் நீரில் மூழ்கி எழுந்தவுடன், ஒரு கந்தர்வன் வெளிப்பட்டான். முதலையைக் காணவில்லை. அவன் சங்கரரை நோக்கி, "சுவாமி! நான் மங்கையர் இன்பத்திலும் மதுப் பழக்கத்திலும் ஆழ்ந்து இன்னிசை கேட்டு இன்புற்றிருக்கும் ஒரு நாளன்று, அவ்வழியில் துர்வாச மாமுனிவர் வந்தார். நான் மயக்கத்திலும் மங்கையர் போதையிலும், மது மயக்கத்திலும், இருந்ததால், அந்தத் தவ முனிவரை மதியாது, மரியாதை செலுத்தாது இருந்து விட்டேன். கோபமே உருவான துர்வாச முனிவர் வெகுண்டார். முதலையாகும்படி என்னைச் சபித்தார். நான் எப்பொழுது சாப விமோசனம் உண்டாகும் என்று என் தவற்றை உணர்ந்து அவரது திருவடிகளில் பணிந்து கேட்டேன். காலடியிலுள்ள ஆலவாய்ப்புழையில் போய், நீ முதலையாகக் கிடப்பாயாக. முழுமுதற் பொருள் மனிதப் பிறவியெடுத்து அங்குக் குளிக்க வருவார். அவரது திருவடியைப் பற்

றியபின் உனக்கு விமோசனம் உண்டாகும் !'' என்று சொன்னார். கோபம் உள்ள இடத்தில் குணம் இருக்கும் என்பதை உணர்ந்த நான் முதலையானேன். உமது திருப்பாதத்தைப் பற்றினேன். எனக்கும் சாபத்திலிருந்து விடுதலை கிடைத்தது உமக்கும் சம்சார பந்தத்திலிருந்து விடுதலை கிடைத்தது. இரண்டுமே என் பாக்கியம்தான்'' என்று கூறி விண்ணிலே மறைந்தான்—அந்தக் கந்தர்வன்.

## ஊர் நீங்குதல்

சூரணு நதியில் சலசலப்பு அடங்கியது. ஆர்யாம்பிகையும் சங்கரரும் நதிக்கரை வழியாக நடந்து கொண்டிருந்தனர்.

''மகனே, வீட்டுக்குப் போகலாம், வா !'' என்றாள்—தாய்.

''தாயே சற்று முன்பு, முதலை என் காலைப் பற்றிய போது எனக்குச் சந்நியாசமளித்துக் காத்த நீ இப்போது என்னை வீட்டுக்கு வரச் சொல்கிறாயே ! துறவிக்கு வீடு ஏது ? சந்நியாசிக்கு ஒரு வீடில்லை. உலகமே பெரு வீடு. மோட்சமே பெறும் வீடு. அவனுக்குத் தாய் ஒருத்தியல்ல. பிச்சையிடுகிற பெண்கள் எல்லோருமே அவனுக்குத் தாய் ! உபதேசம் செய்பவர்கள் அனைவருமே தந்தையர்கள் ! சீடர்களே பிள்ளைகள். ஆனந்தம் என்பது தன்னிலே அடங்கி இன்புறுவதுதான்; இனி எனக்குத் திருமணம், இல்வாழ்க்கை, ஏன் ? நான் சாந்தியை மணந்து விட்டேன். இனி என் உள்ளத்தில் விம்மும் அன்பு மணத்தைத்தான் உலகமெங்கும் பரப்பக் கடமையுடையவன்'' என்றார்—சங்கரர்.

''மகனே ! உனக்காகத் தவமிருந்து, உன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்ற நான் உனக்குத் தாயல்லவா ? என்னை எப்படியடா நீ துறக்க முடியும் ?'' என்று அவள் உள்ளம் விம்மியது.

''பெண்கள் யாவருமே எனக்குத் தாயைப் போன்றவர்கள் ! என்னைப் பெற்று வளர்த்ததாக நீ உரிமை கொண்டாடும் பெருமை பெற்ற நீ, மற்ற பெண்ணினத்

தாரைவிட அதிகமாக அன்பு செலுத்தக் கடமைப் பட்டவள். பிடிவாதம் செய்து அடம் பிடிக்கும் குழந்தைக்கு, அது விரும்பும் எந்தப் பொருளையும் தந்து மகிழும் தாயைப் போல, எனது சந்நியாச விருப்பத்தை நீயே பூர்த்தி செய்ய வேண்டும். நீ எனது தாய்தான்! உன் தாய்மையன்பைச் செலுத்த உனக்கு என்னைத் தவிர வேறு குழந்தைகளும் இல்லையென்பது உண்மைதான். என்னையன்றி ஒரு துணையுமற்ற உனக்கு நான் ஆற்றவேண்டிய கடமைகளைப் போலவே, இந்த ஜகத்துக்கு நான் ஆற்ற வேண்டிய கடமைகள் ஏராளமாக உள்ளன. அதற்கு இப்போதே என்ன அவசரம் என்பாய்! நான் இப்போது எனக்கு மட்டும் சந்நியாசம் கேட்கவில்லை. நீ என்னைத் துறந்தால்தான் உனக்கும் பாச பந்தங்கள் விலகும், பெறுதற்கரிய ஒரு குழந்தையைப் பெற்றதற்காகப் பெருமைப்படும் நீ, அத்தகைய அன்புக் குழந்தையை உலகத்துக்குத் தியாகஞ் செய்து அதனுல் ஏற்படும் புகழைப் பெறுவாயாக” என்ருர் சங்கரர்.

சங்கரர் கூறிய வார்த்தைகள் அவள் நெஞ்சை இருகூருகப் பிளப்பது போல இருந்தன. “மகனே! நீ இந்த ஊரிலேயே சந்நியாசியாக இருக்கக் கூடாதா? உன்னைப் பெற்று வளர்த்த உன் தாயருகே இருக்கக் கூடாதா? நான் கண்ணை மூடி விட்டால் எனக்குரிய ஈமக்கடன்களைச் செய்பவர் யார் மகனே யார்? உன் மூதாதையருக்கு, நீத்தார் கடனைச் செய்வதுதான் யார்? இதற்காகவோ, உன்னை நான் தவமிருந்து பெற்றேன்” என்று அலை அலையாகக் கேள்விகளைக் கேட்டாள்—தாய்.

அதைக் கேட்ட சங்கரர், “தாயே! நான் இல்லறத்தில் ஈடுபடவில்லையே என்பது உனது வருத்தமாக இருக்கலாம். அதற்காக நீயும் கவலைப் படலாம். ஒருவன் நியமம் வழுவாது உத்தம சந்நியாசியாக வாழ்ந்தாலே அவனது மூதாதையரின் இருபத்தோரு தலைமுறையினர் நற்கதியடைவார்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. பாமர மக்களுக்குத்தான் இல்வாழ்க்கை தேவை! இந்த நாடு முழுவதும் வேத நெறியைத் தழைத்தோங்கச் செய்வது என் கடமை

யாகவுள்ளது. நான் மெய்யான சந்நியாசியாக இருந்து இந்தப் பணிகளைச் செய்ய நீதான் எனக்கு ஆசி கூற வேண்டும். உன்னை நிராதரவாக விட்டு விட்டுப் போய் விடுவதாக என்னைப்பற்றி எண்ணிவிடாதே. கடைசியாக இந்த உலகத்திலிருந்து நீ விடுதலை பெறும் சமயத்தில், நினைவிழக்கும் முன்பு என்னை நினைத்துக் கொள்! அப்போது நான் இந்த நாட்டின் எந்த மூலையில் இருந்தாலுஞ்சரி, எத்தகைய முக்கிய கடமையைச் செய்து கொண்டிருந்தாலும் சரி, எந்த அகாலமாக இருந்தாலும் சரி, அவற்றை எல்லாம் பொருட்படுத்தாமல் நீ நினைத்தவுடனேயே உன்னிடம் வந்து விடுவேன். கடைசி விநாடிகளில் உன்னை என் மடியில் இருத்தி, உனக்கு உயர்கதி கிடைக்கச் செய்வேன். உனக்கு ஒரே மகனாகப் பிறந்ததற்காக, நானே உன்னைத் தகனமும் செய்வேன்'' என்று சங்கரர் உணர்ச்சி வயப்பட்டுக் கூறினார்.

அன்புள்ளங்கள் இரண்டிலும் உணர்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்ததுபோலவே ஆலவாய்ப்புழையிலும் நதி வெள்ளம் பெருக்கெடுத்தது. அந்த வெள்ள நீர், கரையோரத்திலிருந்த கண்ணனின் திருக்கோயிலினுள்ளேயும் புகுந்தது. சங்கரர் அந்தக் கோயிலுக்குள் ஓடினார். தண்ணீரில் மூழ்கவிருந்த கண்ணனின் விக்ரகத்தை எடுத்துக் கொண்டு வெளியே வந்து வேறொரு இடத்தில் அதனைப் பிரதிஷ்டை செய்தார். தம் அருகே நின்றிருந்த தாயை நோக்கி, ''அம்மா! இனிமேல் இந்தக் கோபாலன்தான் உன் பாலன். உன்னைவிட்டு இவன் போக மாட்டான். இவனை நீ பார்த்துக் கொண்டே யிருந்தால் இவன் உன்னைப் பார்த்துக் கொள்வான். பிறகு, பார்ப்பவர், பார்க்கப் படுபவர், பார்வை யாவுமே ஒன்றாகிவிடும். நான் இயல்பாகத் துறவு பூண்டேனாயினும் குரு பரம்பரையில் உயர்ந்துள்ள ஒரு மகானைத் தேடிச் சென்று அவரிடத்தில் நான் முறைப்படி சந்நியாசம் பெற வேண்டும். நான் அவரை அடைந்து நல்வாழ்வு பெற நீதான் ஆசி கூற வேண்டும்'' எனறு வேண்டினார். அதற்குள் அந்த ஊரிலிருந்த அந்தணர்கள் பலர் அவரிடம் வந்து, 'கலியுகத்தில் துறவறம் சிறப்புறாது' என் றுகூறி

அவரைத் தடுத்தனர். சங்கரர் அவர்களுக்கு சுருதி, யுக்தி, அனுபவம் என்ற மூன்ருலும் தக்க சமாதானம் கூறிவிட்டுத் தம் தாயிடமும் மற்றவரிடமும் விடை பெற்ருர். ஆருயிர் மகனை உலகம் உய்ய அனுப்பிய அன்புத் தாயின் கண்களில் கண்ணீர் மல்கியது. தியாகத்தின் வழியே அமைதியைக் கண்டாள்—ஆர்யாம்பிகை. கண்ணன் சிலையைக் கண்டாள்; அந்தச் சிலை புன்முறுவல் பூத்தது.

## குரு தரிசனம்

காலடியிலிருந்து புறப்பட்ட சங்கரர், நடந்து கொண்டே இருந்தார். காடுகள், மலைகள், ஆறுகள், நகரங்கள் முதலியவற்றைக் கடந்து நருமதை நதிக் கரையை அடைந்தார். நதியிலே பெருவெள்ளம் பெருக்கெடுத்தோடியது. அந்த நதியின் கரையிலே ஒரு பெரிய மலைக் குகையைச் சங்கரர் கூர்ந்து கவனித்தார். அந்த மலைக் குகையினுள்ளே **கோவிந்த யோகீந்தரர்** தவம் புரிவதை உணர்ந்தார். "இவ்விடத்தே ஆசாரியரை அடைக!" என்று அசரீரி எழுந்தது. சங்கரர் குகையருகே சென்று, அதனை மும்முறை வலம் வந்து இரு கைகளையும் கூப்பிக் கொண்டு குகை வாயிலை வணங்கினுர். யோகத்திலிருந்து வெளிவந்த கோவிந்த பகவத்பாதர், "நீ யார்?" என்று கேட்டார். அந்தக் கம்பீரமான வெண்கலக் குரல், குகைச் சுவர்களில் மோதி, சங்கரர் செவிகளில் பாய்ந்தது. அவர், "இங்கே வந்திருக்கும் நான், **மண், நீர், தீ, காற்று, வான்** முதலிய நிலையற்ற, நிலமும் இதர பூதங்களும் புலனும் சேர்ந்த ஓர் தொகுப்பில்லை. அறிவு ஆழ்ந்திருக்கும் போது ஒளிரும் இரண்டறியாத ஒரே பொருள். சுத்த சிவமே நான்" என்ற பத்துச் சுலோகங்களால் தம்மை அறிமுகம் செய்து கொண்டார். வந்திருப்பது யார் என்று குகைவாசிக்கு நிச்சயமாகி விட்டது. சங்கரரின் நிர்வாண சதகத்தைக் கேட்ட கோவிந்த பகவத் பாதர், "துறவியல் செல்வமே! யோக நிஷ்டையில் இருந்த நான், இந்நிகழ்ச்சி நிகழும் என்பதை உணர்ந்தே வெளியே வந்தேன். நாராயணர் மரபில் வந்த குரு பரம்பரை இனி

உன்னால் விளக்கம் பெறும். சுகப்பிரமம் அருளிய பிரமானுபவத்தைக் கௌடபாதர் எனக்கு அருளிய வாறு நானும் உனக்குச் சொல்லிக் காட்டுவேன். சொல் இறந்த பொருளை உணரவே வேண்டும். அதற்குரிய பக்குவம் உனக்கு இருப்பதை உணர்ந்தேன்" என்று கூறினார். அவரது வடிவமும் பேச்சும் சங்கரரைப் பெரி தும் கவர்ந்தன. சங்கரர் அவரை வணங்கினார். அவர் சங்கரருக்கு முறைப்படி ஞானதீட்சை அளித்து துறவு தந்து, மகா மந்திர உபதேசமும் செய்தார். குருவும் சீடரும் யோக நிஷ்டையிலேயே சில காலம் இருந்தனர். நர்மதை நதிக்கரை ஆசிரமங்களிலிருந்த சில தவச் செல்வர்கள், புதிய இளம் துறவியைக் கண்டு மனம் மருண்டனர். அப்பொழுது மழைக்காலம்.

## கமண்டலத்தில் அடங்கிய நர்மதை

நர்மதையிலே நதி நீர் வெள்ளமாகிக் கரைபுரண் டோடியது. அதனால் நதிக்கரையிலிருந்த ஆசிரமங்கள் அழியும் நிலையிலிருந்தன. எண்ணற்ற உயிர்கள் வெள்ளத்தால் அழிகின்றதே என்று முனிவர்கள் எல் லோரும் வருந்தினர். அப்பொழுது யோக நிஷ்டையிலி ருந்த சங்கரர் வெளியுலகப் பார்வை பெற்று நர்மதைப் பெருக்கைக் கண்டார். உயிர்கள்பால் எழுந்த தண் ணருங் கருணையால், தமது கமண்டலத்தினை ஆற் றோட்டத்தின் எதிரே வைத்தார். என்ன விந்தை ! நுங்கும் நுரையுமாக விரைந்த பேரலைகள் சுருண்டு சுருண்டு அந்தப் பாத்திரத்துள் புகுந்தன. மந்திர மகிமையால் அந்த வெள்ளம் முழுவதும் சங்கரரின் கமண்டலத்தினுள் அடங்கியது. இந்த அற்புதக் காட்சியைக் கண்ட சாதுக்கள் சங்கரரைத் துதித்துப் பாராட்டினர்.

மழைக் காலத்தில் தவச் செல்வர் இடம் பெயர்தல் ஆகாது என்ற விதிக்கு இணங்க அங்கிருந்த சங்கரரை நோக்கி, குருவாகிய கோவிந்தர், "ஐய ! எமது பரமா சாரியர் ஆகிய வியாச முனிவர், நருமதைப் பேராற் றின் வெள்ளத்தை ஒரு சிறு கமண்டலத்தினுள்ளே அடக்கவல்ல பால சந்நியாசியே எனது வேதாந்த

சூத்திரத்திற்குப் பாஷ்யம் செய்ய வல்லவன்'' என்று என்னிடம் கூறியிருக்கிறார். அந்தக் குருமரபு உலகிலே விளக்கம் பெற வருகின்ற அப் புண்ணியன் விரைவில் நர்மதைக் கரைக்கு வருவான் என்று கூறிய அவரது திருவாக்கு இப்பொழுது பலித்து விட்டது. ஐய! நீரே நமது சித்தாந்தத்தை விளக்க வேண்டும்'' என்று கூறினார்.

குருவின் திருவருளையும் கட்டளையையும் ஏற்ற சங்கரர், குன்றின் மேலிட்ட விளக்கானார். செங்காவி யுடை பூண்டார். அத்வைதம் என்ற அரும்பெருஞ் செல் வத்தைக் கோவிந்த பகவத் பாதர், ஆதி சங்கரருக்கு வழங் கினார். அகந்தையைக் குறிக்கும் சிகையையும் சங்கரர் மழித்துக் கொண்டார். மனம், வாக்கு, காயம் இவற் றைத் தண்டித்து வயப்படுத்தியதற்கு அடையாள மாக, கையிலே தண்டத்தைத் தாங்கினார். சங்கரரை அந்தக் கோலத்தில் கண்ட கோவிந்த பகவத் பாதர், "சங்கரா! பௌதிக மடத்தில் நாம் பிரிவோம். நீ காசிக்குச் செல்வாயாக. அங்கு அத்வைதத்தைப் போதிப்பாயாக. வியாசர் அருளிய பிரம்ம சூத்திரமும் அந்தத் தத்துவத்தைத்தான் அவலம்பிக்கிறது என் பதை விளக்குவதற்காகப் பாஷ்யம் எழுதுவாயாக. எனது குருமார்கள் என்னைப் பணித்த வண்ணம் இந்தப் பணியை நான் உன்னிடம் ஒப்படைக்கிறேன்'' என்று கூறி, கோவிந்த பகவத் பாதர் பதரிகாசிரமம் சென்று விட்டார். ஆதி சங்கரருக்கு, கோவிந்த பகவத் பாதர் அருளிய அத்வைத தத்துவ வித்தை என்பது என்ன என்பதை நாம் இன்றைய சூழ்நிலையில், ஆதி சங்கரரின் கருத்திற்கேற்ப ஆராய்வோமாக.

## அத்வைத தத்துவம்

வேதங்களிலும் உபநிஷதங்களிலும் பிரம்ம சூத் திரத்திலும் பகவத் கீதையிலும் சொல்லப்பட்டிருக்கும் தத்துவமே, அத்வைத தத்துவமாகும். பதினெண் புராணங்களும் இதிகாசங்களுங்கூட இந்த அத்வைத தத்துவத்தைப்பற்றி நிறையக் கூறுகின்றன. இவை தவிர எத்தனையோ தொன்மையான நூல்களும் இருக்

கின்றன. கௌடபாதர் 'மாண்டூக்கிய உபநிஷதக் காரிகை' யொன்றை முழு அத்வைத நூலாக இயற்றி யுள்ளார். அத்வைத தத்துவத்தை அழகாகவும், தெளி வாகவும், எளிதாகவும், புரியும் விதத்திலும், எதிர் வாதாடுவோரும் ஏற்குமாறு, உண்மையாக, விளங்கும் படிபரவச் செய்த பரம குருவாக விளங்கியவர்—ஆதி சங்கரரே யாவர்.

இந்தத் தத்துவ விளக்கங்கள் யாவற்றையும் சங் கரர் வடமொழியில்தான் விளக்கியுள்ளார். சுருக்கமாக அத்வைத தத்துவம் 'அது—நீ' என்பதேயாகும். அதனை வடமொழியில் தத்—த்வம் என்கின்றனர். மொத் தத்தில் 'தத்துவம்' என்ற சொல்லே அத்வைதம் தான்.

இதில் அது என்பது என்ன? அதுதான் இந்தப் புவனத்துக்கெல்லாம் ஆதாரமான மெய்ப்பொருள்; மூலப் பொருள். நீ என்பது ஜீவர்களான நம்மைக் குறிக் கும். முதலில் அதைப் பார்க்கலாம். பரம்பொருளான அதை அத்வைத நூல்கள் பிரம்மம் என்று குறிக்கின்றன. பிரம்மம் என்றால் பெரியது என்று பொருள்.

எல்லாவற்றுக்குமே காரணம் இருக்க வேண்டு மல்லவா? அந்தக் காரணத்தையே பரம்பொருளாகச் சொல்கிறோம். அதுவே சொல்; அதுவே செயல்; அந்தப் பரம்பொருளை, நாம் 'எங்கும் நிறைந்திருப்பது', 'எல்லா வற்றையும் அறிந்திருப்பது', 'எப்போதும் இருப்பது' என்கிறோம். எப்போதுமிருப்பதாகவும் எல்லாமாகவும் எங்குமாகவும் அந்தப் பொருள் இருக்க வேண்டுமானால் அதற்குக் குறிப்பிட்ட ஒரு உருவமோ, அடையாளமோ, ஒரு குணமோ, ஒரு பெயரோ நிலையாக இருக்க முடியுமா? எனவே அத்தகைய பரம்பொருளை நிர்க் குணப் பிரமம் என்கிறது—அத்வைதம். அது இப்படிப் பட்டது என்று வருணிக்க முடியாதது. ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டால்தானே வருணிக்க முடியும்?

வேதங்களும்கூடப் பரப்பிரம்மத்தை 'இவ்வாறு அமைந்துள்ளது' என்று கூற முடியாமல் 'இவ்வாறு இல்லாதது' என்று விளக்குகின்றன. அது ஸ்தூல

மல்ல; சூட்சுமமுமல்ல; குட்டையல்ல; நெட்டையல்ல என்றெல்லாம் கூறுகின்றனவே ஒழிய, இத்தன்மை யானதுதான் என்று நிச்சயித்துக் கூறவில்லை. அத்த கைய பரம்பொருளை ஒருவன் தனக்குத் தானுகவே அறிந்து அனுபவித்தால் ஒழிய, அதன் தன்மையை அறிய இயலாது என்பது அத்வைதம்.

அத்தகைய பரம்பொருளை அனுபவிக்க வேண்டிய ஜீவன் யார்? எங்குமாகி, எல்லாமும் ஆகி உள்ளது பிரமம் எனும்போது, அது ஜீவனுகவும் ஜீவனின் உள்ளே ஜீவாத்மாவாகவும் அதுவே உள்ளது ஜீவாத்மா, பரமாத்மா என்று பல ஆத்மாக்கள் கிடை யாது. இரண்டும் ஒன்றேதான். இரு வேறு பொருள் கள் அல்ல என்பதே அத்வைதம். "பிரமம் ஒன்றே மெய்ப்பொருள். ஜீவனும் அஃதன்றி வேறல்ல" என் கிருர் ஆதிசங்கரர்.

ஐம்பூதங்களின் சேர்க்கையும் ஐம்புலன்களின் தொகுப்புமாகிய அழியும் உடலைத் "தான்" என்று எண்ணுவதே தவறு என்கிறது-அத்வைதம். ஜீவனைப் பற்றிய இத்தகைய அத்வைத விளக்கம் அறிவுக்குப் பொருந்திய அற்புத விளக்கமாகும். நடை முறையிலும் கூட உடலால் நாம் ஒரு வகைச் சூழலில் இருந்தாலும் அந்த நிலையை மறந்து மானசீகமாக வேறெங்கோ ஆழ்ந்து விடுகிறேமல்லவா?

உடல் என்பது நான் அல்ல; மனம்தான் 'நான்' என்று எண்ணத் தோன்றுகிறது. அப்படியானுல் ஆழ்ந்த நித்திரையின்போது அந்த மனமும் இயங் குவதில்லையே? எனினும் விழித்தெழும்போது "ஆனந்த மாகத் தூங்கினேன்" என்று சொல்லும் நமது சுகானு பவத்தை ஏதோ ஒன்று அனுபவித்துச் சொல்ல வைக் கிறதல்லவா? அது என்ன? உடலும் மனமும் இயக்க மற்றபோது காட்சி மாத்திரமாக விழிப்புடன் உள் ளது எது? விழிப்பின் போதுதான் புலன்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவைகளடங்கிய அந்தக் கரணமும் செயல்படுகின்றன. கனவு நிலையில் புலன்கள் செயல்படுவதில்லை. உள் உறுப்பாகிய அந்தக் கரணமே கனவைக் காண்கிறது. ஆழ்ந்த

நித்திரையில் அதுவும் செயலற்று விடுகிறது. அப்படியானால் இத்தகைய புலன்களும் அந்தக் கரணமும் ஜீவர்களின் நிலையான உணர்வாகிய 'தான்' அல்ல என்கிறதல்லவா? அப்படியானால் ஜீவர்களிடையே எப்போதும் நான்தான் என்று தொடங்கும் அந்தத் 'தான்' என்பது எது?

அதுதான் ஆன்மா?

'அன்' என்றால் 'உயிரளிப்பது' என்பது பொருள். அந்தச் சொல்லின் வேர்தான் ஆன்மா!

உடலின் உணர்வுகள் அனைத்துக்குமே ஆதாரமாக இருப்பது ஆன்மாதான். விழிப்பு, கனவு, தூக்கம் ஆகிய மூன்று நிலைகளிலும் விளங்குவது அதுவேயாகும். மனம் செயல்படாத உறக்க நிலையில் காதுகள் திறந்திருந்தாலும் அவற்றில் ஒலி விழாதோ அது போலவே, ஆத்ம ஜோதி அந்தக் கரணத்தில் வீசினால்' ஒழிய, மனம், புத்தி சித்தம் இவை செயல்படாது. இது பரம் பொருளைப் போன்று நிரந்தரமானதுதான். ஆத்மாவுக்கு உருவம், அடையாளம் கிடையாது. எத்தகைய அறிவையும் அடைய வைப்பது ஆத்மாவே என்பதால் அது ஞானமயமானதாகத்தான் இருக்கவேண்டும்.

இவ்வாறு ஞான மூட்டுவதாகவும், உயிர் ஊட்டுவதாகவும், உணர்வூட்டுவதாகவும், ஜீவாதாரமாகவும் உள்ள ஆத்மா, பிரம்மமேயாகும் என்பது அத்வைதக் கருத்து.

எல்லாவற்றுக்குமே ஆதார வஸ்து பிரம்மம் என்னும்போது, ஜீவர்களுக்கு ஆதாரமாக வேறொன்று எப்படி யிருக்க முடியும்?

ஜகத் மித்யா என்கிறார்—ஆதிசங்கரர். உலகங்கள் அடங்கிய ஜகமே நிலையற்றதொரு வெறும் தோற்றம் என்கிறார். இந்த உலகத்தையோ, மனித வர்க்கத்தையோ, உயிர் இனங்களையோ மாயை என்று சொல்லவில்லை. உண்மையில் இந்த உலகமும் பிரம்மம் தான் என்கிறார்—சங்கரர்.

மங்கிய ஒளியில் பளபளக்கும் கிளிஞ்சலை, வெள்ளி என்று மயங்குகிறோம். இருளில் கயிற்றைக் கண்டு

பாம்பு என்று கூட எண்ணி விடுகிறோம். அவற்றின் அருகே சென்று 'இது பாம்பல்ல, கயிறுதான்' 'வெள்ளி யல்ல; கிளிஞ்சல்தான்' என்று நாம் அறியும்வரை, கண்ட தோற்றம் பொய்யல்லவே! அதுபோல உண்மை யும் அல்ல. இதற்குத்தான் மித்தியை (நிலையற்றது) என்கிறார்—ஆசாரியார். இது போல ஒரு நிலையில் உண்மையாகவும் வேறு நிலையில் பொய்யாகவும் ஆகும் தத்துவத்தைப் பிராதி பாசிக சத்தியம் என்கிறார் சங்கரர். நடைமுறையில் உண்மையாகத் தோன்றும் உலகை முதலில் வியாவஹாரிக சத்தியம் என்று கூறி, தர்க்க ரீதியில் ஆராய்ந்து, இறுதியாக உண்மை என்ற உலகம் பிராதி பாசிக சத்தியம் என்று உணரவைக் கிறார். இவற்றுக்கும் மேம்பட்ட 'எல்லாம் பிரம்மம்' என்று உணரும் உண்மை நிலையையே—'பாரமார்த்திக சத்தியம்' என்கிறார்.

பிரமமே உலகமாகத் தோன்றும்போது ஜீவர்கள் தங்களை உடலுடன் இணைத்துப் பார்ப்பதற்குக் காரணம் என்ன? இதற்குக் காரணம் மாயையே என்கிறார்—சங்கரர். ஒன்றேயான பிரமத்தை, பல படித் தான உலகமாகக் காட்டுவது மாயை. அதுவே அவித்தை. அதுவே அஞ்ஞானம். அதுவேதான் ஜீவர் களுக்குத் தங்களது பிரம்ம நிலையை உணர முடியா மல் செய்கிறது.

'மா—யா' என்றால், 'எது இல்லையோ அது' என் பதே பொருளாகும். மாயை பிரம்மத்தை மறைக் கிறது. அதனிடத்தில் பிறிதொன்றான உலகத்தையே உள்ளதாகக் காட்டுகிறது. அப்படிப்பட்டதை எப்படி 'இல்லாதது' என்று கூற முடியும்? உலகம் மித்தியை என்பதைப் போலவேதான் மாயையும் இறுதி நிலையில் இல்லாததே யாகும். ஆனால் அது எப்போதுமே இல லாதது அல்ல. ஞானத்தினால் அத்வைத பாவனை பெறும்போது மாயை அழிந்து விடும். எனவே அந்த மாயை உலகத்தை தோற்றுவிப்பதாக இருந்தாலும் அது சத்வஸ்துவல்ல. அதாவது நிலையானது அல்ல. ஆயினும் அதை அசத் என்று தள்ளவும் முடியாது. அதைச் சொற்களாலும் வாக்குச் சாதுரியத்தாலும்

விளக்க முடியாதாகையால் அதனை 'அநிர்வசனீயம்' என்கிறார்—ஆதி சங்கரர்.

பிரம்மத்தை உலகமாகவும் ஜீவர்களை பிரம்மத்தினிடமிருந்து வேருகவும், மாயையானது எப்பொழுதிருந்து இவ்விதம் காட்டத் தொடங்கியது? இந்தக் கேள்விக்குப் பொருளே இல்லை. ஏனெனில் தனித்திருக்கும் பிரம்மம் கால அதீதமானது. அதற்குக் காலம், தேசம், வர்த்தமானம் எதுவுமே கிடையாது. காலம் என்பதே மாயையின் செயல். எனவே, எந்தக் காலத்தில் மாயை ஏற்பட்டது என்ற கேள்வி எப்படி எழ முடியும்? மாயையோ அநாதியானது. என்கிறார்—ஆதி சங்கரர். மாயையானது அநாதியானதுதான் என்றாலும் அது பிரம்மத்தைப் போன்று நிரந்தரமானது அலல. ஞானம் வந்தவுடன் அது அழிந்து விடுமாகையால் அது நிரந்தரமான உண்மையல்ல. சாசுவதமான சத்தியமல்ல. எனவே பிரம்மம் ஒன்றே சத்தியமாகும். ஒளி வந்தவுடன் இருள் நசிப்பது போல, ஞானம் வந்தவுடன் தானே நசிப்பது—மாயை! அந்த இருள் எப்படிப்பட்டதாக இருந்தால்தான் என்ன? எப்படித் தோன்றிலுல்தான் என்ன? மாயையைக் கடந்து உலகையும் நம்மையும் பரம்பொருளாகக் காண்பதல்லவா நாம் செய்யவேண்டிய கடமை! அதற்கான உபாயத்தையும் ஆதிசங்கரர் வகுத்துப் பகுத்துக் கூறியுள்ளார்.

நாம் மாயையை எதற்காகக் கடக்க வேண்டும்? நம்முடைய உண்மையான நிலையை—'நாம் பிரம்மமே' என்பதை நாம் எதற்காக அறியவேண்டும். இது வெறும் தத்துவ ஆராய்ச்சியின் முடிவுக்காக மட்டுமே அறிய வேண்டியதல்ல. ஜீவனின் ஆன்மா, பரமான்மாவுடன் இணைவதே மோட்சமாகும். அதுவே அத்வைதத்தின் இலட்சியம். அத்வைதம் வெறும் வறட்டு வேதாந்தத் தத்துவமல்ல. வாழும் முறைமையாகவும் வாழ்விலிருந்து விடுபடும் வழியாகவும் இருப்பதே அத்வைதத்தின் பெருமைச் சிறப்பாகும்.

மோட்சம், முக்தி என்பனவெல்லாம் விடுதலை என்பதற்குரிய சொற்களாகும். மோட்சம் என்றுலே விடுதலை என்பதுதான் பொருள். எதிலிருந்து விடுதலை?

சம்சாரத்திலிருந்து விடுதலை பெறுவதைச் சந்நியாசம் என்றும், துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதை இன்பத்திற்காக என்றும் எண்ணுவோர் ஏராளம். நாம் நம்முடைய நிஜ ஸ்வரூபத்திலிருந்து விலகியிருப்பதால்தான் கோபமும் ஆசையும் நம்மைப் பீடிக்கின்றன நிலையற்ற உலக இன்ப துன்பங்களால் அலைபட்டு அவதியுறும் நாம், அந்தச் சலனங்கள் நீங்கி அமைதியையும் ஆனந்தத்தையும் எப்போது அடைவது? அப்போதுதான் முக்தி நிலையையடைவோம். யாவுமேயான 'பிரம்மம் நான்' என்ற உணர்வு தோன்றும் போதுதான், "காண்பன யாவும் நான்" என்ற ஞானமும் ஏற்படும். அப்போதுதான் கோபமும் தாபமும் ஏற்படாது. அன்பு மயமாக, அறிவு மயமாக, ஆக முடியும். அவ்விதமாகத்தான் கர்மத்தளையை உடைத்தெறிந்து, பிறவிச் சுழற்சியிலிருந்து மீண்டு, அமர நிலையை அடைய முடியும். இதுவே அத்வைத மார்க்கமாகும்.

பிறவியை ஒழித்தற்கும், பிரம்ம சாட்சாத்காரம் பெறுவதற்கும் ஞானமே வழிகாட்டுவதாகும். கர்மத்தால விடுதலை இல்லை. ஏனென்றால் கர்மத்தால் ஒரு பொருளைச் செய்யவும் அதன் தரத்தை மாற்றவும் அந்தப் பொருளையே வேறொன்றாக மாற்றவுந்தான் முடியுமே ஒழிய, எப்போதும், எங்கும், நிர்விகாரமாக, நித்திய சுத்தமாக உள்ள ஆத்மாவை கர்மத்தால் உற்பத்தி செய்யவோ, வேறிடம் மாற்றவோ, வேறொன்றாக்கவோ, அதன் தரத்தை மாற்றவோ இயலாது. அதனால்தான் ஆன்மா, கர்மாவுக்குரிய விஷயமாகாது என்கிறார்—ஆதிசங்கரர். நம்மிடமே உள்ள ஆன்மாவை அதாவது பிரம்மத்தை அடைய முயற்சி செய்வது என்று சொல்லும் செயல்வகையெல்லாம் அறிவு பூர்வமான அனுபவ ஞானமேயாகும்.

பயனை எதிர்பாராது கர்மம் செய்வதால் மனமானது தூய்மையடைகிறது. இதனைத்தான் 'நிஷ்காம்ய கர்மம்' என்கின்றனர்—பெரியோர். இத்தகைய வேதம் கூறும் கர்மாக்களை—அனுஷ்டானங்களை ஆய்ந்து அறிந்து செய்யவேண்டும். என்கிறார்—ஆசாரியார். உலகமே ஒரு தோற்றம்தான் என்பதற்காக அது

எக்கேடாவது கெட்டுப்போகட்டும் என்று அவர் சொல்லவில்லை. ஆத்மாவை எதுவும் தீண்ட முடியாது என்பதற்காக, மனம்போன வழியில் சொல்லவும் சொல்லவில்லை. உலகம் தோற்றமேயானாலும், அந்தத் தோற்றத்தையே மெய்யாகக்கொண்டு, வாழுங்காலம் வரை நியதியோடு கூடிய தார்மீக வாழ்வு வாழ வேண்டும். நெறி சேர்ந்த ஒழுக்கமான வாழ்வில் வாழ வேண்டும். தேவார்ப்பணமாக விருப்பு வெறுப்பின்றிச் செய்யும் கர்மமே, சித்தத் தூய்மையை அளிக்கும்.

கட்டுப்பாடற்ற ஆன்மாவுக்கு ஏன் இந்தத் தர்ம சாஸ்திரக் கட்டு என்று கேட்கலாம். விறகுக் கட்டுக்கு அழுத்தமான மணிக்கயிற்றைக்கொண்டு இறுக முடிச்சுப்போட்டிருக்கிறது. அந்த முடிச்சைத் தானாக அவிழ்க்கவோ, விறகு ஒன்றை எடுக்கவோ முடியாத அளவு இறுக்கமாகப் போட்டிருக்கும். அந்தக் கட்டை எப்படி அவிழ்ப்பது? வேறொரு கயிற்றைக் கொண்டு விறகுச் சுமையை மேலும் அழுத்தமாகச் சுற்றி இறுக்குகிறோம். ஆனால் கயிற்றைச் சுற்றுகிறோமே தவிர அதை முடிச்சாகப் போடுவதில்லை. இரண்டாவது அழுத்தத்தினால் விறகுகள் மேலும் இறுகுவதால், பழைய மணி முடிச்சுக் கயிறு தானாகத் தளர்கிறது. அந்த முதற் கயிற்றை அப்படியே வெளியே எடுத்து, முடிச்சுப் போடாமல் இறுக்கியிருக்கும் இரண்டாவது கயிற்றையும் தளர்த்தினால், விறகுக்கட்டு, கயிற்றுப் பந்தத்திலிருந்து விடுதலை பெற்று விடுகிறது. இது போலத்தான் இந்திரியங்கள் முதலியவற்றால் ஆன்மாவுக்கு ஏற்பட்டுள்ள முதல் கட்டை, தர்ம ஆசாரம் என்ற புதிய இறுக்கத்தால் நிவர்த்தி செய்யவேண்டும். அப்படி விடுதலை யடைந்தபின், இரண்டு கட்டுகளுமே விலகி விடும். உலகத்தில் வாழும் காலத்தில் மனிதன் செய்ய வேண்டிய கர்மங்களைப் போலவே, உபாசனை அல்லது பக்தியையும் சங்கரர் வற்புறுத்துகிறார். கர்மானுஷ்டானங்களால் தூய்மை பெறக்கூடிய மனத்தை ஒருமுகப்படுத்த உபாசனையே சிறந்த வழியெனக் கூறுகிறார். பிரம்மத்தைத் குணமற்றதாக, நிர்க்குணப் பிரம்மமாகத் தியானிக்க வேண்டும் என்பதே ஆதிசங்கரரின் கருத்து. ஆயினும் அவர் வழிவந்தவர்கள், பிரம்மத்தை

நிர்க்குணமானதாகவும், உருவமற்றதாகவும் தியானிப்பது பாமரமக்களுக்கு இயலாதது என்பதால், உருவ வழிபாடுகளுக்கான முறைகளை வகுத்தனர். ஆதி சங்கரர் 'ஷண்மதஸ்தாபனம்' செய்தார் என்பதைவிட ஆதிசங்கரரின் அத்வைத தத்துவ விளக்கத்தினுல் தான், அவர் காலத்தில் இருந்த இந்து மதத்தின் துணை மதங்களான, கணபத்யம், கௌமாரம், சாக்தம், கபாலிகம், வைஷ்ணவம், சைவம், முதலிய ஆறுமதங்களும் பரப்பிரம்ம உபாசனைகளைப் போதிக்கும் மதங்களாக ஒன்று பட்டன.

அத்வைத குருவாகிய ஆதிசங்கரர், பஞ்சாயதன மூர்த்தி வழிபாட்டை வகுத்ததாகக் கூறுவதும் தவறுடையது. அந்த வழிபாடு பிற்காலத்தில் சங்கரர் வழி வந்தவர்கள் வகுத்த பக்தி மார்க்கமாகும்.

ஒருவனின் மனம் அவன் செய்யும் கர்மத்தால் தூய்மை பெறுகிறது. உபாசனை மார்க்கத்தால் அவன் பிரம்மத்தை அறியும் அறிவையும், மனத்தையும் ஒன்றுபடுத்தி ஒருமுகமாய்த் தியானிக்கத்தான் முடியும். அந்த நிலையில் அவன் நான்கு வகைச் சாதனங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று கருதுகிறுர்— ஆதி சங்கரர்.

ஆன்மா அழியாதது. மற்ற எல்லாப் பொருள்களுமே அவை எத்தன்மைத்தாயினும் அழியக் கூடியவைகளே, என்ற விவேகத்தைச் சாதகன் முதலில் கொள்ள வேண்டும். அடுத்து, இந்த உலகத்திலும் மறு உலகிலும் அடைய விரும்பும் சுகங்களை நாடாதிருத்தல். மூன்ருவதாக ஆறு அருங்குண சம்பத்துக்களைக் கடைப்பிடிக்க வேண்டும். அவை ஆறும் முறையே, 1. மனத்தை அடக்குதல் 2. புலன்களை அடக்குதல். (அதாவது புலன்களை அதனதன் போக்கில் போகாமல், விஷயங்களிலிருந்து, அவற்றைத் திருப்புவது.) 3. அவ்விதம் திருப்பிய புலன்களை மீண்டும் வெளிப் போகாமல் காப்பது (அதாவது துவந்த அனுபவங்களாகிய இன்ப துன்பங்களை ஒன்ருகவே கருதிப் பொறுப்பது.) 4. முயற்சி. 5. மனத்தை ஒருநிலைப்படுத்தும் செயல். 6. வேதாந்த போதனையிலும் வேதத்திலும் ஆர்வமும் நம்பிக்கையும் கொள்வது.(அதாவது, தன்சுயானுபவத்தால் கிரகிக்க

வேண்டிய பிரம்மானுபவத்தை நேரில் அனுபவித்த மாதவ முனிவர்களின் வாக்கில் வைக்கும் நம்பிக்கை.) இந்த ஆறும் ஆதிசங்கரர் கூறிய பிரம்மஞான அனுபவத்திற்கான அத்வைத தத்துவத்தினுள் அடங்கியதால், இவரை ஷண்மதஸ்தாபகர் என்று பிற்காலத்தார் வழங்கலாயினர். அவர் ஷண்மதங்களில் ஒன்றைக் கூட ஸ்தாபிக்க வில்லை. ஏனெனில் அவை முன்பே இருந்தவை. பிரம்மத்தை ஆத்மா அடையும் வழிக்கு ஆறு வகையான முயற்சி முறைகளையே அழுத்தந் திருத்தமாக மக்கள் மனத்தில் பதிய வைக்க அவர் முயன்றார். அதுவே ஷண்மதஸ்தாபகர் என்ற பெயரை அவருக்குத் தேடிக் கொடுத்தது.

மூன்று சாதனையின் ஆறு முயற்சிகளிலும் பயின்று, அந்த நிலையை அடைந்தவனுக்கு நான்காவது சாதனமாக இருப்பது முமூட்சுத்துவம். அதாவது மோட்சம் பெற்றே தீருவேன் என்ற வைராக்கியமும், அதனாலேயே அதனை அடைவதுமாகும்

மேலே கூறிய நான்கு சாதனைகளையும் பயின்ற பிறகு, வேதாந்த விசாரணையில் ஈடுபடவேண்டும். கேட்பது (சிரவணம்). மனத்தில் பதிய வைப்பது (மனனம்). நிதித்தியாசனம் என்பவை இந்த மார்க்கத்தின் பகுதிகள். இவற்றில் நிதித்தியாசனம் என்பது, சிந்தித்துத் தெளிந்ததை இடையறாமல் தியானிப்பதாகும். பகுத்தறிவோடு ஆத்மஞானம் ஏற்படுவதால் மாயை தானாக விலகிவிடும்.

சிரவணம் என்பது, வேதாந்த வாக்கியப் பொருளை ஒரு குருவின் மூலமாக அறிந்து கொள்வதாகும். குரு என்ற சொல்லுக்கே 'இருளைப் போக்குபவர்' என்பது தான் பொருள். அவரிடம் கேட்பதை ஒரு காதால் கேட்டு மறு காதால் விட்டுவிடக்கூடாது. கேட்டவற்றை இடைவிடாது சிந்தித்து ஆராய்தல் வேண்டும். அதாவது புத்தி பூர்வமாகக் கேட்டவற்றில் சிறந்தவற்றை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். உறுதிப்படுத்தியதில் உள்ளத்தையும், அறிவையும் ஒன்றுபடுத்தும் நிலையை அறிந்து கொள்ளும் அநுபவமே ஆத்ம ஞானமாகும்.

இத்தகைய ஆத்ம ஞானம் ஏற்பட்டால் இடைப் பட்ட மாயை தானுக விலகிவிடும். தான் பிரம்மம் என்று அறியாமலேயே ஜீவன் பிரம்மத்தோடு ஒன்றி விடும். இந்தப் பிரம்மானுபவம் மோட்சமாகும் அதற் கென்று தனி உலகம் இல்லை. அது இங்கேயே, இப் போதே, நம்மிடத்திலேயே இருக்கிறது என்பதுதான் அத்வைத தத்துவம். அப்படித்தான் கீதையும் உபநிஷதங்களும் கூறுகின்றன. "மோட்சம் என்பது ஒவ் வொரு ஆன்மாவுக்கும் பிறப்புரிமையாகும்" என்கிறது அத்வைதம்.

இத்தகைய பிரம்ம சாட்சாத்காரத்தை உலக வாழ் விலேயே பெற்றுவிட முடியும் என்பதோடு, யாரும் பெறமுடியும் என்பதாலேயே அத்வைதம் உலக மதத் தத்துவங்களிலேயே மிகவும் சிறப்புடையதாகிறது.

இத்தகைய ஆன்ம விடுதலை உணர்வைப் பெற்று அனுபவிப்பவனே ஜீவன் முக்தன். அவனுக்கு ஆசை யில்லை. ஏனெனில் பிரம்மத்தை அணுகிய பிறகு அவன் அடைய வேண்டியது வேறெதுவுமே மிகச் சிறப்பாக அமையாதாகையால், அவனுக்கு ஆசை யிருப்பதில்லை. அது போலவே, அவனுக்குக் கோப மிராது. ஏனெனில் நிறைவேருத, அடைய முடியாத ஆசையால்தான் கோபம் தோன்றும். அவனுக்குப் பயமுமில்லை பிரம்மத்தைத் தவிர வேறெதாவது இருப்பது அவனுக்குத் தெரிந்தால்தானே பயம் ஏற் படும். அவன் எதைக் கண்டும், எந்நிலையிலும் பயப் படமாட்டான். அவனைக் கண்ட எதுவும் எந்நிலையி லும் பயப்படாது. ஆகையால் அவன் அபய நிலையை அடைகிருன். அபயமும் அத்வைதமும் ஒன்றேயாகும்.

உலகத்திலுள்ள மற்ற மதங்கள் அன்பைப் போதிப்பதைப் போல அத்வைதம் அன்பைப் போதிக்கவில்லை யென்று சிலர் கூறலாம். "எல்லா மாகிய பிரம்மமே நான்" என்ற நிலையடையும் போது, எல்லா உயிர்களும் நானே என்ற உணர்வும் தானுகவே ஏற்படும். எனவே சாதகனே அன்புருவமாகி விடுவ தால், அவன் எதன்மீதும் அன்புடையவனுகி விடு வது அவனது இயல்பாகி விடுவதால், 'அன்பாக இரு'

என்று அவனுக்கு யாருமே போதிக்க வேண்டிய அவசியமற்று விடுகிறது. அவனே அன்பன்.

நவீன விஞ்ஞானமும் அத்வைத ஞானத்திற்குப் புறம்பானதோ விரோதமானதோ அல்ல. உலகம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலையில் உண்மை; வேறொரு நிலையில் பொய் என்று கூறி, உண்மையிலும் பொய்யை அழித்தற்கும் அறிதற்கும் ஆதிசங்கரரின் அத்வைதக் கருத்து வழிகாட்டுகிறது. இதை விஞ்ஞானமும் ஒப்புக்கொள்கிறது. 'சட்ட விதிகளுக்கு உட்பட்டிருக்கும் சில நடைமுறை உண்மைகளும் கூட, அதைவிட வேறு உயரிய கோட்பாடுகளின் நிரூபணத்தின் போது பொய்யாகின்றன' என்கிறது—விஞ்ஞானம்.

ஐஸக்நியூட்டன் என்ற விஞ்ஞானியின் கவர்ச்சி விசைக் கொள்கையானது நடைமுறையில் உண்மையானது என்று நாம் அறிகிறோம்; காண்கிறோம். ஆயினும் உயர்தர விஞ்ஞானப் பரிசோதனையில் அந்த 'உண்மை'யும் தப்பாகி விடுகிறது. கால இடைவெளித் தொடர்க் கொள்கையைக் கூறும் ஐன்ஸ்டீன், 'கவர்ச்சி விசையும்' 'கவர்ச்சி மண்டலமும்' வெறும் தோற்றங்கள்தான் என்கிறார்.

ஒவ்வொரு பொருளும், துகள்களால் உருவாகிறது. ஆகையால் 'பொருள்' என்பது 'துகள்' வடிவானது. ஒளி, வெப்பம் முதலிய சக்தி வகைகள் அலை வடிவமானவை என்பது விஞ்ஞானம். ஐன்ஸ்டீனோ, ஒளி முதலியன துகளாகவும் இயங்கும் என்று கண்டு பிடித்துள்ளார். டபிராக்லி என்பவர், பொருள் என்பது அலை வடிவிலும் இருக்க முடியும்' என்றார். ஆனால் டிராக் என்பவர், துகள், அலை என்ற இரு கருத்துக்களும் ஒன்றுக்கு மற்றொன்று மாறானவையல்ல; அவை ஒரே உண்மையின் இரு தோற்றங்கள்!'' என்று நிரூபித்தார்.

அத்வைதமோ, பொருள், சக்தி என்று இரண்டு இருப்பதாகப் பேசுவதே தப்பு என்கிறது. விஞ்ஞானமோ, பொருளும் சக்தியும் அடிப்படைத் தொடர்புடையவை என்றும், ஒன்று மற்றொன்றாகும் தன்மையை உடையது என்றும் கூறுகிறது.

ஆதிசங்கரர், எல்லாம் பிரம்மம் என்கிறார். இதை வேறு விதத்தில் விஞ்ஞானமும் சொல்லுகிறது. மரம், மண், மலைமுதல் மனிதன்வரையில் யாவுமே மின் காந்த அலைகளாகும். நாம் காண்பவை அவற்றின் பல வித்த் தோற்றங்களேயாகும்.

ஆதிசங்கரர் இயற்றிய நூல்களில் முக்கிய மானவை உரை நூல்களேயாகும். பிரம்ம சூத்திரம், பகவத் கீதை, உபநிஷதங்கள் முதலியவற்றுக்கு அவர் எழுதியுள்ள உரை நூல்கள் மிகவும் சிறந்தவை. அவர் இயற்றிய மற்ற நூல்கள், கனகதாரஸ்தவம், தசுஸ்லோகி, விவேக சூடாமணி, பிரபோத ஸீதாகரம், ஆத்ம போதம், மனீஷா பஞ்சகம், உபதேச ஸாஹஸ்ரி, பஜ கோவிந்தம் முதலியன ஆகும்.

ஸ்ரீ பிரச்னோத்ர ரத்ன மாலிகா, துவாதச பஞ்சரிகா ஸ்தோத்ரம், அம்பாஷ்டகம், அம்பா பஞ்சரத்னம், சியாமளா நவரத்ன மாலிகா, திரிபுரசுந்தரி ஸ்தோத்ரம், அன்ன பூரணி ஸ்தோத்ரம், சீதலாஷ்டகம், ஸ்ரீ மாத்ரு புஷ்ப மாலாஸ்துதி, தேவ்யபராத ஷமாபன ஸ்தோத்ரம், சிவமானச பூஜை, சிவபஞ்சாட்சர ஸ்தோத்ரம், விசுவநாதாஷ்டகம், வேதசார சிவஸ்தோத்ரம், சிவநாமவளி அஷ்டகம், ஹரிஸ்துதி, விஷ்ணு ஷட்பதீ, காசி பஞ்சகம், ஆத்ம பஞ்சகம், அபரோஷானுபூதி, விஞ்ஞான நௌகா, ஸ்ரீ தட்சிணாமூர்த்தி ஸ்தோத்திரம், ஆனந்தலஹரி, சிவபுஜங்க ஸ்தோத்திரம், மோகமுக்கர, கணேச பஞ்ச ரத்னம், சுப்ரமணிய புஜங்கம், பவானி புஜங்கம், ஸ்வாத்ம நிபேணம் முதலிய நூல்கள் ஆதி சங்கரர் இயற்றியதாகக் கூறப்படுகின்றன. அவை அவர் மரபில் வந்தவர்கள் இயற்றியவை.

ஸ்ரீ சௌந்தரிய லஹரி, லக்ஷ்மி நரசிம்ம ஸ்தோத்ரம் என்ற நூல்களும் அவர் இயற்றியனவாகக் கருதப்படுகின்றன. இனி அவரது வரலாற்றைத் தொடர்வோம்.

## காசியை அடைதல்

குரு கோவிந்த பகவத் பாதரின் அருள் பெற்ற சங்கரர் புனித கங்கைக் கரையிலிருந்த புராதன நகர மான காசியை அடைந்தார். மோட்சமளிக்கும் ஏழு

புனித க்ஷேத்திரங்களில் முதன்மையானது காசி. அங்கு ஞானியர் பலர் இருந்தார்கள். அவர்கள் இடையே வேதாந்த உபதேசம் செய்யும் இந்த இளைஞரான பால சந்நியாசியைக் கண்ட பல்லாயிரக்கணக்கான மக்கள், தினந்தோறும் உபதேசம் பெறவும் ஞான மார்க்கத்தை அறியவும் கூடினர். மணிகர்ணிகைக் கட்டத்தில் மணிமணியான பொன் மொழிகளைப் போதித்து வந்தார் சங்கரர். அத்வைத தத்துவ விளக்கத்தையும் உபநிஷதங்களையும் போதித்து வந்தார். நெடுந்தூரத்திலிருந்தெல்லாம் சீடர்கள் வந்து குழுமினர். ஞானியர் நிறைந்த காசி நகரில் தினந்தோறும் புனித கங்கையில் குளித்துக் காசி விசுவநாதரைத் தரிசித்து, பிரம்ம சூத்திரத்தின் தெளிவுரைகளையும் உபநிஷதப் பொருளையும் சீடர்களுக்குப் போதித்து வந்த சங்கரர், வேதங்களில் கூறப்படும் ஞான காண்டத்தின் சிறப்புச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி வந்தார்.

## சனந்தனர் பத்மபாதரானது!

சங்கரர்முன்பு கூடியிருந்த ஏராளமான சீடர்களில சனந்தனர் என்று ஒருவர் இருந்தார். அவர் தமிழகத்துச் சோழ நாட்டுப் பகுதியைச் சேர்ந்த பிரம்மச்சாரி ஆவர். அவர், அகோபில நரசிங்கரின் திருவருள் கூட்டி வைத்ததால், காசியை நாடிச் சென்று சங்கரரிடம் சீடரானார். சங்கரர், சனந்தனரிடம் அதிக அன்பு செலுத்தி வந்தார். அதனால் மற்ற சீடர்களில் சிலர் பெருமை கொண்டார்கள்.

ஒரு நாள் ஆசாரியார் கங்கை நதியின் வடக்குக் கரையில் அமர்ந்து சீடர்களுக்கு வேதாந்த பாடத்தை கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் சனந்தனர் எதிர்க்கரையில் இருந்தார். பாடம் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது சங்கரர் எதிர்க் கரையில் சனந்தனர் நிற்பதைக் கண்டார். கங்கையிலே பெருவெள்ளம் சென்று கொண்டிருந்தது. சங்கரர், சனந்தனரைச் சைகை காட்டி அழைத்தார். குருவின்

ஆக்ஞையையே குறியாகக் கொண்ட சனந்தனர் குருவை நோக்கி நடக்கலானுர். வழியின் குறுக்கே சென்ற கங்கைநதி நீரில் நடந்தே வந்தார். இது என்ன விந்தை ! நீர்மீது நடப்பதா ? அவர் நடக்கும்போது அவர் கால் வைக்கும் இடம் எல்லாம் ஒரு தாமரை மலர் மலர்ந்ததைச் சங்கரரின் சீடர்கள் கண்டனர். அந்தப் பத்மங்களின்மீது கால் வைத்து நடந்து நதியைக் கடந்து வந்த சனந்தனரை வரவேற்ற சங்கரர், "அன்பனே ! நீ எப்படிக் கடந்து வந்தாய் !" என்று கேட்டார்.

அப்போதுதான் சனந்தனருக்குத் தாம் கங்கையைக் கடந்து வந்தது தெரிந்தது. அவர் ஆசாரியாரை நோக்கி, "ஸ்வாமி ! தங்களை ஸ்மரித்தால் சம்சாரம் என்ற பெருங்கடலே முழங்கால் மட்டமாகிவிடுமே ! இந்தக் கங்கைப் பெரு வெள்ளம் எம்மாத்திரம்!" என்று பணிவன்புடன் கூறினுர்—சனந்தனர். "சனந்தனு ! திரும்பிப் பார் ?" என்ருர்—சங்கரர். சனந்தனர் திரும்பிப் பார்த்தார். அங்கே கங்கை நதியின் குறுக்கே அவர் நடந்து வந்த பாதையில் நீரின்மீது தாமரை மலர்களாலான பாலம் ஒன்றைக் கண்டார். அவருக்கே வியப்பாக இருந்தது. எல்லாம் குருவருள் என்று எண்ணிச் சங்கரரை வணங்கினுர்.

"சனந்தனு ! பத்மங்கள் உன் பாதத்தைத் தாங்கின வல்லவா ? எனவே இனிமேல் நீ பத்ம பாதன் என்று வழங்கப்படுவாயாக !" என்று ஆசி கூறினர்—ஆதி சங்கரர். இந்த நிகழ்ச்சியானது 'பகவத் பாதாப்யுதம்' என்ற வட மொழி நூலில் அழகாக வருணிக்கப்பட்டுள்ளது.

இந்தச் சமயத்தில்தான் ஆதி சங்கரர் பகவத் கீதைக்கும், உபநிஷதங்களுக்கும், பிரம்ம சூத்திரத்திற்கும், உரை எழுதி முடித்து, சனத் சுஜாதீய பாஷ்யம் என்ற நூலையும் இயற்றி முடித்திருந்தார். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில்தான் ஆதி சங்கரர் "மனீஷா பஞ்சகம்" என்ற நூலை இயற்றுவதற்கான மற்ருெரு நிகழ்ச்சியும் நிகழலாயிற்று.

# மனீஷா பஞ்சகம்

ஒரு நாள் சங்கரர், வழக்கம்போலப் புனித கங்கையில் நீராடி விட்டுத் தமது சீடர்களுடன் கரையோரமாக நடந்து சென்று கொண்டிருந்தார். அப்போது அவர் எதிரில் புலையன் ஒருவன் வந்து கொண்டிருந்தான். அருவருப்பான தோற்றத்துடனும் கம்பீரமான நடையுடனும் கையிலே கோல் ஒன்றை ஏந்திக் கன வேகமாக நடந்துவந்து கொண்டிருந்தான். அவனது தோளில் ஒரு கள்ளுக் குடுவை தொங்கிக் கொண்டிருந்தது. அவன் கைகளிலே நான்கு நாய்களைக் கயிற்றால் கட்டிப் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் ஆசார அனுஷ்டானங்களுடன் தூய்மையாகச் சென்றுகொண்டிருந்த சங்கரரை நெருங்கினான். அவனது கள் குடுவையிலிருந்து குப்பென்று நாற்றம் வீசியது. அவன் தன் உடல்மீது உராய்வதைப் போல வருவதைக் கண்டார்—சங்கரர். "அன்பனே, சற்று விலகிச் செல்க!" என்றார். உடனே அவன் சங்கரரைச் சில கேள்விகள் கேட்டான். அதுவும் விலகிச் செல்லாமல் கேள்விகளைக் கேட்கலானான். "துறவரசே! எதை எதிலிருந்து விலகிப் போகுமாறு சொல்கிறீர்கள்? அன்னமயமான ஒரு உடம்பை, அதே போல அன்னத்தினால் வளர்ந்த இன்னொரு கூட்டினை விட்டு விலகச் சொல்கிறீர்களா? அல்லது சைதன்னியத்திலிருந்து சைதன்னியத்தையே விலகச் சொல்லுகிறீர்களா? என்று கேட்டான். உடனே சங்கரர் அவன் சாமானியன் அல்லன் என்பதை உணர்ந்து கொண்டார்.

உணவால் உருவாகும் இரண்டு உடல்களும் எலும்பும் ஊனும் குருதியும் உருவாக்கிய பிண்டங்கள் தானே! அவற்றில் ஒன்றினால் மற்றொன்றுக்கு எப்படித் தீட்டு ஏற்பட முடியும்? இரண்டுமே மனித உடல்கள்தானே? ஞான ஒளிகளை விலகிப் போகச் சொல்வது என்பதும் அத்வைத ஞானிக்குச் சரியற்றது. ஞான ஒளிகள் என்று பன்மையாகச் சொல்வதே தவறு. இருப்பது ஒரே ஞானம்தானே?" அதில் சேருதல் ஏது? விலகுதல் ஏது?

புலையன் மேலும் கேட்கிறான்.

"கதிரவனின் பிரதிபிம்பம் புனிதமான கங்கை நதியிலும் விழுகிறது. சேரியிலுள்ள குட்டையிலும் விழுகிறது. அந்தப் பிரதி பிம்பங்களில் ஏதாவது வித்தியாசம் உண்டா? காலியாக உள்ள ஒரு பொற் குடத்தின் உள்ளே இருக்கும் அதே வெளிதான், காலி யான மண் கலயத்தின் உள்ளும் இருக்கிறது. அது போலத்தான் தேகத்தில் மாறுபாடு இருந்தாலும் உள்ளே உள்ள பொருள் ஒன்றேயல்லவா? அலை யடங்கிய ஆனந்தமே இயல்பாகக் கொண்ட அறிவுக் கடல்தானே இரண்டு உடலுக்குள்ளேயும் உள்ளது? இதில் அந்தணன் என்றும் புலையன் என்றும் பேத மயக்கம் எங்கிருந்து வந்தது, சுவாமி!"

அவன் சொன்னவைகளைத் தமது ஆத்துமாவைச் செவியாக்கிக் கொண்டு கேட்டார்—சங்கரர். அவருக்கு அவன் கூறியவற்றின் உட்பொருள் விளங்கியது. உடனே அவர் அந்தப் புலையனின் காலடியில் விழுந்து எழுந்து அவனையும் தமது குருவாக மனத்தில் நினைத் தார். உடனே "மனீஷா பஞ்சகம்" என்ற ஐந்து சுலோ கங்களைக் கூறினார். அந்தச் சுலோகங்களின் ஒவ் வொன்றின் உட்கருத்தும் பின்வருமாறு அமைந்துள் ளது.

"நான் பிரம்மமே! இந்த உலகம் யாவுமே ஞானம் பரப்பிய தோற்றமே யாகும். முக் குணங்களான அஞ்ஞானத்தாலேயே நான் இந்தத் தோற்றங்களை யெல்லாம் கற்பனை செய்து கொண்டிருக்கிறேன்," என்று எவன் ஒருவன் ஸ்திரமான திட புத்தியுடன், பரமானந்தமான அழிவற்ற மேன்மையான தூய நிலையில் இருக்கிறானோ, அவன் வேதியனானாலும் சண்டாளனே யானாலும்கூட அவன் என் குருவாவான். இது என் தீர்மானமான கொள்கை."

"இந்தப் பிரபஞ்சம் யாவுமே சலிப்பதும் அழிவ தும் என்று, எவன் ஒருவன் குருமுகமாக உணர்ந்து சாந்த குணத்தை இயல்பாகக்கொண்ட உள்ளத் துடன், பிரமத்தை இடைவிடாமல் விளங்கிக் கொண்டு, விளங்குகின்றானோ? ஞானத் தீயினால் தனது பழவினை யையும், வரவிருக்கும் வினையையும் எரித்துவிட்டுப்

பயனளிக்கத் தொடங்கிய வினையின் வசத்தில் எவன் ஒருவன் தன் உடலைச் சமர்ப்பித்து விடுகிருனே? அவன் யாராக இருந்தாலும் என் குரு என்று நிச்சய மாகக் கூறுவேன்."

"விலங்கும், மனிதரும், தேவரும் எதைத்'தான்' என்று உறுதியாகக் கொள்கின்றனரோ, எத னுடைய ஒளியினுல் இதயமும், கண்களும், உடலும் விளக்கமுற்று, விஷயங்களை அறிகின்றனவோ, சூரிய னுல் உண்டான மேகம் சூரியனையே மறைப்பதோடு, தானும் அந்தச் சூரியனின் ஒளியினுலேயே பிரகாசிப்ப தைப்போல, எதிலிருந்து உண்டான உலகம், அதை மறைத்து அதனுல் தான் பிரகாசம் அடைகின்றதோ, அந்த ஆத்மாவை எப்பொழுதுமே அனுபவித்துக் கொண்டு நிறைந்த மனத்தினனுக, பிரமத்தோடு இணைந்துள்ள யோகி, அவர் யாராக இருப்பினும் அவர் என் குருவேயாகும்.

"எந்த ஆனந்தக் கடலின் வெகு நுண்ணிய துளி யானுலும், இந்திரன் உள்ளிட்ட தேவர் கூட்டமெல் லாம் ஆசை நிறைவேறியவர் ஆகின்றனரோ, எதைத் தமது அமைதியுற்ற அறிவில் பூரணமாக அடையப் பெற்ற முனிவர்கள் திருப்தியாகக் காண்கின்றனரோ, அந்த அழிவற்ற ஆனந்தப் பெருங்கடலில் புத்தியை அர்ப்பணித்துப் பிரம்மத்தை அறிபவராக மட்டுமின் றிப் பிரம்மமாகவே ஆகின்ற தூர்பலமான மனிதர்கள், தேவரின் அரசனும் வணங்க வேண்டிய திருவடிகளை உடையவர்கள், இது எனது அதி திடமான முடிவு."

இத்தகைய கருத்துடைய பாடல்களைக் கூறி, அந்தச் சண்டாளனைப் பட்டப் பகலில் ஊர் மக்கள் சுற்றியிருக்க, குருவென்று வணங்கிப் போற்றினுர்— சங்கரர்! குலத்தைவிட ஞானத்தைக் கொண்டே ஒருவனை மதிக்க வேண்டும் என்று ஆதிசங்கரர் தமது சொந்த வாழ்க்கையிலேயே மதித்துக் காட்டினுர். உடனே சண்டாளன் மறைந்தான். அவன் இருந்த இடத்தில் காசிவிஸ்வநாதரே காட்சி தந்தருளினுர். நான்கு நாய்களாக இருந்தவை நான்கு வேதங்களா யின. ஒரு தீபத்திலிருந்து மற்ருெரு தீபத்தை ஏற்றுவ

தால் முதல் தீபம் அழிந்து விடுமா! இறைவன் மனித வடிவில் சங்கரராக வந்து வாழ்ந்து காட்டினுர் என்பது பக்தர் கருத்து.

ஆதிசங்கரர் இயற்றிய இந்த மனீஷா பஞ்சகத்தின் முதல் நான்கு ஸ்லோகங்களில் முறையே ருக், யஜுர், சாம, அதர்வண வேதங்களில் சொன்ன பல மகா வாக்கியங்களில் முக்கியமான ஒவ்வொன்றின் தாத்பரியம் கூறப்பட்டுள்ளன. இந்த மகா வாக்கியங்களின் அடிப்படை விளக்கமாகத்தான் சங்கரர் புரி ஜகந்நாதம், சிருங்ககிரி, துவாரகை, பதரி முதலிய இடங்களில் பிற்காலத்தில் அத்வைத பீடங்களை நிறுவினுர். அந்த மகா வாக்கியங்கள் வேதத்தின் ஒவ்வொரு சாகையைச் சேர்ந்தவையாகும்.

## பதரிகாசிரமம் சென்றது!

பிறகு சங்கரர் தமது சீடர்களுடன் காசி நகரிலிருந்து புறப்பட்டு, இமயமலையில் நெடுந் தொலைவு நடந்து பதரிகாசிரமத்தை அடைந்தார். வியாச முனிவரைக் கண்டு, அவருடைய அருள் பெற்று, அதன் பிறகு பிரம்ம சூத்திர பாஷியத்தை இயற்ற எண்ணினுர்—சங்கரர். அப்பொழுது வியாசர் வெளிப்படவில்லை. நரநாராயண முனிவர் ஆசிரமத்தில் நாராயண முனிவரைக் கண்டு சங்கரர் தம் கருத்தைத் தெரிவித்தார். அவர், "ஐயா! ஹரியின் இதயத்தில் ஹரன் இருக்கிருன். ஹரனின் உள்ளத்தில் ஹரி இருக்கிருன். வியாசன் ஹரி என்பதும் சங்கரர் சிவம் என்பதும் உலகம் அறிந்த உண்மையாம். உமது கைங்கரியம் பூர்த்தியானதும் வியாசர் வெளிப்படுவார்" என்று கூறினுர்.

நாராயண முனிவரின் அருள் புனைந்த சங்கரர் பதரிகாசிரமத்தில் ஒரு விஷ்ணு ஆலயம் அமைத்து அங்கு முறைப்படி பூஜை நிகழ ஏற்பாடுகள் செய்தார். கேரள நாட்டு அந்தணர் அங்குச் சென்று அக வழிபாடு நிகழ்த்தும் வழக்கம் சங்கரர் வகுத்ததேயாகும். பின்னர், பதரியிலிருந்து சீடர்களுக்குத் தத்துவ விளக்

கம் புரிந்துகொண்டே காஷ்மீரத்தை அடைந்தார் சங்கரர்.

## காஷ்மீரத்தில் சங்கரர்!

நெடுங்காலமாக, அறம் வளர அரசு நிலைத்த காஷ்மீர நாட்டின் நடுநாயகமான பகுதியில் ஆசாரியர், தமது சீடர்களுடன் தங்கியிருந்தார். அவர் அங்குத் தங்கியிருந்ததால், அந்த நகரத்துக்கு ஸ்ரீநகர் என்ற பெயர் வழங்கலாயிற்று. ஒரு நாள் அவர் தமது சீடர்கள் புடைசூழ, அந்த நகரத்திலிருந்த ஒரு நூல் நிலையத்தை அடைந்தார். ஆயிரக்கணக்கான ஏடுகள் குவிந்திருந்த அந்த நூல் நிலையத்தில் ஒரு பெண் அங்கும் இங்குமாக நடப்பதைக் கண்ட சங்கரர், "பெண்ணே! எனக்கு ஓர் ஏடு தருக!" என்றார். அக்ஷரங்களின் ஸ்வரூபமாகிய அம்பிகையை முன் வைத்தே தமது பாஷ்யப் பணியைத் தொடங்குவதற்கு எண்ணினார். லலிதா சஹஸ்ரநாமம் கிடைக்குமாயின் முதலில் அதற்கே விளக்கவுரை செய்வது என்ற நோக்கத்தோடு அவர் கேட்க, அந்தப் பெண் ஓர் ஏட்டைக் கொண்டு வந்து கொடுத்தாள். அதனைச் சங்கரர் வாங்கித் திறந்து பார்க்க, அது விஷ்ணு சஹஸ்ரநாம ஏடாக இருந்தது. "இன்னொரு நூல் தருக தாயே!" என்றார். உள்ளே சென்ற அந்தப் பெண் மறு முறையும் அதனையே தந்தாள். மூன்றும் முறையும் விஷ்ணு சஹஸ்ர நாமத்தையே எடுத்துக் கொடுத்தபடியால், முதற்கண் அதற்கே உரை செய்ய வேண்டும் என்று இறைவன் விதித்த நூல் இதுவே என்று முடிவு செய்து, **விஷ்ணு சஹஸ்ரநாம பாஷியம்** செய்து முடித்தார்.

## பாஷ்யம் செய்தல்

பதரிமுடியிலே சில காலம் தங்கியிருந்து பகவத் கீதை பாஷ்யம், பிரம்ம சூத்திர பாஷ்யம், சூத்திர பாஷ்யம் என்ற பிரஸ்தானத்திரயத்தை இயற்றினார். இதில்

சூத்திர பாஷ்யம் என்பது தச உபநிஷதங்கள் எனப் படும். ஈச—கேன—கட—பிரச்ன—முண்டக—மாண் டூக்ய—தைத்ரிய—ஐத்ரேய—சாந்தோக்கிய —பிரஹதா ரணியக உபநிஷத்துக்களுக்கும் எழுதிய உரையாகும். சீடர்கள் வரைந்து எழுத, உரைத்து வந்ததால், அந்தப் பாஷ்யங்கள் நன்கு எழுதப்பெற்று முடிந்தன. பிறகு அவர், அவற்றைத் தமது சீடர்களுக்கு முறைப்படி போதித்துக் கொண்டு, இமயமலைச் சாரலிலிருந்து இறங்கி, நடந்து காசி மாநகரத்தை நோக்கி வருவா ராயினர்.

## காசியில் வியாச தரிசனம்

பின்பு சங்கரர் தமது சீடர்களோடு பதரியிலிருந்து இறங்கிக் காசி நகரத்துக்கு மீண்டும் வந்தார். அங்குப் பலப்பல மதவாதியரையும் கண்டு தமது அத்வைத சித்தாந்தத்தை விளக்கி வந்தார். ஒருநாள் அவர் தமது சீடர்களுக்குப் பிரம்ம சூத்திர பாஷ்யப் பாடம் உபதேசித்துக் கொண்டிருந்தார். அப்போது சங்கர ருக்குப் பதினாறுவது வயது நடந்து கொண்டிருந் தது.

அந்தச் சமயத்தில் வயோதிகப் பிராமணர் ஒருவர் அங்கு வந்து, "ஐய! நீர் உபதேசிக்கும் பொருள் யாது?" என்று கேட்டார். சங்கரர், "பிரம்ம சூத்திர பாஷ்யம்" என்றார். உடனே அந்த முதியவர், "நான் அந்தப் பிரம்ம சூத்திரத்திலேயே ஆழ்ந்தவன். பலப் பல பொருள்களைத் தெரிந்து கொண்டவன். ஆகை யால் நம் இருவர் கருத்துக்களும் இசைகின்றனவா என்று பார்த்துக் கொள்ளலாமா?" என்றார்.

சங்கரர், மகிழ்ச்சியுடன் இசைந்தார். பிரம்ம சூத் திரத்தின் மூன்றாவது அத்தியாயத்தைப் பற்றி விவா தம் தொடங்கியது. உடல் மரித்த பின்னர் ஆவி

---

* திருக்குறளின் கடவுள் வாழ்த்துப் பகுதி, பிரம்ம சூத்திர முதல் அத்தியாயப் பொருளேயாகும் என்பது குறிப் பிடத் தக்கது.

என்ன ஆகின்றது? என்பதைப்பற்றி விவரிக்கும் ததந்திரப் பிரகரணத்தில், முதியவர் பல சிக்கலான கேள்விகளைக் கேட்கலானார். சங்கரர் அற்புதமாக விடையளித்தார்.

இந்த விவாதம் தொடர்ந்தாற்போல நெடுநேரம் நடந்தது. அப்போது அங்கிருந்த சீடர்கள் பத்மபாதரை நோக்கி, "இந்த வயதில் இவ்வளவு விவாதம் செய்யும் அந்த முதியவர் யார்?" என்று கேட்டனர். பத்மபாதர் உள்நோக்கால் தமக்கு முன்பு இருந்த இருவரும் யாவர் என்பதை அறிந்து கொண்டார். வாதம் செய்யும் முதியவர் சாதாரண மனிதர் அல்ல. பிரம்ம சூத்திரத்தை எழுதியவர்—அவர். பதினெண் புராணங்களையும் இயற்றியவர்—அவர். மகா பாரதத்தை இயற்றியவர்—அவர். வேதங்களை வகுத்தவர்—அவர். அவர்தான் வியாசர்! என்பதைப் பத்மபாதர் புரிந்து கொண்டார். எனவே அவர், "நமது ஆசாரியர் பரமசிவனாகிய சங்கரரே! பிராமணரோ வியாசர் என்ற விஷ்ணுவே! இவர்களுக்கு இடையே நடக்கும் விவாதத்தில நான் என்ன செய்ய இருக்கிறது?" என்று ஒரு சுலோகமாகப் பாடினார்.

இவ்விதமாகப் பத்மபாதர் பாடியதும் சங்கரர் வியப்புற்றார். அதற்குள் விவாதமும் முடிந்துவிட்டிருந்தது. சங்கரர் முதியவரை வணங்கினார். அவர் முதியவரை நோக்கி, "நான் செய்துள்ள பாஷ்யம் தங்கள் இதயத்தில் உள்ளதையே அனுசரித்திருப்பதனால், தங்களது உண்மையான வடிவை ஏற்று, என்னை ஆசீர்வதிக்க வேண்டும்" என்றார்.

உடனே அந்த முதியவர் வியாசரானார். வியாசர் சங்கரரை நோக்கி, "இந்தச் சூத்திரத்திற்கு எத்தனையோ மறுப்புக்கள் எழலாம் என்று யோசித்த நான் அவைகள் யாவற்றுக்கும் அதிலேயே சமாதானத்தையும் பொதிய வைத்துள்ளேன். அவற்றை நீ உள்ளபடி உணர்ந்து, மறைந்திருந்த உட்கருத்துக்களை உன் வரையில் விளக்கியிருப்பது பாராட்டுதற்குரியது. நான் உகந்த பாஷ்யம் இதுவே என்று உலகம் அறிய வேண்டும் என்பதற்காகவே நான் உன்னைப் பரிசோதித்

தேன்" என்றார். அதற்குச் சங்கரர், "பாஷ்யங்களை இயற்றி விட்டேன். அவற்றை மக்கள் அறிந்து கொள்ள வேண்டும். எனக்கும் பதினாறு வயது நிரம்பி விட்டது. இந்த உலகைப் பிரியலாம் என்று நினைக்கிறேன்" என்றார்.

உடனே, வியாசர், "உரை எழுதினால் மட்டும் போதுமா? அதை உலகில் பரவச் செய்ய வேண்டாமா? அதை மக்களிடையே பரப்ப உன்னைத் தவிர ஒருவராலும் இயலாது; அத்துடன் பக்தி மார்க்கத்தையும் சீர்ப்படுத்த வேண்டும். பாமர மக்களுக்கு அவை தான் பயன்படும்" என்றார்.

இதனிடையில் பத்மபாதரிடம் இருந்த பாஷ்ய ஏடுகள் வியாசரிடம் சமர்ப்பிக்கப்பட்டன. அவர் மனம் உவந்து அந்தச் சுவடியைத் தம் மார்போடு அணைத்துக் கொண்டு, "நமது குரு பரம்பரையில் உனக்கு வாய்க்கும் பெருமை வேறு எவருக்கும் வாய்ப்பதரிது. நீயே ஜகத் குருவாக விளங்குவாயாக!" என்று ஆசீர்வதித்தார்.

அப்பொழுது சங்கரர், அவரை நோக்கி, "மாமுனிவரே! இன்றோடு என் காரியம் நிறைவேறி விட்டது. இனி இவ்வுடலைக் களைந்து என்னிடம் சேர வேண்டும். அதற்கு நீங்களே அருள் புரிய வேண்டும்" என்று கூறி வணங்கினார். அதற்கு வியாசர், "ஐய! உனக்கு இறைவன் அருளிய ஆண்டுகள் அனைத்தும் நீ துறவு பூண்டதால் அந்த வகையில் இன்றோடு முற்றுப்பெறுகின்றன. உலகம் உய்ய நீ செய்த திருப்பணியை உலகம் உணரும் பொருட்டு, நீ இந்நாடெங்கும் மடங்களை நிறுவ வேண்டும். வேதமார்க்கம், ஞானவொளியோடு நிலைபெற ஆவன செய்ய வேண்டும். இவையெல்லாம் நிறைவேறும் பொருட்டு, இன்னும் பதினாறு ஆண்டு இவ்வுலகில் நீ வாழ்வாயாக!" என்று ஆசீர்வதித்து மறைந்தார்.

சங்கரர் எழுதிய பாஷ்யங்கள் வடமொழியில் இயற்றப்பட்டுள்ளன. அவற்றின் சொல்லழகும், பொருளாழமும், அறிவுக் கூர்மையும் உலகெங்கிலுமுள்ள

பேரறிஞர்களையும் வியப்பில் ஆழ்த்துவன. அதன் நடையைப் 'பிரசன்ன கம்பீர நடை' என்று வடமொழிப் புலவர்கள் கூறுவர்.

இது நிற்க, வியாச தரிசனத்திற்குப் பிறகு, சங்கரர் தமது திக்விஜயத்தைத் தொடங்கினார். கிழக்கு நோக்கிப் பயணப்பட்டார்.

## பிரயாகை அடைதலும் பட்டர் தரிசனமும்

சங்கரர் தமது சீடர்களுடன் பிரயாகையை அடைந்தார். கங்கையும், யமுனையும், கண்ணுக்குப் புலனாகாத அந்தர் வாஹினியான சரஸ்வதியும் கலந்து ஓடும் திரிவேணி சங்கமத்தில் விதிப்படி ஸ்நானம் செய்து, அந்த நதிக்கரையில் இருந்த ஒரு மரத்தடியில் அமர்ந்தார். அப்பொழுது, பிரயாகை முழுவதும் ஒரு செய்தி, காட்டுத் தீப்போல் பரவியது. அதாவது குமாரிலபட்டர் என்பவர் துஷாக்கினிப் பிரவேசம் செய்திருக்கிறார் என்ற செய்தி பரவியது.

யார் இந்தக் குமாரிலபட்டர்? துஷாக்கினிப் பிரவேசம் என்றால் என்ன?

"துஷம்" என்ற வடமொழிச் சொல்லுக்கு 'உமி' என்று பொருள். உமியை நிறையச் சேகரித்து, அதில் நெருப்பிட்டு, அந்தத் தீயில் பாய்ந்து உயிரை மாய்த்துக் கொள்வதுதான், துஷாக்கினிப் பிரவேசமாகும். அத்தகைய கொடிய மரணத்தைத் தாமாகவே ஏற்றுக் கொண்ட குமாரிலபட்டர் எதற்காக அவ்விதம் செய்ய வேண்டும்? குருத் துரோகம் செய்ததற்குத் தண்டனையாகவே, அவர் இந்தத் தண்டனையைத் தாமாகவே நிறைவேற்றிக் கொள்ள முனைந்திருந்தார். அவர் ஏன் அப்படிச் செய்ய முனைந்தார்? அதையும் அறிவோமாக.

குமாரிலபட்டர் என்பவர் வேதத்தின் ஒரு பிரிவாகிய, கர்ம காண்டத்தை மட்டுமே ஆதரிக்கும் பூர்வ மீமாம்சைக் கொள்கைக்காரர். இந்தக் கொள்கையின் ஸ்தாபகர்—ஜைமானி முனிவர்.

இந்தப் பூர்வ மீமாம்சகர்கள் வேதத்தில் கூறி யுள்ள சடங்குகளையே தவருமல் செய்வார்கள். வேதமே பிரமாணம் என்பதால் ஈசுவரன் ஒருவன் இல்லை என்று அவர்கள் வாதஞ் செய்வர். எனவே, அவர்களுக்குக் கடவுள் கிடையாது. கடவுள் என்று ஒருவர் இருந்தால் நன்மையும் தீமையும் ஏன் வந்தன?'' என்பர். மனித இனத்தைப் போலவே தேவர்களும் இருப்பதாக அவர் கள் ஒப்புக் கொள்வார்கள். தேவர்களுக்கு அவிர்ப் பாகம் அளிக்க யாகயக்ஞங்கள் செய்வார்கள். ஆயினும் பயனை அளிப்பது யாகம் என்ற கர்மமே யாகையால், அந்தப் பயனையளிப்பது தேவர்கள் அல்ல என்பர். செயலற்ற உபநிஷதங்களை அவர்கள் ஏற்ப தில்லை. ஆன்மாக்கள் பலப்பல. வேதம் சொல்லும் கடமைகளை விருப்பு வெறுப்பு இன்றி ஆற்றி வந்தால் வினைப்பயன் அழிந்து பிறப்பற்றவராகலாம் என்பது அவர்களது வாதம். ஆன்ம விடுதலை என்ருல் என்ன? அந்நிலையில் ஆன்மா என்ன ஆகிறது என்பதையெல் லாம் மீமாம்சைக்காரர்கள் விவாதிப்பதில்லை. வேத மந்திரங்களுக்கு எவ்விதம் பொருள் கொள்ள வேண்டும் என்று ஆராய்வதுதான் மீமாம்சையின் நோக்கம். வேத ரீதியான அனுஷ்டானங்களில் எது அவசியமானது என்பதை மீமாம்சை முடிவு செய்யும். ஆனுல் வேதங் கூறும் கடவுளை மட்டும் அவர்கள் ஏற்பதில்லை.

இந்நிலையில் பௌத்தர்கள் வேத அனுஷ்டானங் களை வெறுத்தும் பகைத்தும் கண்டித்தும் வந்தனர். வேத அனுஷ்டானங்களை வலியுறுத்திய மீமாம்சகர்கள் பௌத்தர்களுக்குப் பகைவராயினர்.

குமாரிலபட்டர் மீமாம்சைக்காரராக இருந்ததால் புத்தமதக் கொள்கைகளை நன்ருகக் கற்றறிந்து கொண்ட பின்னர், அவர்களை வாதில் வென்று அழித்துவிட வேண்டும் என்று திட்டமிட்டார். அதற் காகவே அந்த மதக் கோட்பாடுகளைக் கற்றுத் தேர்ந் தார். அவருடன் இருந்த பௌத்த பிட்சுகளுக்கு நாளடைவில் உண்மை தெரிந்து விட்டது. அவர்கள் குமாரிலபட்டரைத் தமது புத்த விஹாரத்தில் வைத் திருப்பதே தவறு என்று கருதினர். அதுமட்டுமல்ல; அவரை ஒழித்து விடவும் முடிவு செய்தனர்.

எனவே, அவர்கள் அவரை நயவஞ்சகமாகப் புத்த விஹாரத்தின் ஏழாவது மாடத்திற்கு அழைத்துச் சென்று, அங்கிருந்தபடியே அவரைக் கீழே தள்ளி விட்டனர்.

"வேதங்கள் உண்மையானால் என் உயிர் போகக் கூடாது!" என்று எண்ணியபடியே கீழே விழுந்த குமாரிலபட்டருக்கு ஒரு காயம்கூட உடலில் ஏற்பட வில்லை. ஆயினும் அவரது கண்களில் ஒன்றில் கல் ஒன்று பொத்துக் கொண்டு காயம் ஏற்படுத்தியிருந் தது. அவர் வேதத்தை நம்பினார். ஆயினும் அதையே பரிபூரணமாக நம்பவில்லை. அதனால்தான் அவர் உயிரும் உடலும் பிழைத்தது; கண் மட்டும் ஊனப் பட்டது.

தம் ஊனக் கண்ணாலும், பகுத்தறிவாலும் காண முடியாத தத்துவங்களை, வேதங்களை இயற்றிய மாமுனிவர்கள் தமது ஆன்ம உணர்வினாலும் சித்தத் தெளிவினாலும் வெளியிட்ட உண்மையுணர்வுகளை, ஞானத்தால் விளக்கியிருப்பதைவிட நம்பிக்கைக்கு உகந்தது வேறெதுவும் இல்லை என்பதைக் குமாரில பட்டரால் அறிந்துகொள்ள இயலவில்லை.

குமாரிலபட்டர், பூர்வ மீமாம்சகர்களில் ஒரு பெருந் தலைவராக விளங்கியவர். தலைவராக அவர் இருந்த ஒரே காரணத்தாலேயே, தமது கொள்கைதான் சிறந்த கொள்கை என்பதற்காக, அதையே உண்மையென உலகுக்குப் போதித்து வந்தார். எத்தகைய உண்மை யும் சமய சந்தர்ப்பங்களில் பொய்யாகிவிடும் என்பதை அவர் தமது வாழ்நாளிலேயே உணர்ந்து விட்டார். ஆயினும் தம் தலைமையைப் பாதுகாப்பதற்காகத் தாம் கபடமாக நடந்ததையெல்லாம் எண்ணினார். அன் புடன் பழகிய பௌத்தர்கள், வேதங்களின் தர்மானுஷ் டானங்களையே கண்டித்தனர். அவரோ வேத அனுஷ் டானங்களையே சிறந்தவையென அவர்களிடம் வாதிட்டு வென்றவர். அனுஷ்டானங்களைவிட அனு பவமும் ஞானமும் கடவுள் தத்துவத்தை விளக்க வல்லன என்பதை அவர் தமது அனுபவத்திலேயே புரிந்து கொண்டார். "நன்மை செய்தால் நன்மை

விளையும்; தீமை செய்தால் தீமைதான் விளையும்'' என்று கர்மவாதம் செய்த அவர், நடந்தவற்றுக்குத் தாமே முடிவு காண முனைந்து விட்டார். அதன் விளைவாகத்தான் துஷாக்கினிப் பிரவேசம் செய்ய லானுர்.

புத்தவிகாரத்திலிருந்து கீழே விழும்போது தம் உயிரைக் காப்பாற்றத் தம்மால்தான் முடியும் என்ற கர்மவாதியான அவர், தம்முயிரைத் தம்மால்தான் போக்கிக் கொள்ளலானுர். உமிக்காந்தல் தீயில் இறங் கிறுர். மனவேக்காட்டில் இருந்த அவரது போக உடலை, உமித்தீ கருக்கி வேக வைத்துக் கொண்டிருந் தது.

அந்த நிலையில்தான் சங்கரர் அவரைக் காண விரைந்தார்.

சங்கரர் குமாரிலபட்டரைக் காண விரைந்ததற்குக் காரணங்களும் இருந்தன. முதலாவதாக குமாரில பட்டர் அந்த நாளைய பௌத்தர்களை வாதத்தில் வென்ற ஒரு பெரிய அறிஞர். அத்தகைய அறிஞரோ, வேதத்தில் ஒரு பிரிவான கருமத்தையே பெரிதாகக் கருதியவர். ஆகவே அவரையே வேதத்தின் மறு பிரி வாகிய ஞானத்தையும் ஒப்புக் கொள்ள வைத்தால் தமது அத்வைதக் கொள்கை வலுப்படுவதோடு வைதீ கத்திலுள்ள இரு பிரிவுகளையும் இணைத்துவிடும் வாய்ப்பை ஏற்படுத்த முடியும் என்று கருதினுர்— சங்கரர். அதனுல்தான் சங்கரர், குமாரிலபட்டரின் இல்லம் நோக்கிச் சென்றுர்.

உமிக்காந்தல் தீயில் வெந்து கொண்டிருந்த குமாரிலபட்டர், சங்கரரை வரவேற்றுர். தமது உடல் அணு அணுவாக உமித்தீயில் கருகிக் கொண் டிருக்கும் நிலையிலும், அவர் சங்கரரின். கொள்கையைப் பற்றித் தெரிந்து கொள்ளவும், அவருடன் வாதமிட்டு உண்மையை அறிந்து கொள்ளவும் ஆவலுடன் இருந் தார்.

ஆதிசங்கரர் தமது மதத்தை அவருக்கு விவரிக்கத் தொடங்கினுர்.

பூர்வ மீமாம்சைக்கும் அத்வைதத்திற்கும் இடையே யுள்ள ஒற்றுமை வேற்றுமைகளைச் சங்கரர் விளக்கிச் சொல்லச் சொல்ல, குமாரிலபட்டர் உமிக்காந்தல் தீயானது தம்முடலை எரித்துப் பொசுக்குவதையும் மறந்த நிலையில், உண்மையை உணரும் ஞானத்தில் கேட்டுக் கொண்டிருந்தார்.

அத்வைத சாஸ்திரம் வேத கர்மங்களையும் அவற்றின் அனுஷ்டான முறைகளையும் ஏற்கிறது. அவை உள்ளத் தூய்மையை அளிப்பதற்குத்தான் உதவுவன. ஆனால் அவையே மோட்சத்திற்குரிய நேரான உபாயங்களல்ல. தூய்மையான உள்ள நிலையில் ஆத்ம விசாரணை செய்து, பரம்பொருளுடன் இரண்டறக் கலப்பதுதான் மோட்சம். அதை, உபநிஷதங்கள் கூறும் ஞான வழியில்தான் பெற முடியும் என்பது அத்வைத சித்தாந்தம்.

சகல காரணங்களுக்கும் ஒரு மூல முழுமுதற் காரணம் உண்டு. அதை அறிவது என்பது அதுவாகவே ஆவதுதான். அந்த அனுபவ நிலையில் காரியமே இல்லாமற் போவதால், கர்ம மார்க்கக்காரர்கள் கருதுவது போலக் காரணமே தன்னால் காரியத்தை உண்டாக்கிவிட முடியாது. பிரம்ம ஐக்கிய நிலையில், இந்தக் காரிய காரணப் பிரபஞ்சமே ஒரு பொய்த் தோற்றமாகி விடும். ஆகவே, கர்மம், பக்தி, யோகம், ஞானம் ஆகிய யாவுமே பரம நிலையை அணுகுவதற்குத்தான் வகுக்கப்பட்டன.

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முப்பெருந் தொழில்களும், உலகம் மெய் என்று காணும் வரையில் தான். ஆகையால் தோற்றத்தால் காணப்படும் உண்மைகளின் நன்மை தீமைகள் பரம்பொருளையோ, பரம்பொருளின் உறவு கொண்ட பொருளையோ தீண்ட முடியாது.

எனவே, மீமாம்சகர்களின் கருத்துப்படி வேத வாக்கியங்களில், மக்களைச் செயல்படச் செய்யும் விதிகளும் விலக்குகளும் பொருளுடையன என்பது தவறு.

இகலோக வாழ்விலோ, அல்லது பரலோக வாழ விலோ இன்பம் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் ஒரு காரியத்தைச் செய்வதும் செய்யாமல் விலக்குவதும் நிகழ்கின்றன. காரியங்களையே கடந்து விட்டால் பேரின்பப் பயன் பெறலாம் என்பது வேதத்தின் ஞான காண்டக் கருத்து. கருமத்தால் கிடைக்கும் பயனைவிட கர்மமற்றிருப்பதாலேயே பெரும் பெயனை அடைவதை யார்தான் மறுக்க இயலும்?

உயிருள்ள எல்லாவற்றிலும் இருப்பது ஒரே ஆன்மா. அதை,அழியும் உடலமைப்புக்களின் காரியத் தால் கட்டுப்படுத்த இயலாது. ஆன்மாவில் உறைவதே பிறப்பைக் கழிக்கும் பேரானந்தமாகும். எனினும் சுய விருப்பு வெறுப்பு இன்றி வேதம் கூறும் கர்மங்களைப் புரிவதே, கர்மமற்ற பெருவாழ்வை எய்துவதற்கு முதற் படியாகும். கூரான ஊசி போன்ற ஒரு முள், காலில் குத்திப் பதிந்து விட்டதென்றால், கூரான உறுதி வாய்ந்த முள்போன்ற மற்றொரு ஊசியால் எடுத்து விட்டு, பின்னர், இரண்டு முள்ளையும் எறிந்து விடு கிறோம். அதுபோலவே, பழைய கர்மத்தால் ஏற்பட்ட பிறப்பின் தீயவினைப் பயன்களை, வைதீக கர்மத்தால் கெல்லி எறிவதோடு அந்தக் கர்மத்தையும் துறந்தால் பவப்பிணி நீங்கும்; தன்னிலே நிலைபெற்று விளங்க லாம். ஒரு காரியம் செய்பவனுக்கு, அவன் செய்யும் காரியம், அந்தக் காரியத்திற்கான சாதனம், சாதனை, அவற்றால் விளையும் பலாபலன்கள் ஆகியவற்றில் துன்பம், பயம் எல்லாம் ஏற்படுவது இயற்கை. இன்பம் ஏற்பட்டால், அதுவும் இறுதியில் நிலையாக இருப்ப தில்லை. எல்லாவற்றையும் தனதாகவும் தற்செயலாக வும் கருதும்போது, எதிலும் பயமோ அன்றிக் கோபமோ ஏற்படாது. அவை இரண்டும் ஏற்படாத போது துன்பமும் ஏற்படாது. அந்த நிலையை ஞான காண்டம் சொல்வதால்தான் மனம் உணர முடி கிறது.

எனவே, பயமும் துன்பமும் கோபதாபமும் அற்ற நிலையை அடைவது பயனில்லை என்று நீங்கள் கருதினால் ஒழிய, வேதத்தின் ஞான காண்டத்தைப்

புறக்கணிப்பதற்கில்லை'' என்று குமாரில பட்டரிடம் கூறினார்—சங்கரர்.

குமாரில பட்டரின் உடல் கர்மவயப்பட்டதால், நெல் உமிக் காந்தலில் கருகிவிட்டது. அவரது உள்ளமும் உயிரும் சங்கரர் கூறிய ஞானானந்தத்தில் லயித்ததால், உமிக் கனலின் வேக்காட்டைக் குமாரில பட்டரின் உடல் அனுபவித்தாலும், அந்தக் கர்ம அனுபவத் துன்பத்தை, ஞானானுபவ ஆனந்தத்தில் குமாரில பட்டர் அனுபவிக்கவில்லை. அவர் முகம் மலர்ந்தது. கர்ம காண்டத்தின் பயன் ஞான காண்டத்தில் முடிவதுதான், என்பதைத் தமது சொந்த அனுபவத்தில் உணர்ந்த குமாரில பட்டர், ஆதி சங்கரரின் அத்வைத தத்துவத்தைப் பரிபூரணமாக ஆதரித்தார். கர்ம காண்டத்தைப் பிரசாரம் செய்வதிலேயே தன் வாழ்நாளைக் கழித்த அவர், ஞான காண்டத்தைப் பிரசாரம் செய்வதற்குள், தன் கர்மமே தன் உடலை அழித்துவிட்டதை உணர்ந்தார். அவருடைய உடலின் பெரும் பகுதி உமிக் கனலில் கருகிவிட்டது. விரைவில் உயிர் போய்விடும் என்பதை உணர்ந்த அவர் சங்கரரை வணங்கி, ''ஐய! உங்களது உண்மையான தத்துவத்தை உலகுக்கு அறிவிக்க நான் சக்தியற்றவனாகி விட்டேன். நீங்கள் மாஹிஷ்மதி நகரில் மண்டன மிஸ்ர பண்டிதர் என்று ஒருவர் இருக்கிறார். என்னைக் காட்டிலும் அவர் தீவிரமான கர்ம வாதி. அவருடன் நீங்கள் வாதிட்டு உங்கள் தத்துவத்தை ஏற்குமாறு செய்தால் அத்வைதம் பரவும்'' என்று கூறி அடங்கினார். அவர் ஆவியும் பிரிந்தது. பிரயாகையில் இத்தகைய காட்சியைக் கண்ட சங்கரர், தமது சீடர் பலரை அவ்வூரிலேயே தங்கவைத்தார்.

பிறகு, சங்கரர், நர்மதை நதிக்கரையிலிருந்த ''மாஹிஷ்மதி'' நகரத்திற்குத் தமது சீடர்கள் நால்வருடன் புறப்பட்டார். விரைவில் நர்மதை நதிக் கரையை அடைந்தார். அந்த நதியில் நீராடினார். பின்னர், அந்நதியில் தண்ணீர் முகந்து கொண்டிருந்த சில மங்கையரிடம், ''மண்டன மிஸ்ரரின் வீடு எங்கே இருக்கிறது?'' என்று கேட்டார். அதற்கு அந்த மங்கையர்கள், அவர் கேட்ட கேள்விக்கு உடனே பதில் சொல்

லாமல், தமக்கிருந்த தத்துவ மொழிப் புலமையைக் காட்டும் விதத்தில் ஒரு சுலோகத்தைக் கூறினர். "ஒரு வீட்டுத் திண்ணையில் சில பெண் கிளிகள் வீற்றிருக்கும். அவற்றில் ஒன்று "தனக்குத் தானே பிரமாணமோ? வேறு பிரமாணம் வேண்டுமோ?" என்று கத்தும். இன்னொரு கிளி, "கருமமே பயன் தருமா? அல்லது கடவுள் தரவேண்டுமோ?" என்று கூவும். மற்றொரு கிளி, "இந்த உலகம் என்றும் இருப்பதோ, அல்லது தோன்றி வளர்ந்து அழிவதோ?" என்று கேட்கும். இவ்விதமாகக் கிளிகள் பேசிக் கொண்டிருக்கும் வீடுதான் மண்டன மிஸ்ரரின் வீடு. அவர் மனைவியின் பெயர் சரசவாணி. கரும காண்டத்தின் சூரியனை அவர் பெயரை நீங்கள் கேட்டதில்லையோ?" என்று கூறிச் சென்றனர். அந்த அளவுக்கு அவ்வூர்ப் பெண்கள் மொழியறிவும் கவிதைப் புலமையும் பெற்றிருந்தனர்.

அத்தகைய வீட்டைத் தேடிக்கொண்டு சங்கரர் தம் சீடர்களுடன் சென்றார். அந்த மங்கையர் கூறிய அடையாளங்களைப் போலவே ஒரு வீட்டுத் திண்ணையில் சில கிளிகள் வேத சாஸ்திர மகாநாட்டில் தர்க்கம் செய்பவர்களைப் போலப் பேசிப் பழகுவதைக் கண்டார். அந்த வீடுதான் தாம் தேடிய வீடு என்பதைத் தெரிந்து கொண்டார்.

வீட்டுக் கதவு தாளிடப்பட்டிருந்தது. வீட்டின் உள்ளே யிருந்து மந்திரங்கள் ஓதும் சப்தம் வெளியே கேட்டது. அந்த மந்திரங்கள் திவச மந்திரங்களாக ஒலித்தன.

சங்கரரைப் போன்ற துறவிகளுக்கு உலகக் கருமாக்களே கிடையாது. முந்தையோர்க்கும் மூதாதையர்க்கும் உயிர் நீத்தாருக்கும் செய்யும் பரலோகக் கர்மாக்களும் சந்நியாசிகளுக்குக் கிடையாது. கர்மவாதிகளான மீமாம்சகர்களுக்கோ, துறவிகளைக் கண்டாலே பிடிக்காது.

சங்கரர் அந்த வீட்டிற்குள்ளே போக எண்ணினார். வாயிற் கதவு, உள் தாளிடப்பட்டிருந்தது. அந்தத் தெருவில், அந்த வீட்டுத் திண்ணையை ஒட்டினாற்

போன்று ஒரு தென்னை மரம் ஓங்கி வளர்ந்து இருந்தது. சங்கரர் அந்தத் தென்னை மரத்திடம் சென்று மரமேறும் தொழிலாளி சொல்லிக் கொடுத்திருந்த மந்திரம் ஒன்றை ஓதினர். உடனே, அந்த மரம் அந்த வீட்டின் முற்றம் இருக்கும் இடம் நோக்கி வளைந்தது. சங்கரர் அதன் மீது ஏறி அந்த வீட்டின் முற்றத்தில் சப்தம் செய்யாமல் இறங்கினர். மரம் முன்போல நிமிர்ந்து கொண்டது. அந்த வீட்டினுள் திவசம் நடந்து கொண்டிருப்பதைச் சங்கரர் கண்டார். சிரார்த்த காலத்தில் சந்நியாசியைப் பார்த்தல் தகாது என்ற தம் கொள்கையைப் பெரிதும் மதிக்கும் மண்டன மிஸ்ரர், சங்கரரைக் கண்டார். கண்டதும் சினங் கொண்டார். சிரார்த்த தினத்தன்று, கோபம் வரக்கூடாதுதான். அவருக்குக் கோபம் வந்துவிட்டது. திவசப் பிராமணர்களைப் போஜனத்திற்கு அமர்த்திவிட்டு வந்த அவர், சங்கரரை நோக்கினர். அவரது கண்கள் கனன்றன.

மண்டனர்: ஐய! காவியுடை அணிந்த உமக்குப் பூணூலைச் சுமக்கும் வலிமை யில்லையோ. இயற்கையாக வளர்ந்த சிகையை ஏன் முண்டனம் செய்தாய்? பெண் வயிற்றில் பிறந்தாய்; பெண் வளர்க்க வளர்ந்தாய்; அப்படி இருக்க, பெண்ணை வெறுக்கும் துறவி வேடத்தைப் பேதைமையாலே பூண்டு விட்டாய்? அந்தோ யாகாதி காரியங்களைக் கை விட்டதால் வீரவதை செய்தவன் ஆகிவிட்டாயே! கல்வி, கேள்விகள் இருந்தும் இந்தக் கேடு செய்யத் துணிந்தாயே. இந்த வீட்டுக்குள் நுழைய வாயில் வழியிருந்தும் வான் வழியே ஏன் வந்தாய்? இது சிரார்த்த அக்கினி. இதன் முன்பு நீ நிற்பது தகாது. கலியுக தர்மம் ஒழித்தாய்! காவியுடை உடுத்தாய்! உன் தோற்றம் அழகாய் இல்லை. அது இருக்கட்டும். நீ எங்கிருந்து மொட்டை?" என்று கேட்டார்.

இந்தக் கேள்வியை எதிர்பார்த்தவரைப் போலச் சங்கரர், "கழுத்திலிருந்து" என்று புன்னகையுடன் கூறினர்.

சந்நியாசிகள் கழுத்துக்குக் கீழே வபனம் செய்து கொள்ளக் கூடாது. அதனால்தான் அந்தப் பதிலைச் சொன்னார்—சங்கரர். அதற்கும் ஒரு உட்பொருள் இருந்தது. வேத வாக்கியங்கள் மேலெழுந்த ஆராய்ச்சிக்கு உரியன அல்ல. அவை ஆழ்ந்த ஆராய்ச்சிக்கு உரியன என்பதைச் சிலேடையாகக் குறிப்பிட்டார்—சங்கரர்.

"நீ வந்த வழியைக் கேட்டேன்? நீ மொட்டையடித்திருப்பதைக் கேட்கவில்லை?"—என்றார் மண்டனர். சங்கரர் பேசலானார். "வாயால் வல்ல பண்டிதரே! நான் வந்த வழியைக் கேட்டாலே அது உமக்குப் பதில் சொல்லியிருக்கும். இருப்பினும் நான் சொல்லுகிறேன். மாளிகை வாயில் அடைபட்டிருந்ததால் வான்வழியே இறங்கினேன். "உள்ளத்தில் வைராக்கியம் பிறந்ததும் உலகைத் துறந்து ஓடுக" என்று வேதம் தெளிவாக உரைப்பதை நீங்கள் அறியவில்லையோ? பிறப்பை ஒழித்து நித்யானந்தம் பெற நினைப்பவர் பெண் இன்பத்தைப் பெரிதாக நினைப்பது இல்லை? அவர்களுக்கு உற்ற துணை, துணைவியல்ல; சந்நியாசம்தான். யோக ஞான வழிச் செல்பவர் கலியுகத்தைக் கிருதயுகமாகச் செய்துவிடுவர். போகமும் சம்சாரமுமே கதி என்று நினைப்பவர் காமக் கடலில் அழுந்துவர்.

ஐய! நீர் விருந்தினருக்கு அன்னமிடும் எண்ணமுமின்றி வீட்டு வாயிலை யடைத்தீர். ஆகையால் உமது மாளிகையினுள் மிக்க சிரமப்பட்டு நுழைந்தேன். வந்த என்னை வரவேற்க மனம் இன்றி நிந்தனை செய்கிறீர். "அதிதி தேவோ பவ:" என்று வேதம் கூறும் மெய்ம்மொழியை நீங்கள்தான் அறிவீரே! அதிதியாக வந்த யதியை அவமதிக்கலாம் என்று எந்தக் கருமகாண்டத்தில் விதித்துள்ளதோ? பிக்ஷாசர்யமே விரதமாகக் கொண்ட ஆத்மஞான பரம்பரையில் வந்தவன் நான்! பிச்சையிடவும் மனம் இன்றி வியாசர், ஜைமினி என்ற இரு பெரிய முதியவர்கள் முன் என்னை இகழலாமா?" என்றார்.

உடனே, போஜனத்திற்கு உட்கார்ந்திருந்த அவர்கள் சங்கரரைப் புரிந்துகொண்டனர். கர்ம காண்டத்தையே வலியுறுத்திய ஜைமினியோ, தமது சீடன் சிரார்த்த காலத்தில் கோபங்கொண்டு அதன் பயனை இழந்துவிடப் போகிறானே என்று வருந்தினார். எனவே, இருவரும் மண்டன மிஸ்ரரைச் சமாதானப் படுத்த முயன்றனர்.

வியாசர் :— "மண்டன! கோபம் வந்தாலும் சிரார்த்த காலத்தில் வரக்கூடாது. அதுவும் ஆத்ம ஞானியை இகழக் கூடாது. இவரையே சிரார்த்த காலத்தில், எம்மிருவருக்கும் பித்ருஸ்தானமும் விஸ்வதேவஸ்தானமும் அளித்தது போல, விஷ்ணு ஸ்தானத்துக்குத் தக்கவராகக் கொள்க.

ஜைமினி :—அதுவே என் கருத்து!

மண்டனர் :—அங்ஙனமே ஆகுக. யதிவரர், அடியேன் இல்லத்தில் இன்று பிக்ஷை ஏற்று அருளவேண்டும்" என்று கூறிச் சங்கரருக்கு விஷ்ணு இலையைச் சுட்டிக் காட்டினார்.

சங்கரர் :—மண்டன மிஸ்ரரை நோக்கி, "நான் வயிற்றுப் பிச்சைக்கு வரவில்லை. வாதப் பிக்ஷைக்கு வந்திருக்கிறேன். குமாரில பட்டர்தான் என்னை இங்கு அனுப்பி வைத்தார்!" என்றார்.

அதைக் கேட்டவுடனேயே மண்டன மிஸ்ரரின் முகமே மாறிவிட்டது. மட்டற்ற மகிழ்ச்சி கொண்டிருந்தாலும் அறிஞராயிருந்த அவர், சங்கரரிடம் அகம் பாவம் தொனிக்கப் பேசலானார்.

மண்டனர் :— "ஐயா வாதமோ வேண்டும்! வாதம் புரிய யாம் அஞ்சமாட்டோம். சிரார்த்த கர்மம் முடிந்த பிறகு நாம் வாதம் செய்யலாம். இன்றுவரை என்னை எதிர்த்து வெற்றி பெற்றவர் எவருமில்லை. நீ வென்றால் வேத மூர்த்தி என்றே உன்னை மதிப்பேன். இளம் பிள்ளையாகத் தோன்றும் உனக்குச் சாஸ்திர பரிசயம் எத்தனை ஆழம் அகலம் என்பது தெரியுமா? இல்லறமே நல்லறம் என்பது எனது கருத்து. துறவறத்தை நீ விரும்பி ஏற்றுக் கொண்ட காரணத்தையும் அறிவோம். கருமமே செய்வதற்கு உரியது.

கருமமே பயன் தரும்போது, கடவுள் ஒருவர் தேவை யில்லை என்பதே எனது மதம்.

வேதம் விதித்தது கருமமே! வேறு உள்ளனவெல் லாம் அதற்குத் துணைகளே. வெற்றி யாருக்கு வருமா யினும் இன்று வாதம் வேண்டாம். தேவதைகள் சபிப்பர். நாளைப் பார்ப்போம். இன்று பிக்ஷை நடக்கட்டும்.

**சங்கரர் :—** ஏனையா முதலில் தெய்வமே இல்லை என்கிறீர், இப்போது தேவர் சபிப்பார் என்கிறீர்கள். அந்தத் தேவர் யார்? அவர் சைவரோ, வைஷ்ண வரோ, வாதம் நாளைக்கே நிகழ்க.

**வியாசர்:—** மண்டன! இங்கு வந்திருப்பவரை யார் என்று நீ அறியவில்லை. ஏதேதோ பேசு கிறாய். நாளைக்கே உன் திறமையைக் காட்டுக. நானும் ஜைமினியும் உங்கள் வாதத்துக்கு மத் யஸ்தராக இருக்க வேண்டும் என்பதில்லை. தக்க நடுவரை நாளையே நியமித்து நீங்கள் வாதம் செய்யலாம். இப்போது சிரார்த்தம் நிறைவேறட் டும்.

மண்டனரும், சங்கரரும் அமைதி பெற்றனர். சிரார்த்தம் முறைப்படி நிறைவேறியது. வியாசரும், ஜைமினியும் எழுந்தனர். மண்டன மிஸ்ரர், அவர்களை நோக்கி, "ஐயன்மீர்! நாளை வாத சபையில் நீங்களே நடுவராக வீற்றிருந்து தீர்ப்பளிக்க வேண்டும்" என்று வேண்டினார். முனிவர்களோ, "மண்டன! உன் பத்தினி சரஸவாணி இருக்கிறாளே. அவள் ஒரு பண்டிதை. அவ ளையே மத்யஸ்தமாக வைத்துக்கொள்ளலாம். அவளே உங்கள் விவாதங்களைக் கேட்டு, அவற்றின் உண்மை களைச் சீர்தூக்கி முடிவு உரைக்க வல்லவள்" என்று கூறிவிட்டு அவர்கள் சென்றனர்.

## சங்கர மண்டன சம்வாதம்

உண்மையிலேயே, மண்டன மிஸ்ரரின் மனைவி யான சரஸவாணி, கலைமகளின் அம்சமாகவே திகழ்ந்து

வந்தாள். மறுநாள் மண்டன மிஸ்ரரின் மாளிகையின் நடுக் கூடத்தில், சங்கர மண்டன சம்வாதம் தொடங்கியது. சங்கரர், ஞான காண்டத்தைப் பற்றியும், மண்டனர் கர்ம காண்டத்தைப் பற்றியும் வாதமிடும் கருத்தரங்கிலே, சரஸவாணி நடுவராக இருக்க இசைந்தார். துறவறத்தின் தலைவரும் இல்லறத்தின் தலைவரும் புரிய நினைத்து முன் வந்த ஞான கரும வாதத்தைச் செவியேற்று முடிவு கூறும் பொறுப்பு, இல்லறத் தலைவியான சரஸவாணியிடம் இருந்தது.

அவள் சங்கரரையும் தன் கணவரையும் வணங்கி அவர்களுக்கு இருக்கை தந்து நடுநிலையில் வீற்றிருந்து "இனி வாதம் தொடங்குக" என்று கூறினாள். பாரதத்தில் புகழ் பெற்ற ஆதி சங்கரரும், மண்டன மிஸ்ரரும் வாதப் போர் புரியப் போவதைக் கேள்வியுற்ற ஊர் மக்களில் பல பெரியோர், வாத சபையில் கூடியிருந்தனர். அப்பொழுது அவைத் தலைமை வகித்த சரஸவாணி, சபையோரை நோக்கி, " பெருமக்களே! இங்கு நடைபெறவிருக்கும் வாத முடிவை அறிய வேண்டி, இங்கே துறவியர் பலரும் இல்லறத்தார் பலரும் கூடியிருக்கின்றனர். இருவகையாருக்கும் அவரவர்க்கு உரிய உபசாரங்களைச் செய்யும் பொறுப்புக் குடும்பத்தலைவியான எனதாகும். ஆகையால் நான் வாதம் முழுமையும் அமர்ந்திருந்து கேட்பது எளிதன்று. வாதிட முனைந்தவர்களில் ஒருவர் என் கணவர்; நான் மாலை சூட்டிய மனைவி. மற்றொருவரோ, நமது மதிப்புக்குரிய சந்நியாசி! அவரோ உலகறிந்த பெரியார். ஆகையால் நான் பாரபட்சமின்றித் தீர்ப்பளிப்பது என்பது எனக்கு ஒரு சிக்கலான பிரச்சனை. ஆகையால் நான் சிறிது நேரம்தான் இவர்கள் வாதத்தைக் கேட்க முடியும். பிறகு நான் என் கடமைகளை மேற்கொள்ளச் செல்வேன். எனவே இவர்களது வாதத்தில் தீர்ப்பளிக்க வேண்டிய பொறுப்பு என்னுடையதாக இருப்பதால், அதனைச் சிறப்பாக நிறைவேற்ற எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது. அதாவது இப்போது நான் தரும் மலர் மாலைகளை இருவரும் அணிந்து கொள்ள வேண்டும். மாலைகளை அணிந்துகொண்டே அவர்களே வாதிடட்டும். இரு

வரில் யார் வென்றவர், யார் தோற்றவர் என்பதை அவர் அவர் கழுத்தில் சூடிய மாலையே விளக்கிவிடும்.

அதாவது இந்த இருவரில் யார் கழுத்தில் உள்ள மலர் மாலை முன்னதாக வாடி விடுகிறதோ அவர்தான் வாதத்தில் தோற்றவர் ஆவார்," என்றாள்.

சங்கரரும் மண்டனரும் வாதஞ் செய்யத்தொடங்கு முன் ஒரு நிபந்தனை செய்து கொண்டார்கள். அதாவது "சங்கரர் வென்றால் மண்டனர் துறவியாவதோடு சங்கரரின் சீடர் ஆக வேண்டும். மண்டனர் வென்றால் சங்கரர் இல்லறம் ஏற்று மண்டனருக்குச் சீடர் ஆக வேண்டும்." இது அவர்கள் செய்துகொண்ட நிபந்தனை. வாதம் தொடங்கலாயிற்று.

**சங்கரர் :—** **சச்சிதானந்த உருவமான பிரம்மம் ஒன்றே உள்ளது; வேறு ஒன்றும் இல்லை. இது வேதத்தின் தலையாய விளக்கமாகும்.** கிளிஞ்சலில் வெள்ளி யிருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால், உண்மை, அதனை நெருங்கினால் தெரிந்துவிடும். கிளிஞ்சல் கிளிஞ்சலேதான். அதனில் வெள்ளி இல்லை என்பது உண்மை. அது போலவே உலகமாகவும் உயிர்ப் பன்மையாகவும் தோன்றுவனவெல்லாம் தோற்றமேயாகும். அந்தத் தோற்றங்கள் யாவுமே உண்மையல்ல. அவை மாயையின் சேட்டைகளே என்ற மெய்யுணர்வு பெறுவதுதான் கைவல்ய சித்தியாகும்.

**மண்டனர் .—** கரும பலனே முத்தி என்று நான் அழுத்தந் திருத்தமாகக் கூறுவேன். அது ஜீவர்களால், அவர்களது கர்ம முடிவிலே அடையப் பெறுவதாகும். இதுவே வேதத்தின் உண்மைக் கருத்தாகும் மோட்சம் அடைய விரும்புகிறவன் யாராயினும் அவன் தனது கர்மங்களைச் செய்ய வேண்டும்.

**சங்கரர் :—** 'யாகங்கள் செய்க' என்று விதிக்கின்ற வேத பாகத்தில், அதனால் கிடைக்கும் பயன் புனராவிருத்தி இல்லாத மோட்சம் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. பல்லாண்டுகளாக யாகாதி கர்மங்களைப் புரிந்து வந்துள்ள நீவிர், நாளைப் போய்ச் சேரப் போவது, சிவலோகமா? வைகுந்தமா? சுவர்க்கம்தானோ?

எது என்று உம்மை நான் கேட்கிறேன். யாகங்களுக்குப் பயன் தரும் இறைவன் ஒருவன் உங்கள் மதத்தில் உண்டா? இறைவனே இல்லை என்றால் உங்களுக்கு எந்த உலகம் கிடைக்கும்?

**மண்டனர் :—** வேத விதிப்படி யாகாதி கர்மங்களை ஒருவன் தொடங்கி, முறை வழுவாமல் நடத்தி முடிப்பானேயானால், அவனது வினைக்குத் தகுந்த பயனை அந்த வினையே உதவும். எனவே பயனை உதவுவதற்கு இறைவன் ஒருவன் வேண்டுவதில்லை.

**சங்கரர் :—** மண்டனரே! யாக பலனை அந்த யாகத்தின் அக்கினியே தருமா? அல்லது அக்கினியிற் சேர்த்த ஆகுதி தருமா? அந்த யாகம் தானாகவே பயன் தருவது எப்படி? கருமங்களை நீர் ஜடம் என்று சொல்கிறீரா? சக்தியுள்ளதான சித்து என்று கூறுகின்றீரா? ஜடமாய் இருந்தால் அதற்குப் பயன் தரும் சக்தி யிருக்குமா?

**மண்டனர் :—** விதையை நிலத்தில் விதைத்தால் அது விருட்சமாக வளர்ந்து கனியை உதவுகிறதல்லவா! அப்படி யிருக்கக் கனியை உதவுவதற்கு வேறு ஒரு கர்த்தாவின் உதவி வேண்டுமோ? விதையினிடமே இயற்கையாக அமைந்துள்ள விளை நிகழ்ச்சியே பயனை விளைவிக்கின்றது என்பது வெளிப்படையான உண்மை. மழை பொழிந்தால், வான் வெளியிலே சூரிய சந்திரன் சஞ்சாரஞ் செய்தால், நிலத்தில் நட்ட எந்த விதையும் தானாக வளர்ந்துவிடும். மழையும் ஜடம்; வானும் ஜடம்; சந்திரனும் ஜடம்; சூரியனும் ஜடம். அப்படியே நிலத்தில் நட்ட விதையும் ஜடமே. ஆயினும், அது தனக்குத் தானாகவே முளைக்கின்றது; வளர்கின்றது; பயன் தருகின்றது. கருமம் ஜடமே யாயினும் அது தன் பயனைத் தானாகவே தருகின்றது. இதற்குக் கர்த்தா ஒருவன் தேவையும் இல்லை; வேண்டுவதும் இல்லை.

**சங்கரர் :—** சினை முட்டையுள் எழுந்த கருவும் தாய் வயிற்றினில் உள்ள கருவும் தன் நினைப்பாலேயே வளருமா? தாய் நினைப்பால் வளருமா? கடவுளின் செயலால் வளருமா? கர்மத்தால் வரும் பயன்

சித்தத் தூய்மை. சித்தத் தூய்மையால் ஞானம் வெளிப்படும். ஞானத்தால் வருவதுதான் மோட்சம். நைஷ்காமிய சித்தியின் பிறகே தத்துவ ஞானம் உண்டாகும். அதுவே மோட்சத்தைத் தரவல்லது யாகாதி கர்மங்களைச் செய்பவர்கள் அவற்றில் வரும் பயனையே அடைவர். கர்மம் அழிவது போலவே கர்மத்தால் வரும் பயனும் அழிவுள்ளதேயாகும். சுவர்க்கத்தில் பல நூற்றாண்டுகள் வாழ்ந்தாலும்கூட அது பரம கதியோ? பரம ஐக்கியமோ ஆகி விடுமோ? புனராவிருத்தி இல்லாத முக்தி பதம் ஆகுமா? எத்தனை காலம் சுவர்க்கத்தில் வாழ்ந்தாலும் புண்ணியம் குறைந்ததும் பூமிக்கு வந்து பிறக்கத்தானே வேண்டும். கருமம்தான் முக்தியைத் தரும் என்று எத்தகைய சொற் சாதூரியத்தாலும் வாதம் செய்ய முடியாது! கருமப் பயன் இவ்வளவு என்று தெளிந்ததும் நிஷ்காமியமான கர்மங்களை இயற்றவே மனம் விரும்பும். நிஷ்காமிய கர்மம் பந்தங்களையும் விளைவிக்காது. அது ஞானத்திற்குச் சாதனமாகும். சிவ கதி, பரம பதம், மோட்சம் என்று உரைக்கப்படும் நிலையும், நிலைமையும் கர்மத்தாலே சித்திக்கும் என்று வேத வாக்கியங்களைக் கொண்டு உங்களால் சாதிக்க முடியுமா? நிரூபிக்கத்தான் முடியுமா?

**மண்டனர் :—** யதிவரரே! ஜீவனும் பிரமமும் ஒன்று நீங்கள் துணிந்து கூறுகின்றீரே? வேத வாக்கியங்களால் உங்கள் கொள்கையைச் சாதிக்க இயலுமா? கர்மம் ஒழிந்த பிறகு வருவதுதான் ஞானம் என்று கூறினீர்கள். ஞானத்தின் சிறப்பை நான் அறியவும் காணவும் விரும்புகின்றேன். ஞானம் என்பது வருவதுண்டா? அது வளர்வதுண்டா? வருமேயானால் அது வருவதற்கு முன்பு எங்கே இருந்தது? பிறப்பு உண்டு என்றால், இறப்பும் உண்டல்லவா? பிறந்து அழியும் பொருளில் முக்திப் பதம் பெறுவது என்பது அரிது என்று கூறினீர்கள் அல்லவா? உமது கருத்து எனக்குத் தெளிவாக விளங்கவில்லையே. விளக்கிச் சொல்வீர்களா?

**சங்கரர் :—** உபநிஷ மந்திரப் பாகத்திலே அத்வைத வஸ்துவாகிய பிரம்மத்தைப் பற்றிப் பேசப்பட்டுள்ளது.

ஆன்மா அதுவே. பிரம்மம் அதுவே. உபநிஷத்தே வேத சிரசு என்று கூறுவதையும் நீங்கள் கேட்டதில்லையோ? பிரம்மம் உண்டு என்று ஸ்தாபிக்க வேத சிரசே பிரமாணம் ஆகும். வேறு பிரமாணம் வேண்டாம். ஜீவன் என்றும் ஈசன் என்றும், சிறியது என்றும் பெரியது என்றும் இரண்டு இல்லை. போக்கு வரவு இல்லாத ஒரு பரம் பொருளே உள்ளது. அது புதியதும் இல்லை. பழையதும் இல்லை. எங்கும் என்றும் தடைப்படாத குறைவில்லாத சத்தியமே—அது. பேரறிவே அதன் உருவம். அதுவேதான் பேரின்பம். பெறுவதற்கு அரிய சிதானந்தப் பிழம்பாய் அதனை அறிய முயல்பவரே அடைவார். பிறர் எல்லாம் தமது சிற்றறிவுக்கு எட்டிய அறிபொருள்களால் மயங்குவது உண்டு. பிரம்மமே ஞானம்; ஞானமே ஆன்மா. ஆன்மானுபவமே ஞானனந்த சித்தியாகும்.

பிரம ஞானம் வருவது என்று உரைப்பது திரிபுணர்ச்சியே யாகும். அது வருவதும் இல்லை, மறைவதும் இல்லை. வளர்வதும் இல்லை; குறைவதும் இல்லை. தோன்றி மறைவதும் இல்லை. ஒளியுருவமான உண்மை அறிவு, இடையில் எழுந்த மறைப்புக்களால் மறைந்திருக்கிறது. இந்த மறைப்பு அகன்றதும் அது தானே வெளிப்பட்டுவிடும். எண்ணற்ற வாயில்களும் சாளரங்களும் அமைந்த ஒரு மாளிகையை அடைத்து வைத்தால், அதன் உள்ளே ஒளி புகுவதற்கு வழியுண்டோ? நண்பகற் பொழுதில் அந்த மாளிகையின் உட்புறத்தே இருள் நிறைந்திருக்கும் என்பது நமக்குத் தெரிந்ததுதானே. கதவுகளையும் சாளரங்களையும் திறந்து விட்டால் அம்மாளிகையின் உட்புறமும் ஒளி பெற்று வெளிப்புறமிருக்கும் ஒளியோடு ஒளி மயமாகி விடுகிறதல்லவா! அதுபோலவே என்றுமே உள்ள மெய்யறிவை மறைக்க எழுந்த மன மயக்கம் என்ற இருளையும் இருளாக்கும் ஒளித் தடைகளையும் ஒழிக்க முயல்வதே எவரும் செய்யத்தக்க செயலாகும். மன மயக்கம் ஓடவே கருமம் உதவுகிறது. உள்ளத்தில் மாசு நீங்கியதும் உள்ளேயிருக்கும் ஒளிமயமான மெய்யறிவு தன்னியல்புக்கு ஏற்ப விளங்கும். வேதங்கள் விளக்கிய மெய்ப்பொருள் இதுவேதான். ஞானத்

திற்குப் பிறப்பும் இல்லை ; மரணமும் இல்லை. இதுவே வேதாந்த சித்தாந்தம்.

**மண்டனர் :—** வேத சிரசில் வருகின்ற 'தத்வமஸி' முதலிய மகா வாக்கியங்கள் 'ஹூம்பட்' முதலிய மந்திரங்கள் போல உருவேற்றியவர்களுக்குக் கரும பந்தம் ஒழிய உதவும் மந்திரங்கள்தான் என்று கூறக் கூடாதோ ?

**சங்கரர் :—** வேதம் முழுவதும் ஓதியுணர்ந்த உங்களுக்கு, வேதத்தில் அர்த்தவாதமாக உள்ள வாசகங்கள் பலவும் உண்டு என்பது தெரியாமலா இருக்கும். ஹூம்பட், ஸ்வாஹா முதலிய பதங்களுக்கு அர்த்தம் ஒன்றும் இல்லை என்பதை வேதம் பயின்ற அனைவருமே அறிவார்கள். 'அது நீ ஆவாய்' என்ற பொருளைத் தெளிவாக விளக்கும். 'தத்வமஸி' மகா வாக்கியமும் ஒரு பொருளும் தர இயலாத ஹூம்பட் என்ற மந்திரமும் சமமானதுதான் என்று கூறுவது உமது வேதப் படிப்புக்கும் வேத ஞானத்திற்கும் பொருத்தமாக இல்லையே !

**மண்டனர் :—** தத்வமஸி மகா வாக்கியம் ஜீவப் பிரம்ம ஐக்கியத்தைத்தான் உரைக்கிறது என்றாலும் கூட ஸ்துதி வாசகமாக யாகாதி காரியங்களைச் செய்த ஒருவனுக்குச் சிறப்புரைக்க அமைந்ததாக அவற்றைக் கொள்ளலாகாதோ ?

**சங்கரர் :—** வேதங்களில் உள்ள 'ஆதித்தியனே யூபம்' என்று உரைக்கும் வேத வாக்கியம், கர்ம காண்டத்திற்குத் துணை நிற்கும் ஸ்துதி வாசகமாக இருக்கலாம். 'தத்வமஸி' வாக்கியம் ஞானப் பிரகரணத்தில் வருவது என்பதைக் கர்ம காண்டப் பிரதிநிதியாகிய நீரும் ஏற்க வேண்டும்.

**மண்டனர் :—** மனம், அன்னம், ஆதித்யன், வாயு என்னும் இவைகளைப் பிரம்மாக உபாசனை செய்க என்று விதித்துள்ள சுருதிகளைப் போலவே, யாகத்திலே மனத்தை நிறுத்தி அந்த மகா வாக்கியம் எழுந்தது என்றே எனக்குத் தோன்றுகிறது. புகழ் என்ற பயனைப் பெறுமாறு ராத்ரிச் சத்ரயாகம் செய்யச்

சொல்லியிருப்பது, போலப் பிரமம் உணர்பவன் பிரமமே ஆவான் என்று கூறி ஒரு மகாயாகம் நடத்தி, அதை நிறைவேற்ற விதித்த விதி என்று அதனைக் கருத லாகாதா?

**சங்கரர் :—** ஐய! பிரமானுபவமானது கரும பயனுக விளையும் என்றும் நீங்கள் சாதிக்கத் துணிவீர் களானுல், கர்ம பயன்கள் எல்லாம் காலத்தில் அறிவது போலவே பிரம்மானுபமும் அறிந்தே ஆகவேண்டும். ஆனுல் பிரமானுபவமோ பிடிப்பதும் இல்லை, விடு வதும் இல்லை. பெறுவதும் இல்லை; இழப்பதும் இல்லை. **ஆகவே தத்வமஸி மகா வாக்கியம் கர்மகாண்ட சம்பந்தமுடைய தல்ல என்று துணிய வேண்டும்.** அதுவே முடிவு; அதுவே தீர்ப்பு.

**மண்டனர் :—** தத்வமஸி மகா வாக்கியம் உபா சனையை விதிக்கவில்லை என்ருல், சீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள சாமியத்தை உணர்த்துவ தாகக் கொள்ளக் கூடாதோ?

**சங்கரர் :—** சாமியம் என்று நீர் எப்படிக் கூறலாம்? சைதன்யத்தோடு ஜீவேசுவர சாமியம் கூறுகின்றீரா? சர்வஞ்ஞத் தன்மையோடு கூறுகின்றீரா? ஜீவனிலே சைதன்யம் உண்டு. தான் வேறு என்று உணரும் சக்தியும் உண்டு. ஈசனுக்கும் இந்தக் குணங்கள் உண்டு. இந்தக் காரணங்களால் இரண்டும் ஒன்ருகும் ஒக்கும் என்று நீர் கூறக் கருதுவீரானுல் அப்போதும் நீர் எமது கருத்துக்கே உதவியாகி விடுகிறீர். சர்வஞ் ஞத்வம் சர்வ வியாபகத்வம் என்ற இரண்டு பண்பு களும் இரண்டுக்கும் உண்டு என்ருல், பொருள் இரண்டு இல்லை; ஒன்றே பொருள்! என்ற முடிவு வரும். பிரம வஸ்து வேறு, ஜீவன் வேறு என்று சாதிக்கத் துணிந்த நீர் அந்தப் பேதத்தை ஒழிக்கும் சுருதி வாக்கியத் தையே சரணடைந்து கொண்டே, கீழே விழுந்தாலும் அதை ஏற்காமல் பேசுகின்றீர்.

**மண்டனர் :—** பிற மதவாதிகள் அணுவும் பிரகிருதி யும் காரணமாம் என்று கூறுவர். அவை ஜடமே யாகும். அணுவும் பிரகிருதியும் நினைத்தால் அவை

உலகத்தையே படைத்துவிடும் என்று சொல்லும் வாக்கியமும் உண்டே!

**சங்கரர் :—** நினைப்பதும் படைப்பதும் ஜடத்தால் நிகழ முடியுமா? பரிபூரண ஞானமே பிரமம் என்றும், அது நீ நான் என்ற உணர்வுக்கும் அப்பாற்பட்டது என்றும் அறிவீராக. ஆகையால் அக்கருத்து மறுக்கப்பட்டு விடுவதால் மறைந்து விடும்.

**மண்டனர் :—** சீவ ஈஸ்வர அபேதம் சொல்வது பிரத்யக்ஷ ப்ரமாணத்தால் மறுக்கப்படுமே! சிறு குழந்தைக்கும் இந்தப் பேதம் தெரியும். "இறைவன் என்று ஒருவன் இருக்கின்றான். நான் அவனை வணங்குகிறேன். அவனே எனக்கு அருள் புரிகின்றான்" என்ற அறிவும் அனுபவமும் உலகில் யாவருக்கும் உண்டல்லவா? அப்படிப்பட்ட உலக மக்கள் உமது ஐக்கிய வாதத்தை எப்படி ஏற்பார்கள்? எல்லாம் வல்ல, எல்லாம் அறிந்த எங்கும் நிறைந்த பரம் பொருள் எங்கே? சிற்றறிவுத் துணையால் மயங்கி வருந்தும் உயிர் எங்கே? தொழுது உணர்வதற்கு உரிய பரம்பொருளை தொழுதே வாழப் பிறந்த ஜீவன் தனக்கு ஒப்பு என்று பிரம்மத்தை துணிந்துரைப்பது? வானத்துச் சூரியனை நிலவுலகில் ஒரு சிறு கண்ணாடியில் பிடித்து அடைத்து விடலாம். ஆயினும் பிம்பமும் பிரதி பிம்பமும் ஒன்றே என்று சாதித்து வாதமிடலாமா? சூரிய பிம்பம் பேரொளியைத் தருவதல்லவா. அந்தப் பிம்பம் பயிர்களை வளர்த்து உயிர்களை வாழ்விக்கும் சக்தியை உடையது. கண்ணாடியில் வீழ்ந்த அதன் பிரதிபிரம்பத்துக்கு இந்த ஆற்றல்கள் எல்லாம் உண்டா? ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றுவது எப்படி?

**சங்கரர் :—** மண்டனரே! நன்று உரைத்தீர்! ஞான நிலையிலே அனுபவிக்க வேண்டிய ஐக்கிய பாவத்தை உலக நிலையில் அடைதல் இயலுமா? 'யான் பிரமம் என்ற உணர்வு எளிதில் வராது. அதனால், "ஈசன் இருக்கின்றான். நான் அவன் அடிமை; பக்தன்" என்ற நினைப்புத்தான் மனிதனின் சிற்றறிவிலே தோன்றும். பிம்பம் என்ற சூரியனே இறைவனின் பிரதி பிம்பம். பிரமத்தின் பிரதிபிம்பம் ஆகியவன்தான்

சூரியன். சூரியனையே பிம்பமாக நீங்கள் சொல்வதானது கடற்கரையிலே ஒரு கிளிஞ்சலைக் கண்டெடுத்த ஒரு சிறுவன். "இது வெள்ளி" என்று நினைத்து இன்புறு வதைப் போன்றது. காற்றால் அசையும் கயிற்றைப் பாம்பு என்று கருதுவதும் உண்டு. உண்மை வெள் ளியை அறிந்திருந்தால், கிளிஞ்சல், வெள்ளி என்ற நினைவே மறைந்து விடும். ஒரு பொருளைப் பற்றிய மெய்யான தத்துவ ஞானம் உண்டாகும் வரையில் உலகில் ஜீவ ஈஸ்வர பேதம் இருப்பது இயற்கையேயாகும். "அது உன்னைப்போல் உள்ளது" என்றும், "நீ அதற்கு நிகர்" என்றும் சொல்லாத வேதம் "அது நீயாவாய்" என்று மட்டும் மிகத் தெளி வாகச் சொல்லுகிறது அல்லவா! பிரத்தியக்ஷ பிரமாண மாகவும் உறுதியாகவும் உணர்ந்த பொருள், உண்மை என்று துணிவோமாயின், ஆகாயமும் பூமியும் ஒட்டி யிருப்பதாகத் தோன்றும் இடத்துக்கு அருகே நடந்து, அதனை அறிந்த மனிதர் யாரேனும் உண்டா? கான லிலே தண்ணீரைக் கண்ட மிருகங்கள் நெடுந்தொலைவு நடந்து அங்கு உண்மையில் தண்ணீர் இல்லை; அது வெறும் உருவெளித் தோற்றமே என்பதை அறி கின்றன. பழுதையைப் பாம்பாகப் பார்ப்பதும் ஒரு நிலையில் ஒரு உண்மை. "இது பழுதையே தவிரப் பாம்பு அல்ல" என்று அறிந்து உணர்வதும் ஒரு நிலையில் ஒரு உண்மையே. ஒன்று உலக அறிவு (வியாவஹாரிக சத்து) ஆகும். மற்றொன்று உண்மை யறிவு (பாரமார்த்திக சத்து) ஆகும் இடம், காலம் முதலிய எதனாலும் பழுதுபடாத உண்மையே பார மார்த்திக சத்தியமாகும். அதுவே சத்தியம். தோன்றி மறையும் உண்மை எல்லாம் உலக உண்மையாம். வியவஹாரிக சத்திய உணர்வு, பாரமார்த்திக சத்திய ஞானம் வந்ததும் பறந்து ஒழிந்துவிடும். என்றும் அழி யாத பொருளாகவும், இணையற்ற பேரொளியாகவும் இருக்கும் ஒரே பொருள்தான் 'அது—நான்' என்று அனுபவிக்கப்படுவதாகும். இந்த உணர்வு வெளிப் பட்டதும் உயர்வு தாழ்வுகள் இராது. உடம்பு இல்லை, வினை இல்லை; வாழ்வு இல்லை, நன்மை தீமை யில்லை. பாவ புண்ணியம் இல்லை. அந்தத் திவ்ய ஞானமே சத்தியம். அந்தத் தத்துவமே பிரமம்!

## சரஸவாணியின் தீர்ப்பு

இவ்விதமாகச் சங்கரமண்டன சம்வாதம் தொடர்ந்தாற்போல ஆறுநாட்கள் நிகழ்ந்தன. பொதுவாக வாதப் பிரதிவாதம் நிகழும்போது ஒரு கட்சியைச் சார்ந்தவருக்குக் கோபமும் தாபமும் தோன்றுவது மனித இயல்பு. மனித இயல்புகளுக்குரிய செயல்களே நிரந்தரமானவை என்று வற்புறுத்திய கர்ம உடல் கொண்ட மண்டன மிஸ்ரரின் உடல், வாதமிடும் சூட்டினால் கணகணப் புற்றதால் அவர் அணிந்திருந்த மலர்மாலை வாடிக் கருகி விட்டிருந்தது. சூடேறிய உள்ளத்தில் எழுந்த அவரது உணர்ச்சிகளால் அவர் உடல் சூடேறியதால் அவர் அணிந்த மலர் மாலை கருகியது. குளிர்ந்த இதயமுடைய சங்கரரின் மார்பில் அணிந்த மாலையின் மலர்கள், செடிகளில் அன்றலர்ந்த மலர்களைப் போல ஆறு நாட்களாகியும் வாடாமல், வதங்காமல், கருகாமல், புத்தம் புதிய பொலிவுடன் நிரம்பிய மணத்துடன் இருந்தன. எனவே, மண்டனர் அணிந்த மலர் மாலை வாடியதால் அவர் தோற்றதாக நடுவர் தீர்ப்புக் கூறி விட்டார். தீர்ப்புக்குப் பாரபட்சமேது? எனவே, மண்டனர், சங்கரரிடம் சந்நியாச தீட்சை பெற்று, அத்வைதத்தைப் பிரசாரம் செய்யும் சீடராவதற்குத் தயார் ஆனார்.

சரஸவாணிக்கோ தன் கணவன் தோற்றதைவிட, அவர் சந்நியாசம் ஏற்க வேண்டி வந்த நிலைக்காக வருந்தினாள். கணவன், மனைவியைத் துறக்கலாம். தன்னால் எப்படிக் கணவனைப் பிரிந்து வாழ முடியும் என்ற எண்ணம் சரஸவாணிக்குத் தோன்றியது. அவள் எப்படியாவது தன் கணவனைச் சந்நியாசம் ஏற்பதிலிருந்து தடுக்க முற்பட்டாள். அதற்காக என்ன செய்வது என்று யோசித்தாள். தான் சரஸ்வதியின் அம்சம் என்பதை அவள் உணர்ந்துதான் இருந்தாள். தன்னை யாருமே அவ்வளவு எளிதாக வென்றுவிட முடியாது என்ற துணிவில் அவள் சங்கரரை நோக்கி, "கணவன் மனைவி ஆகிய இருவரும் ஈருடலானாலும் ஓருயிர்தான். ஆகையால் அவரது உயிரில் ஒரு பாதியாகிய என்னையும் நீங்கள் வாதப் போரில் வென்றால் தான் உண்மையில் நீங்கள் வெற்றி பெற்றவராவீர்" என்றாள்.

சங்கரர், அவளுடன் வாதிட ஒப்புக் கொண்டார். சரஸவாணியோ, சகல கலைகளிலும் வல்லவளாக இருந்தாள். எனவே, அவள் கலைகளின் நுணுக்கங்களைப் பற்றிக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சரியான வகையில் சரியான விடையளித்தார்—சங்கரர்.

சங்கரர், சந்நியாசியாக இருந்தாலும் சகல கலைகளையும் கற்றுச் சர்வக்ஞராக விளங்கியவர். சகல கலைகளும் இன்பத்திற்காகவே தோன்றியவை. அவைகளைவிட அத்வைத அனுபவ இன்பமே பேரின்பம். அதுவே பெரிதென்று நிரூபிக்க அவர் முயன்றார். அதற்காகவே, அவர் சகல கலைகளையும் பயின்றிருந்தார். வேதம், வேதாந்தம், புராணம், இதிகாசம், இலக்கியம், தர்ம சாஸ்திரம் முதலியவற்றில் பாண்டித்யம் பெற்றதைப் போலவே, ஜோதிடம், கணிதம், இசை, தனுர் வேதம், மந்திர சாஸ்திரம் முதலிய பற்பல கலைகளிலும் அவர் தேர்ச்சி பெற்றிருந்தார்.

இதற்கு உதாரணமாக கர்ண பரம்பரைக் கதை ஒன்று உண்டு. அதாவது ஒரு சமயம் ஒரு செருப்புத் தைக்கும் தொழிற் கலைஞன் ஒருவன் சங்கரர் தன் வித்தையைக் கற்றிருக்கிறாரா என்று பரிசோதிக்க விரும்பினான். ஒரு பழைய செருப்பு, ஊசி, நூல் ஆகியவற்றை ஆசாரியார் முன்பு வைத்தான். ஆசாரியார் ஊசியை எடுத்து, தனது மூக்குத் தண்டின்மீது அதன் நுனியைத் தேய்த்துச் செருப்பைத் தைக்கலானார். தோலில் உள்ள எண்ணெய்ப் பசை ஊசியில் படுவதால் அது தோலை எளிதாகத் துளைக்கும் என்பதாலேயே ஆசாரியார் அவ்விதம் செய்தார். தோல் தைக்கும் தொழிலாளி தலை குனிந்தான்.

ஆனால், சரஸவாணியோ, தொழிற் கலையைப் பற்றி, கேள்வி எதையும் கேட்கவில்லை. சங்கரரோ சந்நியாசி. அதுவும் திருமணம் செய்து கொள்வதற்கு முன்னதாகவே, எட்டு வயதிலேயே துறவு அறத்தை ஏற்றவர் என்பதை அவள் அறிந்திருந்ததால், பெண்ணான அவள், "பெண் இன்பத்தைப் பற்றி அவர் அறிந்திருக்க மாட்டார். அப்படியே அவர் அறிந்திருந்தாலும் ஆண் பெண் உறவுக் கலையைப் பற்றிய

அனுபவம் அவருக்கு இருந்திருக்கவே முடியாது என்று கருதினாள். மேலும் தனது கணவர் இல்லற வாழ்வை நீத்துச் சந்நியாசியாகத் தயாராக இருப்பதையும் கண்டாள். உடனே, அவள் தன் மனத்தை இரும்பாக்கிக் கொண்டு, இல்லற இன்ப அனுபவ ஞானத்தைப் பற்றிச் சங்கரரிடம் கேட்டாள். சங்கரர் திகைத்தார். துறவியான அவர் தான் ஏற்றிருந்த துறவறத்தின் மதிப்பைக் கருதிப் பதிலளிக்கத் தயங்கினார். பதிலளிக்காவிட்டாலோ, தான் தோல்வியை ஒப்புக்கொண்டுவிட வேண்டும் என்பதையும் உணர்ந்தார். அவர் சிறிது காலம் இடையீடு பெற்றுத் தமது சீடர்களுடன் அங்கிருந்து புறப்பட்டார்.

## பரகாயப் பிரவேசம்!

அமைதியுள்ளம் படைத்த சங்கரர் உள்ளத்திலும் கவலைகள் அலைபாயலாயிற்று. அவர் ஒரு காட்டுவழியாகத் தம் சீடர்களுடன் சென்று கொண்டிருந்தார். அங்கு ஒரு மரத்தின் அடியில் ஒருவன் இறந்து கிடந்தான். அவன் அருகில் யாருமில்லை. அவனது சடலத்துக்கு அருகே சங்கரர் சென்று பார்த்தார். அவன் இறந்து கிடந்தான். அவன் முகத்தில் இராஜகளை வீசியது. அவன் பெயர் அமருகன். அவன் ஒரு மன்னன் என்பதையும் அவர் அறிந்தார்.

உடனே அவர், தமது பிரதம சீடரான பத்மபாதரை நோக்கி,

“பத்மபாதா! நான் சரஸவாணியின் கேள்விக்குப் பதிலுரைக்க வேண்டிய கடமையுடையவன். அந்தக் கடமையை நான் நிறைவேற்றுவதற்கான வாய்ப்பும் எனக்குக் கிடைத்துவிட்டது. இப்போது நான் இங்கு இறந்து கிடைக்கும் அரசனின் உடலில்பிரவேசிக்கப் போகிறேன். அரசன் அமருகனாக அவனது தலைநகரம் செல்வேன். அவனது அரண்மனையிலும் அந்தப் புரத்திலுமாக இருந்து சரஸவாணியின் கேள்

விக்குரிய பதிலை அனுபவ பூர்வமாகவே அறிந்து வந்து விடுவேன். அதுவரையில் எனது உடலை நீ பாதுகாத்து வருவாயாக. ஆத்மாவை எதுவுமே தீண்டாது. இப்போதுள்ள எனது உடல், போகம் துய்க்கக் கூடாத துறவி உடலாக இருப்பதால், இறந்த அரசன் அமருகன் உடலில் நான் புகுகின்றேன்," என்று கூறினார். பத்ம பாதரும் மற்ற சீடர்களும் மௌனமாயினர். 'சித்தம் போக்குச் சிவன் போக்கு,' என்பதைப் போலச் சங்கரர் செய்யத் துணிந்த 'கூடு விட்டுக் கூடு பாயும்' வித்தையை, அவர்கள் நேரில் பார்க்கலாயினர்.

சங்கரர் தமது யோக வலிமையால் தம் கால் கட்டைவிரலிலிருந்து பிராணனை வாங்கி, பிரமரந்திரத் தால் வெளியே சென்று அமருகன் உடலினுள் புகுந் தார். பிறகு சங்கரரின் உடலை அவரது சீடர்கள் ஒரு குகையில் வைத்துப் பாதுகாக்கலாயினர்.

அமருகன் உடலில் சங்கரரின் ஆவி புகுந்ததும் அரசன் அமருகனாக எழுந்தார். அரசன் தலைநகருக்குத் திரும்பினான். மக்களும் அமைச்சர்களும் அரசனை வரவேற்றனர். அவனுடைய தேஜசும் மதிநுட்பமும் ஏதோ ஒரு புதிய மாற்றத்துடன் இருப்பதை அவன் அரண்மனையிலே இருந்த அனைவருமே அறிந்து கொண்டனர். தங்கள் கணவன் எல்லா வற்றிலும் மிகத் தெளிந்த ஞானியாகவும், காமக்கலை நுட்பத்தில் மிகச் சிறந்த திறமையுடையவனாகவும் இருப்பதைக் கண்ட பட்டத்து ராணியும், அந்தப்புர அழகிகளும் புரிந்தும் புரியாமல் திகைத்தனர்.

யோகங்கள், மந்திரங்கள் இவற்றை அறிந்த அமைச்சர்கள், "கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தையில் வல்ல ஞான சித்தர் யாரோ ஒருவர்தான், அரசன் உடலில் பிரவேசித்து நம்முடன் அரசனாக இருக்கிறார். எனவே அந்த ஞான சித்தரின் உடலைத் தேடிக் கண்டு பிடித்து அந்த உடலை அழித்து விட்டால் என்ன" என்று யோசித்தனர்.

உடனே காட்டுக் குகைகள் எல்லாம் தேடப்பட் டன. இறுதியில், அரண்மனைச் சேவகர்கள் சங்கரரின்

உடல் இருக்கும் இடத்தை அறிந்து, அந்தப் புனித உடலை எடுத்துச் சென்றனர். சீடர்கள் அரண்மனைக்குச் சென்று மன்னன் அமருகன் முன்பு அவனது காவலாளிகள் பலாத்காரமாகத் தமது குருநாதரின் உடலை அரண்மனைக்கு எடுத்து வந்ததை முறையிடச் சென்றனர். அவர்கள், வண்டுக்கு உரைப்பது போல மகா வாக்கிய தத்துவங்களை உள்ளுறையாக வைத்துச் சில பாடல்களை அரசன் முன்பு பாடினர். அவற்றைக் கேட்ட அமருக மன்னன் நின்ற நிலையிலேயே இறந்து வீழ்ந்தான். சங்கரர் அவ்வுடலிலிருந்து புறப்பட்டுத் தம்முடலைத் தேடி அலைந்தார். அமருகனாக அவர் இருந்து, காம இன்பத்தில், தான் கரை கண்ட விஷயங்களைக் கொண்டு இயற்றிய அமருகம் என்ற காமத் துறை இலக்கியம் மாஹிஷ்மதிக்குக் கொண்டு செல்லப்பட்டது. சங்கரரின் உடலானது அதற்குள்ளாகத் தீயிலிடப்பட்டு விட்டதால், உடலில் சங்கரரின் ஆவி நுழைந்ததும் சிதையிலிருந்து எழுந்து வந்தார். சங்கரரது கையைத் தீயானது கருக்கியிருந்தது. அதுவும் வலக் கையைச் சிதைத்துக் கருக்கிவிட்டது. அதைக் கண்ட அவரது சீடரான பத்மபாதர் துடிதுடித்துப் போனார். உடனே சங்கரர் நரசிம்ம கராவலம்பஸ்துதி செய்தார். அத்வைத குருவான ஆதி சங்கரர் தமது சீடரின் வேண்டுகோளுக்கு இணங்கிச் சீடரின் இஷ்ட தெய்வமான நரசிம்மரைக் குறித்து, "சம்சாரம் என்று ஒரு மரம், பாபி விதையை ஊன்றியதால்தான் தோன்றி விட்டது. அது கர்மங்கள் என்ற கிளைகளில் புலன்கள் என்ற இலைகளைத் துளிர்த்தது; கர்மம் என்ற மலர்கள் மலரும் மரம்; அந்தக் கர்ம மலரே, துன்பமாகப் பழுக்கும் மரம். அந்தச் சம்சார மரத்தின்மேலே ஏறிய நான் விழுந்து விட்டேன். தயாள மூர்த்தியே! லட்சுமி நாயக நரசிம்மா! நீ எனக்குக் கை என்னும் பிடிப்பைத் தருவாயாக" என்ற கருத்துடைய பதின்மூன்று பாடல்களைப் பாடித் துதித்தார். இறைவன் அருளால் கருகிய மலர் போன்றிருந்த அவரது கை, புதுமலர்க் கையாகியது. அதன் பிறகு சரஸவாணி சங்கரரிடம் தோற்று விட்டாள். தோல்வியை அவள் ஒப்புக் கொண்டாள். நிபந்தனைப் படி மண்டன மிஸ்ரர் துறவு பூண்டு சங்கரரின் சீடரானார். அதன் பிறகு

அவர் சுரேஸ்வராசாரியர் என்று அழைக்கப்பட்டார். சங்கரர் தமது சீடர்களுடன் அங்கிருந்து புறப்பட்டார்.

## ஆதி சங்கரரின் ஞான வெற்றி !

அந்தக் காலத்தில் வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டதும் கொள்ளாததுமான எழுபத்திரண்டு மதங்கள் இருந்தன. உலகத்தில் உள்ள மதங்களில் சில, அரசர்களின் ஆதரவால் வளர்ந்ததைப் போல அத்வைதம் வளரவில்லை. ஆதிசங்கரர் தமது அறிவுத்திறனாலேயே அத்வைதத்தை ஸ்தாபித்தார். ஆதி சங்கரருக்குப் பிறகுதான் நமது நாட்டில் விசிஷ்டாத்வைதம், த்வைதம் முதலிய மதங்கள் தோன்றின. அவை அத்வைத சம்பிரதாயத்துக்கு முற்றிலும் மாறுபட்டவை அல்ல. சங்கரர் பிற மதத்தினருடன் வாதம் செய்து அத்வைதத்தைப் பரவச் செய்யவே, திக் விஜயம் செய்யப் புறப்பட்டார்.

அந்தத் திக் விஜயத்தில் அவர் எங்கெங்கு சென்றார், எவ்வெப்போது சென்றார் என்பது பற்றிச் சங்கர விஜயங்கள் ஒவ்வொன்றும் மாறுபாடான செய்திகளையே தருகின்றன. அந்தத் திக்விஜயத்தில் அவர் சந்தித்தவர்களாகக் கூறப்படுபவர்கள், உண்மையில் அக்காலத்தில் வாழ்ந்தவர்கள்தானா என்பதும் சந்தேகத்துக்கு இடமாயுள்ளன. எனினும் அவர் பாரத தேசம் முழுவதும் பிரசாரப் பிரயாணம் செய்தார். மின்னல் வேகத்தில் அந்த விஜயம் நடைபெற்றது. அவர் காலத்தில் முக்கியமாக ஐவகை மதங்கள் பிரபலமாக இருந்தன. அவை பூர்வ மீமாம்சை, நியாயம், வைசேஷிகம், சாங்கியம், யோகம் என்பனவாகும். அவற்றை மதங்கள் என்பதைவிட மார்க்கங்கள் என்று கூறுவதே சரியாகும். ஏனெனில் கடவுளையடையவும் அதனோடு ஒன்றிப்பதற்கும் கூறப்படும் வழிவகைக் கருத்து வேறுபாடுகள் ஒவ்வொன்றுமே, அந்த ஐவகை மார்க்கங்களாக இருந்தன. அவை தவிர சமணமும் பௌத்தமும் ஹிந்து மதத்திற்கு முற்றிலும் மாறுபா

டான கருத்துடையவைகளாக இருந்தன. எனவே சங்கரர் பிற மதங்களைக் குறைகூறுமல் அவற்றை விடத் தம் அத்வைத மதம் சிறந்தது என்பதைப் பிற மதத்தாரும் ஏற்கும்படி செய்யவே திக் விஜயம் செய்யத் தொடங்கினுர். பௌத்தமும் சமணமும் இந்திய தேசீய மதங்கள் என்றுலும், அவை அவைதிக மதங்களாகும். எனவே, அவற்றைப் பற்றியும் சிறிதளவு அறிவோமாக.

**நியாயம் :—** இதை ஒரு பிரமாண சாஸ்திர முறை என்றே கூறலாம். நாம் பெறும் அறிவே சரியானது என்று நிச்சயிக்கும் தத்துவங்களையே இது ஆராய்கின்றது. தர்க்கத்தை ஆதாரமாகக் கொண்டு, புலன்களும், மனமும் ஆன்மாவாகாது என்று அறிவதே துயரை ஒழிக்கும் மோட்ச நிலை என்று நியாயம் கூறுகிறது. ஆகவே அது அனுபவத்திற்கு வழிகோலுவதாகவோ, அனுபவத்தையே ஆதாரமாகவோ ஏற்பதாக இல்லை. அந்த மார்க்கம், அணுக்களைக் கொண்டு தான் கடவுள் உலகைப் படைத்தார் என்று கூறுவதாகும். அது யாவும் கடவுள் மயம் என்பதற்கு முரண்படுவதாயிற்று.

**வைசேஷிகம்:—** இதுவும் அணுக்களின் தத்துவததைக் கொண்டு தோன்றியதாகும். இது அணுக்கள் நிரந்தரமானவை என்றும், அவற்றின் தொகுப்போ உலகினர் அனுபவிக்கும் பொருள்களும் உலகமும் ஆகின்றன என்றும் கூறுவது. அணுக்கள் ஒவ்வொன்றும் தனிப்பட்ட விசேஷத்தன்மைகள் கொண்டவை என்று விசேஷமாகக் கூறியதாலேயே இதனை வைசேஷிகம் என்று வழங்கலாயினர். அணுக்களை, திரவியம், குணம், கர்மம், பொது இயல்புகள், விசேஷ உள்ளுறையும் தன்மை ஆகியவற்றைக் கொண்டு பகுத்தறிவதன் மூலமே சாதகன் தன்னைப் பற்றியும் கர்மத்தைப் பற்றியும் துன்பத்தைப் பற்றியும் அறிந்து, வாழும் வழியைக் கூறுவதாகும். இந்த மதத்தத்துவ ஸ்தாபகர் கணுதர். இந்த மதம் கடவுளுக்கும் பிரபஞ்சத்துக்கும் உள்ள தொடர்பைத் தெளிவுபடுத்துவதில்லை.

**சாங்கியம் :—** இதுவும் வேதாந்த தத்துவமேயாகும். இது, உலகத்திற்கு மூல காரணம் பிரகிருதி

என்றும், பிரகிருதியின் காரணத்தை ஜீவன் தன்து என்று எண்ணி மயங்குவதுதான் சம்சாரத்துக்குக் காரணம் என்றும் கூறுகிறது. அத்வைதம் கூறும் மாயையும் பிரகிருதியும் ஒன்ருகத் தோன்றலாம். ஆனுல், ஞானம் வந்த போது மாயை மாய்ந்து விடும் என்பது அத்வைதம். சாங்கியமோ பிரகிருதியும் இறுதி சத்தியம் என்பர். ஜீவன் பிரகிருதியின் தன் மையை உணர்ந்து அதிலிருந்து விடுபட்டவுடன் மோட்சம் பெறும் என்கிறது சாங்கியம். பிர கிருதி எப்படிப் பிரபஞ்சமாகப் பரிணமித்தது என்று ஆய்வதே மோட்சமார்க்கம் என்கிறது—சாங்கியம். பிரகிருதியின் சேட்டைகளை யெல்லாம் தள்ளி விடு வதே மோட்சம் என்பதானது, வீட்டிலிருந்து வெளி யேற்றிய குப்பைகளை ஆய்வதைப் போன்றதாகும். ஆத்மாவில் உறையும் ஆத்மாவை அறிவதே என்னும் அத்வைதக் கருத்துக்கு முரண்பட்டது சாங்கியம்; கொள்கை வலுவற்றது—சாங்கியம்.

**யோகம் :—** யோகம் என்பது ஒரு செயல் முறை. அதாவது பிரகிருதியிலிருந்து புருஷனை விடுவிக்கும் வழிமுறைகளை விளக்கும். இது அகப் பொருளையே மையமாகக் கொண்டது. எல்லாம் பிரகிருதியின் செயல் என்று கூறுவதால் சாங்கியத்தில் கடவுளுக்கு இட மில்லை. ஆனுல், யோகமோ கடவுளை ஒப்புக் கொள்ளு கிறது. யோக சாஸ்திரத்தில் கடவுளைப் பயன படுத்துவதும் கடவுளே பயனளிப்பதும் கூறப்பட வில்லை.

**ஜைன மதம் :** ஜைனர்கள் எண்ணற்ற ஆன்மாக் கள் உண்டு என்றும், அவை யாவற்றினிடமும் அன்பு செலுத்தவேண்டும் என்றும் கூறுவர். அஹிம்சை யையும், உயிர்க்கொலை செய்யாமையையும் தீவிரமாகக் கடைப் பிடிப்பர். ஆன்மாவானது, தான் ஏற்றுக் கொண்ட உடலுக்குத் தக்கவாறு சுருங்கவும் விரியவு மான தன்மையைக் கொண்டுள்ளது என்பர். எதைப் பற்றியும் நம்மால் பரிபூரணமாக அறிந்துகொள்ள முடியாது என்றும், நமது அறிவு, காலம், இடம் ஆகியவற்றைப் பொறுத்துத்தான் ஒரு பொருளைப் பற்றிய நமது ஞானம் அமையும் என்றும், ஆகையால்

நாம் காணும் பொருள் எவற்றையுமே நிச்சயமாக நிலைத்திருப்பதாகவோ, நிலையாதிருக்கும் என்றோ கூற இயலாது என்றும் கூறுவர்.

அவர்கள் முழுமுதற் கடவுளை ஒப்புக்கொள்வதில்லை. கர்மத்தைக் கடந்து முக்தி நிலையை அடைந்து நிலைபெற்ற ஜைனர்களையே ஆதர்சமாகக் கொள்வர். ஆன்மாவானது அறிவு விளக்கம் உடையது என்றும் கர்மா என்னும் சூட்சுமமான தத்துவம் அதனை மாசு படுத்துவதாகவும் கூறுவர். கர்மா ஆன்மாவினுள் ஊடுருவாமல் இருக்கவேண்டும் என்றால் புலனடக்கம் அவசியம் என்று ஜைனர்கள் கூறுவார்கள். எனவே உலகத் தோற்றத்துக்கும் அழிவுக்கும் காரணம் எது என்பது அவர்களது சமயக் கொள்கையில் தெளிவற்றிருக்கும்.

**பௌத்த மதம்:** பௌத்த மதமோ, கடவுளைப்பற்றியும் கடவுள் வழிபாடு பற்றியும் எதையும் கூறுவதில்லை. புலனடக்கமும் அன்பு நெறியும் அவர்களது முக்கிய நெறிகள். அறிவது, உணர்வது, கருதுவது, மன இயல்பு உருவமாவது ஆகியவற்றுடன் பலவிதங்களில் கூடிப் பிரிவதுதான் உலகம் என்றும், அதில் எதுவுமே நிலையானது இல்லை என்றும், ஆன்மா என்று எதுவுமே இல்லையென்றும் அவர்கள் கூறுவார்கள்.

## ஆதி சங்கரரின் திக்விஜயம்

ஆதி சங்கரரின் திக் விஜயத்தின்போது பல சுவையான நிகழ்ச்சிகளும் அற்புதங்களும் நிகழ்ந்ததாகச் சில கர்ண பரம்பரைக் கதைகளும், சில சங்கர விஜய நூல்களும் கூறுகின்றன.

ஆதி சங்கரர், தமது அத்வைதக் கொள்கையைப் பரவச் செய்யவும், நிலைநாட்டவும் எண்ணங்கொண்டு பாரத நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்றார். தவறான மதக் கொள்கைகளைக் கடைப்பிடித்துத் தடுமாறிக் கொண்டிருந்தவர்களுடன் வாதஞ் செய்து தத்துவ விளக்கமும், ஜீவப் பிரம ஐக்கியம் பற்றியும் தெளிவு

படுத்தித் தாம் சென்ற இடமெல்லாம் தமது மதக் கொள்கையை நிலைநாட்டினார்.

## தொழு நோய் தீர்த்த அருட்செயல்!

பிரயாகையில் ஒரு நாள் அவர் ஆலமரம் ஒன்றைக் காணச் சென்றிருந்தார். கடுமையான தொழு நோயினால் பாதிக்கப்பட்டிருந்த ஓர் இளைஞன் அந்த நோயின் கொடிய வேதனையைத் தாளமாட்டாமல் தற்கொலை செய்துகொள்ள முயன்றான். அவன் அந்த ஆலமரத்தில் தூக்கிட்டுக் கொள்ளும் சமயத்தில் ஆசாரியர் அந்த மரத்தைக் கண்டார். அவர் அவனிடம் ஓடிச் சென்று அவனது தற்கொலை முயற்சியைத் தடுத்தார். அருள் ஒளி வீசும் சங்கரரின் புனிதமான முகத்தைக் கண்ட அந்த இளைஞன் அவரது காலடியில் வீழ்ந்து வணங்கினான்.

உடனே அவன் மீது கருணை கொண்ட சங்கரர் அவனது தொழு நோய் பிடித்த நாற்றவுடலைத் தமது அன்புக் கரங்கொண்டு தடவினார். அந்தக் கணமே அவனது தொழு நோய்ப் புண்கள் எல்லாம் ஆறிவிட்டன. பட்டுப் போன்ற மேனியுடன் அவன் விளங்கினான். அவன் சங்கரரை வணங்கித் தன்னையும் அவரது சீடராக்கிக் கொள்ளுமாறு வேண்டினான். அவனது விருப்பத்தை நிறைவேற்றிய சங்கரர் அவனுக்கு 'உதங்கர்' என்று பெயரிட்டுத் தமது சீடராக்கிக் கொண்டார்.

## உயிர் தந்த அற்புதச் செயல்!

ஆதி சங்கரர் தமது சீடர்களுடன் கௌசாம்பி என்ற நகரின் தெருவொன்றின் வழியாகச் சென்று கொண்டிருந்தார். வழியில் ஒரு தாயும் தந்தையும் தமது ஒரே மகனின் சடலத்தின் மீது விழுந்து இதயம் பிளக்க அழுதுகொண்டிருந்தனர். அவரது உள்ளத்தில் அவர்களது அழுகை, அனுதாபத்தை ஏற்படுத்தியது. அப்போது யாரோ ஒருவர் "பரி

காரம் தேட முடியாத விஷயத்தில் பரிதாபப்பட்டு என்ன பயன்?'' என்று கூறிச் சென்றார். அதனைக் கண்ட சங்கரர் "ஒரே மகனை இழந்து பரிதவிக்கும் பெற்றோர்களின் துயரத்தை என்னுடையதாக எண்ணிப் பரிதாபப்படும் கருணை எனக்கேது? அந்த அளவுக்குக் கருணையுடையவன் கருணாநிதியான இறைவன் ஒருவனே யல்லவா?' என்று நினைத்தார். உடனே இறந்து கிடந்த அந்தச் சிறுவன் உயிர் பெற்று எழுந்துவிட்டான். பெற்றோர்கள் அந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்டு மகிழ்ந்து சங்கரரை வணங்கினார்கள். ஊர் மக்கள் எல்லாம் சங்கரரின் அற்புதச் செயலைக் கண்டு அவரைப் போற்றினர்.

அதே ஊரில், கௌதம புத்தர் ஒரு சமயம் விஜயம் செய்தபோதும் பெற்றோர்களின் ஒரே மகன் இறந்து கிடந்தான். அவனைப் பெற்ற தாயும் தந்தையும் அலறித் துடித்தனர். அதைக் கண்ட கௌதம புத்தர் அவர்களது அழுகைக்குக் காரணம் என்ன என்றும் கேட்டார். உடனே அவர்கள் "தங்களது ஒரே மகன் இறந்துவிட்டான் என்றும், அன்பே வடிவமான அவர் தமது மகனை உயிர்ப்பித்துத் தரவேண்டும்'' என்றும் வேண்டினர். உடனே அவர் இறந்து கிடந்தவனின் தாயை அழைத்து, "அம்மையே! இந்த ஊரிலுள்ள எந்த வீட்டிலாவது யாருமே என்றுமே இறவாதவர் இருந்தால், அந்த வீட்டிலிருந்து ஒருகைபிடியளவு கடுகு வாங்கி வந்தால், நான் உன் மகனை உயிர்ப்பித்துக் கொடுக்கிறேன்'' என்றார். இறந்தவனின் தாய் எப்படியாயினும் தன் மகன் பிழைத்து எழும்பவேண்டும் என்ற ஆவலால் ஊர் எங்கும், வீடு வீடாக அலைந்தாள். இறவாதவர் இல்லாத வீடே எங்கும் காணவில்லை; அவள் வெறுங்கையாய்த் திரும்பி வந்தாள். எனவே, புத்தரும் இறந்தவனை எழுப்பாமலேயே சென்றுவிட்டார். ஆனால், அதே ஊரில் ஆதி சங்கரர், இறைவனருளால் இறந்தவனுக்கு உயிர் தந்து எழச் செய்தார். அந்த நிகழ்ச்சியை மாபெரும் விந்தையாகவும் தெய்வீக அருட்பெருஞ் செயலாகவும் அற்புதச் செயலாகவும் கருதிய அந்த ஊர் மக்கள், அவரைப் புகழ்ந்து போற்றினர்.

# அமர கோசத்தைக் காப்பாற்றியது !

அந்த நாளில் அமரசிம்மன் என்று ஒருவன் இருந் தான். அவன் ஒரு சமணன். ஆயினும் அவன் சரஸ் வதியை உபாசனை செய்தவன். அவன் ஏராளமாகச் சமண இலக்கியங்களையும் அமரகோசம் என்ற வட மொழி அகராதியையும் இயற்றியிருந்தான். அதில் எல்லாத் தெய்வங்களைப் பற்றியும் ஏற்ருமலும் தூற்ரு மலும் எழுதியிருந்தான்.

அந்த அமரசிம்மன் ஆதி சங்கரருடன் வாதம்புரிய முன்வந்தான். ஆனுல் அவன் ஒரு விசித்திர நிபந் தனையை விதித்தான். 'திரைக்குப் பின்னுல் இருந்து தான் என்னுல் வாதம் புரிய முடியும்' என நிபந்தனை விதித்து, வாதஞ் செய்ய முற்பட்டான்.

ஆதி சங்கரர் அவனது நிபந்தனையை ஏற்ருர். இருவருக்கும் இடையே, ஒருவரை மற்ருெருவர் பார்க்க முடியாதவாறு அந்தத் திரை தொங்கவிடப்பட்டது. அமரசிம்மன் கேட்ட கேளவிகளுக் கெல்லாம் சங்கரர் பதில் அளித்தார். அதே போலச் சங்கரர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அவனும் பதில் சொன்ஞன்.

சங்கரருக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. உடனே அவர் தமது ஞான திருஷ்டியினுல் நடப்பவற்றை அறிந்தார். அமரசிம்மன் அந்தத் திரைக்குப் பின்னுல் ஒரு குடத்தை வைத்து அதிலே கலைமகளை ஆவா ஹனம் செய்திருந்தான். அதனுல்தான் அவனுல் தன் னுடன் வாதாட முடிந்தது என்றும், அவன் கேட்கும் கேள்விகளைக்கூட கலைமகளே தன்னைக் கேட்கும் கேள்விகளாகச் சங்கரர் கருதினுர். உடனே சங்கரர், "சரஸ்வதி! என்னை நீ இப்படியும் சோதிக்கலாமா?" என்று மன முருகிக் கேட்டார்.

உடனே அந்தத் திரை அறுந்து வீழ்ந்தது. தனது ரகசியத்தை ஆசாரியர் அறிந்து கொண்டதைத் தெரிந்து கொண்ட அமரசிம்மன் தன், வீட்டு அடுக் களைக்கு ஓடினுன் அங்குத் தீ மூட்டித் தான் இயற்றிய ஏடுகளை எல்லாம் ஒவ்வொன்ருகத் தீயிலிட்டுப் பொசுக்

கிக் கொண்டிருந்தான். சங்கரர் விரைந்து சென்று அவன் அவ்வாறு செய்வதைத் தடுத்தார். கடைசியாக அவனிடம் எஞ்சியது அமரகோசம் என்ற சுவடியாக இருப்பதைக் கண்ட சங்கரர், அதனைத் தீயில் இடாதவாறு காத்து, உலகுக்குத் தந்தார்.

## ஸ்ரீ சைல தரிசனம்

ஆந்திர நாட்டிலுள்ள ஸ்ரீ சைலம் என்ற ஊரில் காபாலிகர்கள் என்ற பலர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் சுடுகாட்டில் வசிப்பவர்கள். நரபலி செய்பவர்கள். நரமாமிசமும் புசிப்பவர்கள். அத்தகைய கொடிய பழக்கத்தைச் சங்கரர் கடுமையாக எதிர்த்து வந்தார்.

எனவே, அவர் தமது சீடர்கள் பலர் பின் தொடர, ஸ்ரீ சைல க்ஷேத்திரத்தை அடைந்தார். அங்குக் கோயில் கொண்டிருந்த மல்லிகார்ஜுன மூர்த்திமுன், 'சத்தியம் அத்வைதம்' என்ற மெய்ப்பொருளை விளக்கிக் கொண்டிருந்தார். அப்போது அங்கு உக்கிர பைரவன் என்ற காபாலிகன் ஒருவன் வந்தான். அவன் சங்கரர் பரப்பி வரும் சித்தாந்தத்தால், தனது கொள்கை சிறுமைப் படுவதை யறிந்து, சங்கரருக்குத் தீங்கிழைக்கத் திட்டமிட்டான். எனவே சூழ்ச்சியின் மூலம் அவரைக் கொல்லத் துணிந்தான்.

## காபாலிக நிக்ரகம்!

ஒரு நாள், சீடர்கள் எல்லாம் தத்தமது பணிகளைச் செய்யச் சென்றிருந்தனர்.

சங்கரர் மட்டும் தனித்துத் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். அப்போது அந்தக் கொடிய காபாலிகன் விபூதி உருத்திராட்சம் அணிந்து சிவச் சின்னங்களுடன் சங்கரர் தியானத்திலிருந்த இடத்தை வந்து அடைந்தான். தன்னை அவர் காணுதிருக்கும் போது அவர் தலையை வெட்டிவிடத் துணிந்து தனது கொலை வாளினை ஓங்கினுன். அதற்குள் அவன் மனம் மாறியது. தியான நிலையிலிருக்கும் சங்கரரைக்

கொல்ல அவனது மனம் இடம் தரவில்லை. எனவே அவன் அவரைத் தான் வணங்கும் காலபைரவருக்கு நரபலியாகப் பலியிட விரும்பினான்.

சங்கரர் தியானத்திலிருந்து கண் விழித்தார். அந்தக் காபாலிகன் அவரை வணங்கி, "பரம குருவே! உங்களைப் போன்ற மகாத்மாவை இதுவரை நான் கண்டதில்லை. உலகுக்கே அருள்புரிய வந்திருக்கும் பரம சாந்த மூர்த்தியாகிய உம்மிடம், அடியேனுக்கு ஒரு சிறு நலம் விளைக்கும் ஆற்றல் இல்லை என்று நான் நினைக்கமாட்டேன்" என்றான். சங்கரர் மௌனமாக இருந்தார். உக்கிர பைரவன் மேலும் தொடர்ந்தான், "ஐயா! பன்னிரண்டு ஆண்டுகளாக நான் இயற்றிவரும் உபாசனை இன்றே பூர்த்தியாக வேண்டும். சக்கரவர்த்தி ஒருவனின் தலையையோ அல்லது ஆத்ம ஞானி ஒருவனுடைய தலையையோ வெட்டி நரபலி கொடுத்தால்தான் எனது கடவுள் எனக்குப் பிரத்தியட்சமாவார்!" என்றான்.

சங்கரர் புன்னகை செய்த வண்ணம் அவனை நோக்கி, "அன்பனே! சக்கரவர்த்தியின் தலைக்கு நீ முயற்சி செய்யாதே! அப்படி முயன்றால் உன் தலையே போய்விடும். என்னை நீ ஆன்ம ஞானி என்று எண்ணியிருந்தால், என் தலையை நீ எடுத்துக் கொள்வதில் எனக்கு எந்தவித ஆட்சேபணையுமில்லை. அதற்கும் சீடர்கள் யாரும் என் அருகில் இல்லாத இதுவே தகுந்த சந்தர்ப்பம். எனவே விரைவில் என் தலையைக் கொய்து உன் இஷ்ட தெய்வத்தைத் திருப்தி செய்க!" என்றார்.

அப்பொழுது அந்தக் காபாலிகன் "ஐயா! நீங்கள் முழு விருப்பத்துடன் பலியானால்தான் எனக்கு நிச்சயமாகப் பயன் கிடைக்கும். இல்லையெனில் உங்களைக் கொல்வது வீணேயாகும்." என்றான்.

"பலியாவதற்கு எனக்குப் பூரண சம்மதம்தான். அதுவும் என் உடல் தேவ காரியமாகப் பயன்படப் போகிறது என்பதைக் கேட்க எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா?"

மரம் பட்டுப்போனால் அது விறகுக்குப் பயன்படும். இறந்த மாட்டுத்தோல் செருப்புக்குப் பயன்படும்.

மான், புலி ஆகியவற்றின தோல் ஆசனத்துக்குப் பயன்படும். யானைத் தந்தம் எத்தனையோ பயன்களைத் தரும். சில மிருகங்களின் நரம்புகள் வீணை முதலிய இசைக் கருவிகளுக்குத் தந்திகளாகப் பயன்படுகின்றன. மனித உடல் மட்டுமே உயிர் போனபின் ஒன்றுக்கும் பயன்படுவதில்லை. உயிர் உள்ள மட்டும் தான் இதற்கு மதிப்பு என்று நான் எண்ணியிருந்தேன். நீயோ இந்த உடலையும் பயன்படுத்துவதாகக் கூறுகிறாய். அதுவும் இறைவனுக்குப் பயன்படுத்துவதாகக் கூறின பிறகு, நான் ஏன் உனக்கு என் உடலைக் கொடுக்க மறுக்கப் போகிறேன். நீ தாமதிக்காமல் உன் காரியத்தை முடித்துக்கொள். ஏனெனில் இப்போது என் சீடர்கள் வந்துவிடும் நேரம். அவர்கள் வந்தால் உன் விருப்பத்திற்கு அவர்கள் மறுக்கக் கூடும். ஹூம் யோசியாதே!'' என்றார்.

அவ்விதம் கூறிய பிறகு பரப்பிரம்மத்தை நினைத்துத் தமது கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்தார். உடலுக்கு எது விளைந்தாலும் அதைப் பற்றி நினைக்கும் அவசியத்தை அறியாது அவர் அமைதியாக அமர்ந்திருக்கும்போது, காபாலிகன் உற்சாகத்துடன் அவரைப் பலிகொடுக்கத் தனது கொடிய வாளை ஓங்கினான்.

அக் கணத்தில் ஒரு பயங்கரக் கர்ஜனை முழக்கம் கேட்டது. அந்தக் காடே அதிர்ந்தது. காபாலிகன் கோரமாகக் கதறினான்.

சங்கரர் தமது விழிகளைத் திறந்து பார்த்தார். காபாலிகன் உயிரிழந்து கீழே விழுந்து கிடந்தான். அவன் அருகே சங்கரரது அருமைச் சீடர் காணப்பட்டார்.

எங்கோ இருந்த என்னை ஏதோ ஒரு சக்தி இங்கு இழுத்துக் கொண்டு வந்தது. இந்தக் காபாலிகனை நான் எப்படிக் கொன்றேன் என்பது எனக்கே விளங்கவில்லை'' என்றார் பத்மபாதர்.

''பத்மபாதா! உனக்கு நரசிம்ம பக்தியும் உபாசனையும் உண்டல்லவா? முன்பு எனது கை எரிந்த

போது நரசிம்மனைத் துதிக்கச் சொன்னவன் நீ தானே! உனக்கு நரசிம்ம மந்திர உபதேசமாகி சித்தி ஏதேனும் பெற்றிருக்கிறாயோ!'' என்று கேட்டார் பகவத் பாதர்.

ஆம் சோழவளநாட்டைச் சேர்ந்த பத்ம பாதர் என்ற அந்தச் சனந்தனருக்கு யாரோ ஒரு முதியவர் நரசிம்ம மந்திரத்தை உபதேசித்திருந்தார். அவர் சோழ நாட்டிலிருந்து நரசிம்ம க்ஷேத்திரமாகிய அகோ பிலத்தை அடைந்தார். கலைமான்கள் நிறைந்த அந்த அடர்ந்த காட்டில் அவர் ஒரு சமயம் நரசிம்ம மந்தி ரத்தை ஜெபித்துக் கொண்டு தியானத்திலிருந்தார். அப்போது அங்கு வந்த ஒரு வேடன் அவரது தியா னத்தைக் கலைத்தான். தான் வேட்டையாடிவந்த மானைப்பற்றி விசாரித்தான். சனந்தனர் தான் தியா னத்தில் இருந்ததால் மானைப் பார்க்கவில்லை என்றார். "தியானம் என்றால் என்ன? அதை ஏன் செய்யவேண் டும்? எதற்காகச் செய்யவேண்டும்?" என்று கேள்வி களை உதிர்த்தான் அந்த வேடன். "தியானம் என்பது நீ மிருகத்தைத் தேடுவதைப் போல, நானும் தேடுவதற் குத்தான்!'' என்றார்—சனந்தனர்." கண்ணை மூடிக் கொண்டு ஒரே இடத்தில் இருந்து எப்படித் தேட முடியும்?'' என்றான்—அவன். அதற்கு அவர், "நான் ஒரு விசித்திர மிருகத்தைத் தேடுவதால் விசித்திரமான முறையில்தான் அதைத் தேட வேண்டியதாகிறது,'' என்றார். வேடன் அவரை விடவில்லை. "அதென்ன விசித்திர மிருகம்! காட்டிலேயுள்ள வேடனாகிய நான் காணாத மிருகமா! அது?'' என்றான். "அந்த மிருகத் தின் இடுப்புக்குக் கீழே மனிதனைப் போல இருக்கும். இடுப்புக்கு மேலே சிங்கத்தைப் போல இருக்கும், அதற்குப் பெயர். **நரசிங்கம்!**'' என்றார்—சனந்தனர்.

உடனே அந்த வேடன் அங்கிருந்து புறப்பட்டு அத்தகைய மிருகம் உண்மையிலேயே இருப்பதாக நம்பி, காடெங்கும் தேடினான். நாள் முழுவதும் தேடி னான். அவன் தேடியலைந்து சோர்ந்தான். அவன் கண்ணில் அத்தகைய மிருகம் கிடைக்காததால் தற் கொலை செய்துகொள்ள எண்ணித் தூக்கிட்டுக்கொள்ள முயன்றான். அப்போது நரசிங்கப் பெருமான் அவன் முன் தோன்றினார். வேடன் நரசிங்கப் பெருமானை மிரு

கத்தைப்போல ஒரு கொடிக் கயிற்ருல் கட்டி இழுத்துக் கொண்டு சென்று, சனந்தனர் முன்பு நிறுத்திஞன். சிறுவர்கள் பின் செல்லும் நாய்க் குட்டியைப் போல, நரசிங்கப் பெருமான் அவனைப் பின் தொடர்ந்து சென்று நின்ருர். சனந்தனரோ கண்ணை மூடிக் கொண்டு நரசிம்மத் தியானத்திலிருந்தார். வேடன் அவர் தியானத்தைக் கலைத்தான். கொடிக் கயிற்ருல் கட்டிப் பிணைத்து இழுத்து வந்த அந்த நரசிங்கத்தைக் காட்டிஞன். அதைக் கண்டு சனந்தனர் விம்மிஞர். "தெய்வமே! உனக்காக இரவும் பகலும் தவம் செய்யும் எனக்கு உன் தரிசனத்தைத் தராமல் இந்த வேடனிடமோ அகப்பட்டாய்?" என்ருர். "போயும் போயும் ஒரு வேடனுக்கா நமது நரசிங்கப் பெருமான் தரிசனம் தருவார்!" என்று நீர் நினைத்துவிட்டீர். வேடஞுலும் இவன் மன ஒருமையுடன் என்னைத்தேடிஞன். அதனுல்தான் நான், இவன் பார்வையில் அகப்பட்டேன். இவனது கட்டுக்கும் அடங்கிவிட்டேன். தெய்வ அருளுக்குக் குல வித்தியாசம் கிடையாது!" என்ருர் —நரசிம்மர். அடுத்த கணத்தில் அந்த வேடனையும் காணேம், நரசிம்மத்தையும் காணேம்! இருவரும் மறைந்தனர்! இந்த நிகழ்ச்சியைப் பத்மபாதர் சங்கரரிடம் கூறிஞர். உடனே நரசிம்ம ஆவேசத்தின் காரணமாகத்தான் பத்மபாதரால், காபாலிகனை அழிக்க முடிந்தது என்பதை விளக்கிஞர்—சங்கரர்.

## கோகர்ண தரிசனம்

அதன் பிறகு, சங்கரர் ஸ்ரீ சைலத்திலிருந்து தமது சீடர்கள் புடைசூழ, மஹாபலீஸ்வரர் கோயில் கொண்டுள்ள கோகர்ண க்ஷேத்திரத்தை அடைந்து, சிவராத்திரியன்று அங்கு வில்வார்ச்சனை செய்தார். அதன் பிறகு ஹரிஹர க்ஷேத்திரம் சென்று அரனும் அரியும் ஒன்றே என்ற தத்துவத்தை விளக்கிஞர்.

பிறகு முகாம்பீ என்ற சக்தித் தலத்திற்குச் சென்ருர். அங்கு உக்ரகலையோடிருந்த தேவியின் முன்பு, ஸ்ரீ சக்ரப் பிரதிஷ்டை செய்து, உக்ரத்தைத் தணித்தார். அதன் பிறகு ஸ்ரீவலி என்ற க்ஷேத்திரத்திற்குச் சீடர்களுடன் சென்ருர்.

## ஊமையும் பேசினன்!

அந்த ஊரில் சங்கரர் அத்வைத போதனை செய்து வந்தார். நாள்தோறும் ஏராளமான பொது மக்கள் அவரைக் காண்பதற்கும் அவர் போதனைகளைக் கேட்பதற்கும் கூடினர். அந்த ஊரில் கர்ம காண்டத்தில் உறுதியுள்ள பெருமக்கள் நிறைந்திருந்தனர். பிரபாகர பட்டர் என்ற அறிஞர் அவர்களுக்குத் தலைவராக இருந்தார். அவருக்கு ஒரு மகன் இருந்தான். அவன் மனங்கவரும் கவர்ச்சியான தோற்றத்தை யுடையவன். ஆனல் அவன் யாரோடும் எதுவும் பேசாமல், ஐம்பொறிகளுக்கும் இயக்கந்தராமல் அடங்கியிருந்தான். அந்நிலை கண்ட அவனது பெற்ருேர்கள், "இது என்ன நோயோ, பேய் பீடையோ, கர்மவினைக் கோளாரோ" என்று எண்ணி மனம் வருந்தினர். எனவே, சங்கரர் அவ்வூருக்கு வந்திருப்பதை அறிந்த பிரபாகர், தன் அழகு மகனை, ஆசாரியர் இருக்குமிடத்திற்கு அழைத்துச் சென்ருர். சங்கரர் முன்னே சென்று அவரை வணங்கி, தம் மகனையும் நிலத்திலே கிடத்தினர். நிலத்தில் வீழ்ந்தவன் எழுந்திருக்கவில்லை. சங்கரர் அன்புடன் அவனைத் தம் இரு கைகளாலும் பிடித்து எழுந்திருக்கச் செய்தார். அவர் அவனை நோக்கி, "நீ யாரப்பா?" என்று கேட்டார்.

அதுவரை ஊமையாக ஒருவரிடமும் பேசாமல் இருந்த அந்த அழகுச் சிறுவன், சங்கரரிடம் முதன் முறையாகப் பேசினன். "நான் மனிதன் அல்ல; தேவனும் அல்ல; யட்சனுமல்ல; நான் வேதியனும் அல்ல; வீரனும் அல்ல; வர்த்தகன் அல்ல; வேளாளன் அல்ல; நான் பிரம்மச்சாரியல்ல;இல்லறத்தான் அல்ல; துறவியும் அல்ல; நான் ஞானமே உருவான மெய்ப் பொருள்!" என்ருன். ஊமை மகன் பேசுவது அவர்களுக்குப் பெரு வியப்பாகவும் பேரானந்தமாகவும் இருந்தது. உடனே சங்கரர், அவனை நோக்கி, "ஹஸ்த ஆமலகா! வேதாந்தத்தின் பரம ரகசியம் உள்ளங் கை நெல்லிக் கனி போல உனக்குப் புரிந்து விட்டதால், நீ பேசாத ஞானியானய்!" என்று கூறிவிட்டு, பிரபாகரரை நோக்கி, "ஐய, இவன் உமது குடும்ப வாழ்க்

கைக்கு உகந்தவன் அல்ல. இன்று முதல் என்னுடன் இருப்பதே நல்லது,'' என்று கூறினார்.

ஊமையாய், ஒன்றுக்கும் உதவாதவனாய், தன் மகன் தம்மிடம் இருப்பதைவிட, உலகம் வாழ அவதரித்த உத்தமருக்குச் சீடனாக இருப்பதே சிறந்தது என்று கருதிய பிரபாகரர், தம் மகனைச் சங்கரரிடம் ஒப்படைத்து வீடு நோக்கிச் சென்றார். ஹஸ்தாமலகர் என்ற பெயர் சூடிய அந்தச் சீடரும் மற்ற சீடர்களும் பின் தொடர, சங்கரர் துங்கபத்திரை நதிக்கரை நோக்கி நடந்தார்.

## சிருங்ககிரியில் ஆதி சங்கரர்

அமைதியாக அகன்று பரந்து விரிந்து செல்லும் துங்கபத்திரை நதிக்கரையை அடைந்த சங்கரர், அங்கு ஒரு அதிசயக் காட்சியைக் கண்டார். ஒரு கர்ப்பிணித் தவளைக்கு நச்சுப் பாம்பு ஒன்று படம் விரித்து, வெயில் அதனைத் தாக்காதவாறு காவல் புரிந்து, குடை பிடித்திருந்தது. அதைக் கண்டு வியந்தார்.

காமமும் குரோதமும் அறியாத ரிஷ்ய சிருங்கர் என்ற முனிவர் அந்த ஊரில் இருந்ததால் சிருங்ககிரி என்ற பெயர் பெற்றதை அறிந்தார். இரண்யாக்ஷன் என்ற அசுரன் உலகத்தைக் கடலுக் கடியில் ஒளித்து வைத்தபோது, திருமால் வராக அவதாரம் எடுத்துத் தமது கோரைப் பற்களால் உலகைத் தூக்கி நிறுத்தியதாகவும், அப்போது அவரது பற்கள் இரண்டும் பதிந்த புண்ணிய பூமியே அதுவென்றும் தெரிந்து கொண்டார்.

எனவே, வனதுர்க்கா என்ற மந்திரத்தால் முன்பு பந்தனம் செய்த சரஸவாணியாகிய சாரதையின் திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்ய எண்ணினார். அங்கு ஒரு கோயில் அமைத்துச் சாரதா தேவியை நல்லதொரு முகூர்த்தத்தில் பிரதிஷ்டை செய்தார். அந்தப் புண்ணிய தலத்தில் ஒரு மடாலயத்தை நிறுவி அந்த மடத்தின் தலைமைப் பொறுப்பைச் சுரேசுர ஆசாரியரிடம்

ஒப்படைத்தார். கர்நாடக மன்னனை சுதன்வா என்ற அரசன் அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்தான். இந்த மடத்தை கி. மு. 484 பிங்கல ஆண்டு துஷ்ய பௌர்ணமியில் ஆதி சங்கரர் ஸ்தாபித்தார். இந்த மடத்தின் தலைவராக நியமித்த சுரேசுரர்-பிரித்விதரர் என்ற பெயரிலும் வழங்கப்பட்டார். ஆந்திரம், தமிழகம், கர்நாடகம், கேரளம், ஆகிய நாடுகளிலுள்ள யஜுர் வேதச் சார்புடையோர் இந்த மடத்தின் சீடர்களாவர்.

## வார்த்திகம் செய்தல்

இந்த அழகு நதிக்கரையில் ஆதி சங்கரர் தமது பிரதம சீடருள் ஒருவரால் எந்தப் பணியை இயற்றுவிக்கலாம் என்று எண்ணியிருக்கும் போது, ஒரு நாள் சுரேசுரர் சங்கரரை வணங்கி, "அடிகாள்! பிரம சூத்திர பாஷியத்தின் நுட்பம், திட்பம், செறிவு முதலிய நலங்களை எல்லாம் உணரும் திறன் எனக்கில்லை. எனினும் எனது சிற்றறிவுக்கு இயன்ற அளவு ஒரு வார்த்திகம் செய்ய விரும்புகிறேன்" என்றார். தன்னிடம் கர்மவாதம் செய்து, தோல்வியுற்றுச் சீடராகிய மண்டன மிஸ்ரர்தான் சுரேசுரர் என்பதை மனத்திற் கொண்ட சங்கரர், அவரே வார்த்திகம் செய்யத் தக்கவர் என்று கருதினார்.

ஆதி சங்கரரிடம் வார்த்திகம் செய்யச் சுரேசுரர் அனுமதி பெற்ற செய்தி சீடர்கள் மத்தியில் பரவியது. அவர்களிடையே கருத்து வேற்றுமை எழுந்தது. "கர்ம காண்டத்திலேயே நெடுங்காலம் திளைத்திருந்தவர்; இல்லறத்தில் இருந்த பிறகே, துறவறம் புகுந்தவர்; நைஷ்காம்ய சித்தியின் அனுபவம் இல்லாத இந்தச் சுரேசுரரா வார்த்திகம் செய்வது? அஸ்தாமலகர் அதைச் செய்தால் என்ன? பத்மபாதர் ஏன் அந்தப் பணியை ஏற்கக்கூடாது என்று தமக்குள் வாதம் செய்து ஆசாரியாரிடம் சென்று, "சுரேசுரர் இந்தத் திருப்பணிக்குத் தக்கவர் ஆகார். ஞானமுணர்ந்த பத்மபாதருக்கு இந்தத் திருப்பணியைத்

தேவரீர் பணிக்க வேண்டும்" என்றனர். பத்மபாதரோ, "அஸ்தாமலகர் இதைச் செய்யத் தக்கவர்" என்றார். உடனே சங்கரர் அவர்களை நோக்கி, "பலர் விரும்பாத ஒரு காரியத்தைச் சுரேசுரர்தான் செய்ய வேண்டும் என்று நான் சொல்லமாட்டேன். அஸ்தாமலர் அந்தர் முக திருஷ்டியுடையவர் ; ஆகையால் சாஸ்திரதிகார விவகாரத்திற்கு அவர் தக்கவரல்ல. பத்மபாதர் அதைச் செய்யலாம் !" என்று கூறி அவருக்கு ஆணையிட்டார். பிறகு சுரேசுரரிடம் நிலையை விளக்கி வேறு பணிகளைச் செய்யுமாறு கூறினார். சுரேசுரர் தமது ஞான நிலையை அறிவிக்கும் வகையில் நைஷ்காம்ய சித்தி, சங்கேஷ்ப சாரீரகம் என்ற இரு பெரும் ஞான நூல்களை இயற்றி அரங்கேற்றினார். பத்மபாதர் வார்த்திகம் செய்து ஐந்து பாதங்களை (பஞ்சபாதிகா) விண்ணப்பித்து, அப்பெரு நூல் முழுமையும் செய்ய அவகாசம் பெறவும், தீர்த்த யாத்திரை செய்யவும் சங்கரரிடம் அனுமதி பெற்றார். பிறகு சில துணைவர்களுடன் தென்னாடு நோக்கித் தல யாத்திரைக்குப் புறப்பட்டார்.

## வார்த்திகம் அழிதல்

பத்மபாதர், சேது யாத்திரைக்குப் புறப்பட்டார். வார்த்திகச் சுவடியைத் தம்முடன் பத்திரமாக வைத்துக் கொண்டு காஞ்சிபுரம், சிதம்பரம், ஸ்ரீரங்கம் முதலிய தலங்களைத் தருசித்துக் கொண்டு தாம் பிறந்த பூமியாகிய திருவானைக் காவிற்கு வந்தார். அங்குக் கர்ம காண்டத்தில் அபிமானம் பூண்டு, ஞான காண்டத்தில் வெறுப்புற்றிருந்த பல அந்தணர்களைக் கண்டார். அங்கு அவர் துறவு நிலை பூணுவதற்குமுன் தாய் மாமனும் உரிமை கொண்ட பெரியார் ஒருவரைக் கண்டார். அவர் பத்மபாதரைத் தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்று உபசரித்தார். அங்குப் பத்மபாதர் சிலநாட்கள் தங்கியிருந்தார். ஒரு நாள் தாம் சேது யாத்திரைக்குப் புறப்படப்போவதாகக் கூறினார். அவர் தாய் மாமன் தம் மருமகனாகிய பத்மபாதர் பெருமையாகப் போற்றிய சுவடிக் கட்டை வாங்கிப் பார்த்தார். அது

பூர்வ மீமாம்சையைப் பலவகைகளில் கண்டிப்பதையும் உத்தர மீமாம்சை என்ற வேதாந்தத்தை நிலைநாட்டுதலையும் கண்டு, "இந்த ஏடு நீங்கள் யாத்திரை சென்று திரும்பி வரும்வரை, இங்கேயே இருக்கட்டுமே. நான் இதனைப் படிக்க விரும்புகிறேன்" என்றார். பத்மபாதர் அவரை நம்பி, அவரிடம் அந்த ஏட்டுச் சுவடியைக் கொடுத்துவிட்டு, அவரிடம் விடைபெற்று யாத்திரைக்குப் புறப்பட்டார்.

பத்மபாதரின் மாமன், அந்த வார்த்திகத்தின் சில பகுதிகளைப் படித்துப் பார்த்தார். அது கர்ம மார்க்கத்தை அழிப்பதாக இருப்பதை அறிந்து, ஒரே பிரதியாக இருந்த அதனை அழிப்பதோடு அதைப் போல வேறொன்றும் எழுதாதவாறு ஆபிசாரப் பிரயோகமும் செய்யத் துணிந்து, தமது குடிசைக்கே தீயிட்டுக் வார்த்திகச் சுவடியை வீட்டோடு அழியச் செய்தார்.

தீர்த்த யாத்திரை சென்று திரும்பிய பத்மபாதர், திருவானைக்காவிற்குத் திரும்புமுன், அவரது புத்தியை மயங்கச் செய்யும் ஆபிசார ஹோமமும் செய்துவிட்டார்.—அந்த மாமன் உறவுக்காரர். பத்மபாதர் திருவானைக் காவலுக்கு வந்தார். மாதுலர், தம் வீடு விபத்தில் அழிந்ததால் வார்த்திக ஏடும் அழிந்தது!" என்று கூறினார். அதையறிந்த பத்ம பாதர் விரைந்து, தம் குருநாதரிடம் சென்றார்.

## சுரேசுரர் மனநிலை

சிருங்ககிரியிலே ஆசாரியர் அருகில இருந்த சுரேசுரர், "சூத்திர பாஷியத்துக்கு வார்த்திகம் செய்யும் பாக்கியம் தமக்கு இல்லாமற் போயிற்றே என்று வருந்தினார். பத்மபாதர் வெற்றி பெற்றது கண்டு மனம் வருந்திய அவர், "பத்மபாதர் உரை வழங்காது ஒழிக!" என்று சாபம் இட்டிருந்தார். அதை அறிந்த சங்கரர் சுரேசுரரை அழைத்து, "ஐய! நீர் அரிய நூல் ஒன்றை இயற்றி நமது சித்தாந்தத்தை நன்றாக விளக்கியிருக்கிறீர்கள். இன்னும் நீர் செய்வதற்கு வேறு பணிகள் இருக்கின்றன. அவற்றைப் பிறகு

கூறுகிறேன்; யாத்திரை சென்ற பத்மபாதர் உமது மனம் நோக வார்த்திகம் செய்வதால் உமக்கு வரவேண்டிய புகழை அவர் அடையப் போகிருரே என்பதால் அவர் நூல் முழுவதும் அழிக என்று நீர் சபித்து விட்டீர். பத்மபாதர் நூல் இயற்றத் தொடங்கிய வேளையை நான் அப்போதே கவனித்தேன். அது காலம் என்ற பகையால் அழியும் என்பதை அறிந்து கொண்டேன். அழிந்தாலும் நான் வருந்த மாட்டேன். அவர் வருந்த நீர் இவ்விதம் சாபம் இடலாமா? நீர் இட்ட இந்தச் சாபம் முழுவதும் பலியாது. அதற்குப் பதிலாக நீர் பல நூல்களைச் செய்தாக வேண்டும். நீர் வேத சிரசுக்கு வார்த்திகம் செய்யும். தைத்ரிய உபநிஷத்தின் கருத்தை நன்கு விளக்குக. பிரகதாரணிய பாஷியத்தின் சிரத்தை வார்த்திக மாக்கி உரை செய்வீராக. பத்மபாதர் திரும்புவதற்கு முன்னதாக இவற்றைச் செய்துவிட வேண்டும். துறவு முறை எளிதல்ல. துரீய ஆசிரமத்துக்கு வந்த பின்னும் சிலருக்கு 'என் ஊர்; என் வீடு; என் மாமன், என் மனைவி, என் பெற்ருேர்'என்ற நினைப்புக்கள் எழும்புகின்றன. இந்த உணர்விஞல்தான் பத்மபாதர் யாத்திரைக்குச் சென்றுள்ளார். யாத்திரை பூர்த்தியாகும். ஆனல் அரியதான சாஸ்திரத்தையும் தமது சக்தியையும் அவர் இழந்து வருவார்,'' என்று கூறி மௌனமானார். சுரேசுரர் அவரை வணங்கி விடைபெற்ருர்.

## அன்னைக்குக் கர்மம் செய்தல்!

துறவு நிலையை அடைந்தவர்கள் தமது முந்தைய உறவினரைப் பற்றி நினைப்பதும் தகாது என்பது பொது விதி. சந்நியாசியானதால் தந்தையும் வணங்கும் பெருமை பெற்ற ஒருவன், தன் தாயைக் கண்டால் வணங்க வேண்டும் என்ற விதியும் உண்டு.

ஆதிசங்கரர் சிருங்ககிரியில் தங்கியிருக்கும்போது ஒரு நாள் சங்கரருக்குத் தமது தாயைப் பற்றிய நினைவு தோன்றியது. தமது தாய் மரணப்படுக்கையில் இருப்பதையும் தம்மையே ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்து ஏங்குவதையும் உணர்ந்தார். உடனே

அவர் சிருங்ககிரி மடத்தின் பொறுப்பைச் சுரேசுரரிடம் ஒப்படைத்து வான் வழியே விரைந்து தம் தாயருகே சென்ருர்.

"அன்னையே ! உன் மகன் வந்து விட்டேன். நான் என்ன செய்ய வேண்டும்," என்று கேட்டார். உயிர் பிரியும் நிலையில் இருந்த ஆர்யாம்பிகை கண் திறந்து, மலர விழித்து, கண்களில் நீர் வழிய, "மகனே, என் செல்வமே! எட்டு வயதில் துறவியாகிச் சென்ற நீ, இத்தனை ஆண்டுகள் கழித்து, என் உறவை நினைத்து வந்தாயே. என் பாக்கியமே பாக்கியம். எனக்கு எழுந்திருக்கவும் சக்தியில்லை. தேவாலயத்துக்குச் செல்லவும் முடியவில்லை. இனி மீண்டும் வருதல் இல்லாத இடத்துக்கே நான் போக விரும்புகிறேன். எனக்கு விடை தருவாயாக." உன்னைப் பிள்ளையாகப் பெற்றதையன்றி, நான் வேறெந்தப் புண்ணியமும் செய்ததில்லை. இந்தப் புண்ணிய பூமியே எனக்குக் கயிலாயம், வைகுண்டம் ஆகிவிட்டது. கங்கை யமுனை எல்லாம் பூரணையே! இனிமேல் எனக்கு என்ன வேண்டும் ?" என்ருள்.

தாயின் உள்ள நிலையை அறிந்த சங்கரர் "தாயே! இராமனைக் குமாரனுகப் பெற்ற தசரதனும், கோசலையும் வைகுண்டம் அடைந்தனர். கண்ணனைப் பெற்றவரும் வைகுண்டம் சென்றனர். பெற்ற பிள்ளைகள் ஞானியரானுல் அவரைப் பெற்ற தாயும் தந்தையும் முத்தியை யடைவர். அன்னையே! நீ கேட்கத் தகுந்த பரமார்த்தத்தைக் கூறுகிறேன், கேள், "உள்ளது ஒன்றே" வேறு ஒன்றும் இல்லை. அதை மனத்தால் நினைப்பது எளிது; அதுவே பிரமம்; அதுவே ஆன்மா; அதுவே சச்சிதானந்தப் பொருள். பரஞ் சோதியும் அதுவே. அதுவே நீ ஆவாய்" என்று வேதம் சொல்லும் உண்மையும் அதுவே" என்ருர்—சங்கரர். ஆர்யாம்பிகை கண்மூடி மௌனமாயிருந்தாள். பிறகு அவள் கண்விழித்து, "மகனே! என் மனம் இப்பரஞ்சோதியில் லயிக்க வில்லை. வணங்கும் பொருளும் வேண்டிய வரம் தரும் பொருளும் உண்டே; அதையே என் மனம் நாடுகிறது. அதையே சொல்லுக" என்ருள். உடனே சங்கரர் சிவ சொரூபத்தைத் தெளிவாக விளக்

கலானுர். "ஆதி மத்திய, அந்தரகிதமாய்ப் பிரமாணங் களைக் கடந்த, அப் பிரமேயனுய், அரி, அயன் தொழா நின்ற ஆனந்த மூர்த்தியாய், சந்திர சேகரனுய், கங்கா தரனுய்ப் பார்வதி தேவியோடு கயிலையல் வீற்றிருக்கும் பரமேசுவரனே தியானிக்கத் தக்கக் கருணைக் கடல்" என்ருர். அதற்குள் சிவ தூதர்கள் ஆர்யாம் பிகையை அழைத்தேக வந்தனர். அவர்களைக் கண்ட அன்னை நடுங்கிப் பதறியதைக் கண்ட சங்கரர் நாராய ணரின் திருவுருவத்தை விளக்கலானுர். "தாயே, பர வாசு தேவன், புருஷோத்மன், பரம கருணு நிதி, ஆயி ரந்தலையுடைய அரவணைமேல் வளர்கின்ருன். கமலால யத்தில் இருக்கும் திருமகள் வாழும் திரு மார்புடைய வன்; தாமரை மலரை வென்ற திருவடிகளை உடைய வன்; அவனே திருமகளையும் பூமகளையும் தழுவியதலை வன்- வைநதேயன்; கைகுவித்து வணங்க வரம் தருவான்."

சங்கம், சக்கரம், கதை, கட்கம்,கோதண்டம் என்ற ஐந்து ஆயுதங்கள் ஏந்திய அண்ணல்; பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரம் பொருள்—அவனே! அவன் திருமேனி கார் முகில் நிறமோ, கடல் நீல நிறமோ, முழு நீல மணி நிறமோ என்று கூற இய லாது. அவன் நித்திய சூரிகளுக்கு அருள்புரிகின்ருன். நீல முகில் வண்ணன் போல நீவாரதானியம் போல அவன் உருவம் இதயகமலத்தில் ஒளிர்வதுண்டு. உல கம் அனைத்தையும் ஒரு அடியால் அளந்து. மாவலியை அடக்கிய தலைவன்—அவன். விபவமாக விளைந்த அவ தாரம் பத்தாம். கூனி கோள் சொல்லக், கைகேயி வரம் வேண்ட, தந்தை ஏவ, வனம் சென்ற தர்ம மூர்த்தி அவனே. காண்டீபம் ஏந்திய அர்ச்சுனனுக்குப் பகவத் கீதையை அருளிய விசுவரூபம் காட்டிய பரமஆசாரி யன்—அவனே! அவன் ஐந்து நிலையுடையான். ஐம் படை உடையான்; ஐந்தெழுத்துள்ள சிவனும், வாக் குத் தேவியை மணந்த நான்முகனும் அவனே! எட்டெழுத்தால் அவன் அருளை எளிதில் அடையலாம். எட்டு உருக் கொண்டவன்—அவன்.

அவன் பெருமை யெல்லாம் நான் எப்படிச் சொல் வேன்" என்று கூறிச் சற்று நிறுத்திஞர். தாயுள்ளம்

உருகியது. "மகனே, நான் பரமபதம் சேரவே விரும்புகிறேன்" என்ருர். "அப்படியே ஆகுக" என்ருர்—சங்கரர். உடனே விஷ்ணு தூதர்கள் நால்வர் அன்னையின் ஆன்மாவை, விமானத்தில் ஏற்றிச் சென்றனர். அன்புத் தாயாகிய, அவரைப் பெற்றெடுத்த தாயின் உடல் சடலமாக அவர் மடியில் கிடந்தது. ஆன்ம ஞானியாகிய அவரது கண்கள்கூடக் கண்ணீரைப் பொழிந்தன.

உறவினர்கள் சொத்துக்கு ஆசைப்பட்டு ஆர்யாம்பிகையின் உடலைத் தகனம் செய்யப் போட்டியிட்டனர். சங்கரர் அவர்களைத் தடுத்து, "என் அன்னைக்கு வாக்களித்த வண்ணம் நான் அவளைத் தகனம் செய்வேன்" என்ருர்.

"சந்நியாசிக்கு ஊர் ஏது? உறவு ஏது? பந்த பாசங்கள் ஏது? சந்நியாசி தகனம் செய்வதாவது? இது உலகம் ஒவ்வாது!" என்று உறவினர்கள் சீறினர். சங்கரர் அவர்களைச் சபித்தார். பிறகு, தன்னைப் பெற்றவளின் பொன்னுடலைத் தம் தோள் மீது சுமந்து கொண்டு வீட்டுத் தோட்டத்துக்குச் சென்ருர். சநாதனர்கள், வைதீகர்களைக் கர்மத்தை நடத்த விடாதவாறு தடுத்தனர். உறவினர் ஒருவரும் வரவில்லை.

எனவே, சங்கரர் தம் வீட்டுத் தோட்டத்திலேயே சடலத்தை இறக்கிஞர். அக்கினியைத் தொழுதார்! உடனே அன்னையின் சடலம் தாஞகவே, தீமூட்டாமல் தகனமாகியது. ஆதி சங்கரர் அவ்வூர் மக்கள் ஞான மற்றுப் போவாராக!" என்று சபித்து விட்டுச் சென்ருர். அந்தச் சாபம் சிருங்ககிரி மடத்தின் முப்பத்து மூன்ரும் தலை முறையில், பீடாதிபதியாக இருந்த சிவாபிநவ நரசிம்மபாரதி என்பவரால் விமோசனமாயிற்று.

## பத்மபாதர் சந்திப்பு!

இதனிடையில் சேதுயாத்திரைக்குச் சென்று திரும்பிய பத்மபாதர், சங்கரரைத் திருவனந்த புரத்தில், ஆனந்த பத்மநாபர் திருக் கோயிலில் சந்தித்தார். சங்

கரரைக் கண்டவுடன் பதும பாதருக்குப் பேசுவதற்குக் கூட நாவெழவில்லை. ஆனால் கை கூப்பி மௌனமாய் மனக்கலக்கத்துடன் நின்றார். அப்போது சங்கரர் பத்ம பாதரை நோக்கி, "அன்பரே! உம் உள்ளத்தில் ஏக்கம் விளையும்படி உனக்கு நேர்ந்தது என்ன?" துறவி நிலை ஏற்ற உமக்கு இன்னும் உறவு, பந்தபாசங்கள் போகவில்லையோ? மனம் பண்டைய உறவைப் பற்றினால், ஞானத்திற்கு உதவியாகும் வைரக்கியம் பிறக்குமா?" என்று கேட்டார். பத்மபாதர் நடந்த தவற்றைக் கூறினார். சங்கரர், பத்ம பாதரை நோக்கி, "ஐய! உமது வார்த்திகம் முழுவதும் அழியும் என்பதை நீர் அதை எழுதத் தொடங்கிய போதே நான் அறிந்தேன். அது பிறந்த வேளை, நல்ல வேளை இல்லை. அதற்கு ஒரு சாபமும் நேர்ந்தது சென்றது குறித்து இனி வருந்திப் பயன் இல்லை" என்றார்.

## பஞ்சபாதிகையின் தோற்றம்

பிறகு சங்கரர் பத்மபாதரை நோக்கி, "உமது வியாக்கியானத்தில் முதல் அத்தியாயத்தில் நான்கு பாதங்களையும், இரண்டாவது அத்தியாயத்தில் முதல் பாதத்தையும் நீர் எனக்குப் படித்துக் காட்டியிருக்கிறீர். அது என் நினைவில் இருக்கிறது. நான் சொல்கிறேன். அதை நீர் எழுதுவீராக. அதுவே பஞ்சபாதிகை என்று உலகில் நிலைக்கும். பின்னுள் பகுதிக்கு உமது பழைய உரை கிடைக்காவிட்டாலும், குற்றம் இல்லை. சுருக்கமாகப் புதிய உரை ஒன்றை எழுதுக. அது விவரணம் என்று பெயர் பெற்று விளங்கும்" என்று அருள் புரிந்தார்.

பிறகு சங்கரர் திருவனந்தபுரத்தைவிட்டுத் திரும்பவும் சிருங்ககிரிக்குச் சென்றார் அங்கு சுரேசுரருக்குப்பதிலாக பிரித்வீதவர் என்பவரை அமர்த்தினார். அவருக்குப் பாரதி என்ற யோக பட்டப் பெயரையும் அளித்தார். பிரித்வீதவர் என்பவர் சிருங்ககிரி பீடத்தின் முதலாவது ஆசாரியராவர்.

அதன் பிறகு அத்வைத மடங்களைப் பாரத நாட்டின் நான்கு திசைகளிலும் அமைப்பதற்கு எண்ணிப் புறப்பட்டார். அவர் சென்ற ஸ்தலங்களைப் பற்றி வெவ்வேறுவரிசைக் கிரமத்தில் ஒவ்வொரு சங்கர விஜய நூல்களிலும் கூறப்படுகின்றன. ஆயினும், எல்லாமே அவர் சென்ற ஸ்தலங்களைக் குறிப்பிடுகின்றன.

## சிதம்பரம்

சங்கரர் சிருங்ககிரியிலிருந்து தமது சீடர்களுடன் புறப்பட்டுத் தமது மடத்துக்கு வந்து, சிதம்பரம் என்னும் ஆகாய ஸ்தலத்திற்குச் சென்றார். அங்கு அன்னாகர்ஷண யந்திரத்தை ஸ்தாபித்தார். அங்கு வருபவர்களுக் கெல்லாம் வயிறார அமுதளிக்க அந்த யந்திரத்தைப் பிரதிஷ்டை செய்தார். பின்னர் பதஞ்சலி முனிவரிடம் கௌட பாதர் பாடங் கேட்ட பகுதியைத் தரிசித்தார். அங்கு அவர் பஞ்சாட்க்ஷர யந்திரத்தை ஸ்தாபித்ததாகவும் கூறப்படுகிறது.

## மத்தியார்ஜுனம் செல்லல்

அதன் பிறகு அவர் தமது சீடர்களுடன் மத்தியார்ஜுனம் என்ற சிவதலத்துக்குச் சென்றார். இது காவேரிக்கரையில் தஞ்சையின் நடுவில் அமைந்துள்ள ஸ்தலமாகும். இந்த ஸ்தலத்தின் தமிழ்ப் பெயர் திருவிடை மருதூர் என்பதாகும். இங்குச் சங்கரர் சிவானந்த லகரி என்ற நூலை இயற்றியதாகக் கூறப்படுகிறது. இங்குக் கோயில் கொண்டுள்ள இறைவனின் திருப்பெயர், மஹாலிங்கேஸ்வரர் என்பதாகும்; சங்கரர், இறைவனைத் தரிசித்த உடன் மஹாலிங்கத்தின் உச்சி திறந்து ஈசன் தன் கையைத் தூக்கி, "அத்வைதமே சத்தியம்" என்று ஆணையிட்டு அசரீரி மொழிந்தார்.

## திருசிரபுரம்

அதன் பிறகு திருச்சிராப்பள்ளி என வழங்கும் திருசிரபுரத்தை அடைந்தார். அங்கு ஜம்புகேஸ்வரம் கோயிலிலுள்ள அகிலாண்டேஸ்வரியின் உக்கிரத்தைத்

தணிப்பதற்காகத் தாடங்கப் பிரதிஷ்டை செய்தார். அதாவது சிவசக்கர உருவாகவும், ஸ்ரீ சக்கரவடிவாக வும் உள்ள இரு இரத்தினமயமான தாடகங்களில், தேவியின் உக்கிரத்தை ஆவாஹனம் செய்து, அவற்றைத் தேவியின் திருச்செவிகளில் அணிவித்தார். அந்த ஊரில் ஒரு சிறு மடம் ஒன்றை அமைத்து அங்குச் சில நாட்கள் தங்கி இருந்தார். பின்னர் அங்கிருந்த பத்மபாதருடன் ஸ்ரீரங்கத்திற்குச் சென்றார்.

அங்குக் கோயில் கொண்டிருந்த ஸ்ரீரங்கநாதரைத் தரிசித்து, அங்கு ஜனங்களை வசியஞ் செய்யும் சக்தி வாய்ந்த ஜனாகர்ஷண இயந்திரத்தை ஸ்தாபித்தார்.

பின்னர் அங்கிருந்து தமது சீடர்கள் புடைசூழ மதுரைத் திருநகரை அடைந்தார். அங்கு ஆலவாய் அழகரை வணங்கி, மீனாட்சியம்மையைத் தரிசித்துக் கொண்டு சில நாட்கள் அங்குத் தங்கியிருந்து, புகழ்பெற்ற 'மீனாட்சி பஞ்சரத்ன ஸ்தோத்திரம்' என்ற தனிப்பாடலை இயற்றியதாகக் கூறப்படுகிறது. மதுரையிலிருந்த வேதாந்திகளுடனும், அறிஞர்களுடனும் வாதித்து, அத்வைதத்தை ஒப்புக்கொள்ளச் செய்தார்.

அதன் பிறகு துண்டி விநாயகரை வழிபட்டார். அங்கு, கணேச பஞ்ச ரத்தினம் என்ற பாடலை இயற்றியதாகக் கருதப்படுகிறது. அதன் பிறகு திருச்செந்தூருக்குச் சென்றார்.

அங்குள்ள கடற்கரையில் கோயில் கொண்டிருந்த செந்திலாதிபனைத் தரிசித்தார். உணர்ச்சிப் பரவசத்தால் பாடலானார் :

"கடற்கரையில் நீ கோயில் கொண்டிருப்பது எதற்காக? என் சந்நிதானத்தை அடைந்தோர், சம்சாரக் கடலைத் தாண்டி விடுவார்கள் என்று சூசகமாகத் தெரிவிப்பதற்கும், அலைகள் அடங்குவது போல அடியார்களின் ஆபத்துக்கள் இங்கு அடங்கிவிடும் என்பதை அறிவிப்பதற்கும் தானே?"

"ஆறுமுகனே! உனக்குத் தயை நிரம்பிய திருவிழிகள் பன்னிரண்டு உண்டல்லவா? அவற்றில் ஒன்றின்

கருணைத் திருப்பார்வையை என்மீது செலுத்தினுல் உனக்கு என்ன குறை வந்துவிடும்?"

"எப்போதும் உன் தோற்றமே என் பார்வையிலும், எப்போதும் உன் கீர்த்திக் கதைகளே என் செவிகளிலும், எப்போதும் உன் பவித்திரமான சரித்திரமே என் நாவிலும், எப்போதும் உன் பூசனைகளே என் கைகளிலும் நிலைநிற்க வேண்டும். என் உடல், உனக்கு அடிமையாக ஆட்பட வேண்டும். எனது செயல்கள் யாவுமே உன்னிடமே வயமாக வேண்டும்?"

இவ்விதமான பொருள்கொண்ட பாடல்கள் அடங்கிய ஸ்ரீ சுப்பிரமண்ய புஜங்கம் பாடியதாகக் கூறப்படுகின்றது.

அதன் பிறகு, கன்னியாகுமரி என வழங்கும், கன்னித் தெய்வம் கோயில் கொண்டுள்ள குமரித்துறைக்கு வந்தார். கடலில் நீராடி முக்கடல் சந்திப்பையும் கண் குளிரக் கண்டார். அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தார். பிறகு அங்கிருந்து தமது சீடர்களுடன் திருப்பதி என வழங்கும் வடவேங்கடம் நோக்கி நடந்தார். திருப்பதியை அடைந்ததும் கீழ்த்திருப்பதியை வலம் வந்து, ஏழுமலை ஏறித் திருவேங்கடவனைத் தரிசிக்கச் சென்ருர். நெடுமாலாகத் தோன்ற வேண்டிய திருமால், சக்தி சொரூபமாகக் காட்சியளித்தான். முருகன் என்ருல் சந்நிதியின் முன் மயில் இருக்கவேண்டும். திருமால் என்ருல் கருடன் இருக்கவேண்டும். இரண்டுமின்றி யாளி இருக்கும் அந்தத் தலத்துத் திருமாலை, விஷ்ணுவே சக்தியின் அம்சம் என்ற தத்துவக் கருத்துக் கேற்ப வணங்கி வழிபட்டுவிட்டு, அங்கு, பொன், பொருள்களைக் கவர்ச்சி செய்யும் வசிய சக்தி பொருந்திய 'தனுகர்ஷண' இயந்திரத்தைப் பிரதிஷ்டை செய்தார். அதன் காரணமாகத்தான் இன்றும், அங்குள்ள உண்டியலில் பொன்னும் பொருளும் நாள்தோறும் நாட்டு மக்களின் காணிக்கையாகக் குவிகின்றன. இங்கு ஆதிசங்கரர் 'விஷ்ணுபாதாதி கேசாந்த ஸ்தோத்திரம் என்ற துதிப்பாடல் இலக்கியத்தை இயற்றியதாகக் கூறப்படுகிறது.

## வடநாடு செல்லல்

அதன் பிறகு, வடவேங்கடத்திலிருந்து ஆசாரியர் தமது சீடர்களுடன் வடநாடு நோக்கிப் புறப்பட்டார். பஞ்சவடிக்குச் சென்ருர். நாசிக் என்ற கோதாவரி நதி தீரத்தில் கோயில் கொண்ட திரியம்பகேஸ்வரரை வழிபட்டார். அங்கிருந்து சங்கரர் சௌராஷ்டிரம் சென்ருர்.

## சோமநாதபுர விஜயம்

வரலாற்றுப் புகழ்பெற்ற சோமநாதபுரத்திற்குச் சென்று, துதிப்பாடல்கள் பாடி இறைவனைத் துதித்தார். முக்கியமான பன்னிரண்டு சிவஸ்தலங்கள் என்று புகழ் பெற்றவைகளில், சோமநாதபுரமும், நாசிக்கிலுள்ள திரியம்பக க்ஷேத்திரமும் முக்கியமானவையாகும். ஆசாரியர், இயற்றிய "துவாதச லிங்க ஸ்தோத்திரம்" என்ற துதிப்பாடல், பாரத நாட்டு ஒருமைப்பாட்டுக்கும், தெய்வீக அருள்நெறியில் சைவம் தழைக்கவும் உதவுவதாக உள்ளது.

## துவாரகை செல்லல்

அங்கிருந்து, ஏழு மோட்ச புரிகளில் ஒன்ருகிய துவாரகைக்குச் சென்ருர். அங்கு, சங்கரர் ஒரு மாத காலம் தங்கியிருந்தார். அத்வைத சித்தாந்தத்தை, இந்தியாவின் மேற்குத் திசையில் அமைந்த அந்த நகரில் நிலை நாட்டுவது அவசியம் என்று கருதிய சங்கரர், அங்கு துவாரகா பீடம் என்ற பீடத்தை ஸ்தாபித்தார். பத்ம பாதரை, அங்கு பீடாதிபதியாக நியமித்து, தீர்த்த சம்பிரதாய வழி வகையில் அத்வைத பிரசாரம் செய்ய ஏற்பாடு செய்தார். அங்குக் கோயில் கொண்ட பிரானையும் சித்தேஸ்வரரையும் வணங்கி வழிபட்டார். துவாரகா மடத்தின் யோகபட்டம்—'ஆசிரமி அல்லது தீர்த்த' என்பதாகும்.

## உஜ்ஜெயினி விஜயம்!

பிறகு சங்கரர் துவாரகையிலிருந்து புறப்பட்டு, மால்வாவிலுள்ள உஜ்ஜெயினிக்குச் சென்றார்.

உஜ்ஜெயினி என்பது துவாதசலிங்க க்ஷேத்திரங்களில் ஒன்றாகும். அங்குக் கோயில் கொண்டுள்ள மஹா காளீஸ்வரரையும், மஹா சண்டிகா தேவியையும், வணங்கி வழிபட்டார். உஜ்ஜெயினி நகரத்தில் 'சக்தியே பிரமம்' என்று மகா காளியை உபாசனை செய்து வந்த திரிபுர குமாரர், சிவசக்தி பராயணர், பூரணபோதர், பிந்து புஜர், சுத்தவித்ய கலாநிதி வீர சாத்தர், பூரணானந்தர் முதலிய அறிஞர்கள் பலர், சங்கரரை வாதுக்கு அழைத்து 'சக்தியே பிரமம்' என்று வாதாடினர். சங்கரர் அவர்களை நோக்கி, "ஐயன்மீர்! வேதசிரசு விளக்கத் துணியாத வஸ்துவைப் பரம ரகசியம் என்று பராசக்தியே விளக்கியிருக்கிறாள். இந்திரன், வாயு, அக்கினி என்ற தேவர்கள் மூவர்களும் அறிய முயன்ற யக்ஷத்தின் ஸ்வரூபத்தை அவளே விளக்கினாள் என்று வேதம் கூறுகிறது. எந்தப் பராசக்தியை நீங்கள் மஹாசக்தி என்று தியானிக்கிறீர்களோ, அவளே விளக்கிய தத்துவம்தான் வேதத்தின் சாரம். ஆகையால் உஜ்ஜெயினி மாகாளியின் அருளால் நீங்கள் யாவரும் தத்துவ தரிசனத்தைப் பெற முயற்சி செய்யவேண்டும்" என்று கூறித் தமது அத்வைத தத்துவத்தை அவர்களுக்கு விளக்கினார்.

## வடமதுரை செல்லல்

பின்னர், அங்கிருந்து வடமதுரைக்குச் சென்று பிருந்தாவனம், கோகுலம் முதலிய கண்ணபிரான் திருவிளையாடல் புரிந்த திவ்ய ஸ்தலங்களைத் தரிசித்தார்.

## கௌடபாத தரிசனம்

பின்னர் அங்கிருந்து மீண்டும் கங்கைக் கரையை அடைய வேண்டுமென்று எண்ணி, சீடர்கள் புடைசூழ பரத்வாஜர் ஆசிரமம் என்ற புண்ணியத் தலத்துக்குச்

சென்ஞர். அங்கு, கௌட பாதர், சிரஞ்சீவியாக இருப் பதை அறிந்து கங்கைக் கரை வழியாகச் சென்று கொண்டிருந்தார். அப்போது, செம்பொன் மேனி யுடனும் கழுத்திலே ஸ்படிக, தாமரை, ருத்திராட்ச மணிகள் விளங்கக் காட்சியளித்த கௌடபாதரைத் தரிசிக்கும் வாய்ப்புச் சங்கரருக்குக் கிடைத்தது. சங்கரர் அவரை வணங்கிஞர். பின்னர் இருவரும் ஒரு மணல் மேட்டில் அமர்ந்தனர். கௌட பாதர், தமது சீடரான கோவிந்தர் உபதேசித்த உண்மைகளைப் பற்றி விசா ரித்தார். மேலும் தத்துவ உபதேசம் செய்தார். பிறகு சங்கரர் தாம் இயற்றிய மாண்டுக்கிய உபநிஷத பாஷ் யத்தையும் அதற்கிசைந்தாற்போலக் காரிகை உரை யையும் தாம் இயற்றியதாகவும்,அதனை உலகம் பிரிக்க இயலாது என்றும் கௌடபாதரிடம் கூறிஞர். பிறகு, உலகத்தில் ஞானமார்க்கம் நிலைக்க வேண்டும் என்றும், தம் உள்ளம் ஆன்மானந்தத்தில் லயிக்க வேண்டும்" என்றும் கூறி, அந்தப் பெரியாரிடம் வரமும் ஆசியும் பெற்ருர். பின்னர், கௌடபாதர் மறைந்தார்.

## திருக்கைலாய யாத்திரை

அதன் பிறகு ஆதிசங்கரர், இமயமலைத் தொடர் களிலுள்ள பல ஸ்தலங்களை நோக்கிச் செல்லலாஞர்.

## பாஞ்சாலம் சென்றது

ஆதி சங்கரர், இமயமலை வழியே நடந்து, சிந்துநதி பாயும் பாஞ்சால நாட்டுக்குச் சென்ருர். அங்கு, கங்கை நதியின் நீரை நிரப்பிய இரண்டு கும்பங்களுடன் ஜ்வா லாமுகி என்ற தேவியின் திருக்கோயிலுக்குச் சென்ருர். அங்கு ஆலயம் இல்லை. கோபுரம் இல்லை. இரண்டு மலைகளுக்கிடையே எழுந்த இயற்கைத் தீயுருவத்தில் தேவி அங்குக் காட்சியளிப்பதைக் கண்டார். புனித கங்கை நீரைத் தேவியின் திருமுன்பு வைத்தார். தீச் சுவாலையையே திருமுகமாகக் கொண்ட அந்தத் தேவி கங்கை நீரைப் பருகினள். வளர்ந்து பேரொளியுடன் பொலிவதைக் கண்டு, தேவியை வணங்கிஞர். அன்று

முதல் ஜ்வாலா முகிக்குக் கங்கை நீரைச் சமர்ப்பிக்கும் பழக்கம் உண்டாயிற்று. வேறு எவ்வகை நீரையும் தொட்டறியாத அந்த ஒளிப் பிழம்பு, இன்னும் புனித கங்கையின் நீரை உவப்புடன் ஏற்கிறது. அதன் பிறகு, சங்கரர் தமது சீடர்களுடன் அங்கிருந்து புறப் பட்டு, உலக நாடுகளின் கவனத்தைக் கவர்ந்திழுக்கும் காஷ்மீரம் நோக்கிச் சென்றார்.

## காஷ்மீரத்தில் சங்கரர்

காஷ்மீர நாட்டில், ஸ்ரீநகரத்தில், ஒரு சிற்பக்கலை மண்டபத்தில், நாற்புறமும் வாயில்கள் உள்ள சர்வக்ஞ சிம்மாசனம் என்ற பீடம் ஒன்று இருந்தது. அந்தப் பீடத்தின் நான்கு திசை வழிகளிலே, தென் திசை வழி மட்டுமே அடைபட்டிருந்தது. மற்ற மூன்று திசைக ளிலும், கிழக்கு, மேற்கு, வடக்கு ஆகிய திசைகளிலி ருந்து சென்ற ஞானியர் அங்கு வெற்றி பெற்றிருந்த னர். அன்றளவும் அந்தத் தென்திசை வாயில் வழி யாக எந்தவொரு தென்திசை ஞானியும் சென்றதில்லை. எனவே, ஆன்மஞானியான ஆதிசங்கரர் தென்னிந்தி யாவின் தன்மானத்தையும் ஆன்மஞானப் புகழையும் நிலைநாட்ட, அந்தப் பீடத்தின் தென்திசை வாயிலை நோக்கி நடந்தார்.

வாயில் வழியாக உள்ளே நுழைய முயன்ற ஆதி சங்கரரை, கணுத தார்க்கீகர் என்போர் தடுத்தனர். சிலர் அவர் முன்பு வந்து "பரமாணு ஒன்றிரண்டு மோது வதால், இரட்டையணுப் பிறக்கும் என்பர். இரட்டை அணுவினுள் அணுத்தன்மை அடங்கும் இடம் எது?" என்று நீங்கள் பதில் உரைத்தால்தான், சர்வக்ஞ பீடத் திற்குச் செல்ல உங்களுக்கு வழி கிடைக்கும் என்று சங்கரரை மடக்கினார்கள்.

ஆதிசங்கரர், "இருமையுள்ள பரமாணுவில் இருக்கும் இருமையை நீங்கள் அறிவீர்களல்லவா? இரு மைத்தன்மையே, இரட்டை அணுவின் இயல்புக்கும் காரணமாம்." என்று பதில் கூறினார். உடனே, கணு தரைச் சேர்ந்தவர்கள், சங்கரருக்கு வழிவிட்டு விலகி னர். அடுத்தாற் போல, போர்வீரர்களைப் போன்ற

கௌதம தார்க்கீகர், சங்கரரை வழியில் தடுத்து, "கணாத முக்திக்கும் கௌதம முக்திக்கும் வேற்றுமையாது?" என்று கேட்டனர். அவர்களுக்கு ஆதிசங்கரர், "பண்புத் தொடர்பு பெருமல், ஆகாயம் தனித்து இருப்பது போல நிற்பதே கணாத முக்தி. பண்புத் தொடர்பு அற்றிருக்கும் ஆனந்த மயமான ஆகாயமே கௌதம முக்தி." இருவகைத் தார்க்கீகர்களும் இறைவனை நிமித்தகாரணன் என்றே கருதுவர்" என்று விடை கூறினுர்.

உடனே, கௌதம தார்க்கீகர் சங்கரருக்கு வழி விட்டு விலகினர். அடுத்தாற்போலச் சாங்கியர்கள் சங்கரர் முன்பு தோன்றி, "மூலப்பிரகிருதியே உலகத்தைப் படைக்குமா, அல்லது அதற்கும் ஒரு காரணம் வேண்டுமா?" என்று கேட்டனர். "மூலப்பிரகிருதியே உலகத்துக் காரணமாயிற்றே!" என்று சங்கரர் பதில் உரைத்து, சர்வக்ஞபீடத்துத் தென்துறை வாயிலை அணுகினர். அதன் வாயிற் கதவுகள் தாளிடப்பட்டிருந்தன. அங்கு நால்வகைப் பௌத்தர்களும் சங்கரரிடம் தமது கொள்கையைப் பற்றிக் கேள்வி கேட்டனர். சங்கரர் பதில் கூறிவிட்டு நடந்தார். சைமினியர் குறுக்கிட்டு, "சப்தம் உருவம் உடையதா? அது குணமோ பொருளோ" என்று வினவினர். "எழுத்துக்கள் நித்தியமானவை என்பது உமது தத்துவக் கொள்கை. ஒளித் திறனே நித்தியமும் வியாபகமுமாம்" என்று சட்டென்று பதில் சொன்னுர்—சங்கரர். உடனே, சர்வக்ஞ பீடத்தின் தாளிட்ட தென்திசை வாயிற் கதவுகள் தாஞகவே திறந்தன. இனிமேல் தம்மிடம் யாரும் வாதிப்பவர் இல்லை என்று கருதிய சங்கர்ர், சர்வக்ஞ பீடம் ஏற முயன்ருர். அப்போது, அங்கு மறைந்திருந்த சாரதை, சங்கரரிடம் சில வினுக்களை எழுப்பி விடை பெற்ற பிறகே, பீடத்திலே சங்கரருக்கு இடம் தந்தாள். சாரதையின் அனுமதியைப் பெற்ற சங்கரர், சர்வக்ஞ பீடத்தில் அமர்ந்தார். 'ஓம்' என்ற பிரணவ ஒலியும் பிரம்மஞான ஒளியும் தோன்றி மின்னி முழங்கின. மலர் மழை பொழிந்தது. உலகத்தின் ஒப்பற்ற ஞானியர் எல்லாம் புகழச் சங்கரர் சர்வக்ஞ பீடம் ஏறினுர்.

தமது சீடர்களுடன் காஷ்மீரத்தில் ஆதிசங்கரர் சிலகாலம் தங்கியிருந்தார். அவர் தங்கியிருந்த அந்தக் காலத்தில் நிகழ்ந்த சுவையான வரலாற்றுச் செய்திகளிற் சில, அபூர்வமான பிறமொழி நூல்களில் காணப்படுகின்றன. அவற்றில் ஒன்று பின்வருமாறு: காஷ்மீரத்தில் ஆதி சங்கரர் தங்கியிருந்தபோது, "சக்தியே பரதெய்வம், அதற்கு மிஞ்சியது ஒன்றுமே இல்லை" என்ற கருத்துக் கொள்கையையே உறுதியான மதநம்பிக்கையாகக் கொண்டிருந்த சாக்தர்கள், அபிநவகுப்தர் என்ற அறிஞர் ஒருவரின் தலைமையில் ஆதிசங்கரருடன் வாதஞ் செய்ய வந்தனர். அவர்கள் சங்கரரிடம் "பிரம சூத்திரத்தை இயற்றிய வேத வியாச முனிவரே சாக்தர் என்றும், அவர் இயற்றிய பிரம்ம சூத்திரமே சாக்தேய தந்திரம்தான் என்றும் நாவன்மையுடன் வாதஞ் செய்தனர். ஆதிசங்கரரோ, அருள் நிறைந்த ஆன்ம ஞானியாகையால், அந்தப் பெருங்கூட்டத்தினரின் மனம் உருகும்படி, வியாசரின் தத்துவங்களை வேத வாக்கியங்களின் உதவியைக் கொண்டு தெளிவாக விளக்கினர். இவர் எவ்வளவுதான் அவர்களுக்கு விளக்கமாகப் போதித்தும்கூட அவர்கள் மனம் திருந்தவில்லை. தோல்வி பெற்ற அவர்கள் சோர்வுடன் பிரிந்து சென்றனர்.

## அபிநவகுப்தரின் துரோகம்!

அபிநவகுப்தரோ, தமது சாக்த மதமே காமரூப தேசத்தில் என்றுமே நிலைபெற வேண்டும் என்ற பெரு விருப்பத்துடன் இருந்தார். அத்வைத தத்துவங்கள் தமது சாக்தேய மதத் தத்துவத்தின் வலிமையைக் குறைப்பதை உணர்ந்த அவர், வாதத்தால் ஆதிசங்கரரை வெற்றி பெற முடியாமையினால், வேறு வழியில் அழிக்க முற்பட்டார். பசுத்தோல் போர்த்த புலியைப் போல ஆதிசங்கரரின் சீடர்களில் ஒருவரைப்போல நடித்தார். தமது மந்திர சித்தியினால் துஷ்பிரயோகம் ஒன்றைச் செய்து ஏவி விட்டார். அந்த ஏவலினால் ஆசாரியருக்கு மூல நோயும், மரணமும் தோன்றுமாறு ஏவல் செய்தார். அந்த மந்திரத்தின் அதிதேவதையினால் ஆசாரியரைக் கொல்ல முடியவில்லை. அது

மூலரோகத்தின் அளவிலேயே அடங்கி இருப்பதை அறிந்த அபிநவகுப்தர், சீடர்களின் கூட்டத்தோடு சீடராகவே நடித்து வந்தார்.

இப்படியிருக்க, நாள்தோறும் சங்கரரின் காவியா டைகளை அழுக்கு நீக்கிக் காய வைக்கும் பொறுப்பை அவரது சீடர்களில் ஒருவரான ஆனந்தகிரியார் ஏற்றி ருந்தார். ஒருநாள் ஆசாரியரது ஆடை இரத்த மய மாய் இருப்பதைக் கண்ட அவர் மிகவும் மனம் வருந்தி னர்.

அவர் ஆடையை நன்ருகக் கசக்கி, அலசிக் காய வைத்த பின்னர், குருவரர், தனிமையில் இருக்கும் நேர மறிந்து, அவரிடம் சென்று, "இந்நோய் வருவதற்குக் காரணம் யாதோ?" என்று கேட்டார். சங்கரர் புன்ன கையுடன் அவரை நோக்கி, "ஐய! இந்நோய் கர்ம வசத் தால் வந்தது அல்ல. தேக தோஷத்தாலும் இந்த நோய் வந்தது அல்ல. ஆன்ம ஞானியாக இருப்பவன் தன் உடலுக்கு வரும் நோய்களைப்பற்றி நினைத்தலும் தகாது. அது எப்படியோ தாகை வந்தது போல், எப்படியோ தாகைவே ஒழிந்துவிடும். இதைப்பற் றிய கவலை நமக்கு ஏன்?" என்ருர். ஆனந்தகிரி தம் வேலையுண்டு தாம் உண்டு என்று இருப்பவர். ஆயினும் ஆசாரியர்பால் அன்புமிக்க அவர் மற்ற சீடர்களுடன் கலந்து ஆலோசித்து வைத்தியத் துறை யில் வல்லவர்களை அழைத்து வந்து, ஆசாரியரிடம் கூறிஞர். சங்கரரோ, "வைத்தியர்கள் இந்த நோயைத் தீர்க்க வல்லவர்களாயின் தீர்க்கட்டுமே" என்ருர். வைத்தியர்கள். எவ்வளவோ முயன்றும் நோய் தீரவில்லை. எனவே, "மருந்திஞல் தீராத நோய் மந்திரத்தால் தீரலாம்," என்ற பத்மபாதர் இதனை அறிந்ததும் தமது அனுபவமான மகா மந்திரத்தை ஜபித்தார். உடனே ஆசாரியர் திருமேனி நோய் நீங்கிக் குணம் பெற்றது. மந்திரத்தை ஏவிய அபிநவ குப்தர் அந்த நோய்க்கு ஆளாஞர். "பிறர்க்கு ஏவும் திறம் கொண்ட எனக்கு, நான் ஏவிய நோய் வருமா யின் அதனை நீக்க எனக்கு வழி தெரியாதே!" என்று கலங்கிஞர்—அபிநவகுப்தர். பிறகு அந்த நோயிஞ

லேயே, அவர் இறந்தார். "தன்வினை தன்னைச் சுடும்' என்பதுபோல, அவர் செய்த வினை அவரையே அழித்தது.

அடுத்து மற்றொரு நிகழ்ச்சியும் சங்கரர் காஷ்மீரத்தில் தங்கியிருந்த பொழுது நிகழ்ந்தது. அது பின்வருமாறு :

ஆசாரியர், காஷ்மீரத்தில் அந்தணர் ஒருவருடன் சக்தி தத்துவம் குறித்து வாதஞ் செய்தார். அந்த வாதத்தில் சங்கரரால் வெற்றி பெற இயலவில்லையாம். எனவே, சௌந்தரியலஹரி என்ற தேவியின் திருப்புகழை, அவளது அழகு மேனியின் அற்புதலக்ஷணத்தை அழகிய பாடல்களால் பாடினார். அதுவே "சௌந்தரிய லஹரி" என்ற நூலாகக் கருதப் படுகிறது.

அடுத்து, மற்றொன்று பின்வருமாறு: அதாவது; சங்கரரது சீடர்களில் மிகவும் இளைஞரான ஒருவர் இருந்தார். அவர் ஒருநாள், துறவியல் வாழ்வு முறைப்படி, காஷ்மீரத்திலுள்ள 'புருஷியார் மொஹல்லா' என்ற அந்தணர்கள் வசிக்கும் பகுதியிலுள்ள ஒரு வீட்டில் பிக்ஷைக்குச் சென்றார்.

அந்த வீட்டின் தலைவியான பிராமண மங்கை தமது மருமகளை அழைத்து, வாசலில் நின்றிருந்த இளந் துறவிக்குப் பிக்ஷையிடச் சொன்னாள். அவளோ மிகவும் மனவருத்தத்துடன் சென்று, அந்த இளந் துறவிக்கு அன்னமிட்டாள். அவளது மனக்கலக்கத்திற்குக் காரணம் என்னவென்று அந்த இளந் துறவி விசாரித்தார். அதற்கு அவள் "பிறரிடம் யாசகம் செய்தாவது, உணவு ஏற்று உங்கள் உடல்காக்கும் நீங்கள், உங்கள் உயிரை, உங்கள் ஞானத்தால் காக்க முடியாமல், இன்று இரவே இறந்து விடுவீர்கள். இது ஏனோ எனக்குத் தீர்க்க தரிசனமாகத் தெரிகிறது. அதனால் தான் நான் வருந்துகிறேன்!" என்றாள். உடனே பயந்து போன அந்த இளந்துறவி, இந்த நிகழ்ச்சியை ஆசாரியர் அவர்களிடம் சென்று முறையிட்டார். சங்கரர் அந்த இளம் பிராமணியின் வீட்டிற்குச் சென்றார்.

அவள் வீட்டார் சங்கரரை வரவேற்று உபசரித்த னர். சக்தி சாஸ்திரங்களில் வல்லவளாக இருந்த அந்த இளமங்கையுடன், நெடு நேரம் விவாதித்த சங்கரர் அவளது ஞானத் திறனைப் பாராட்டி அன்பு மிகுதியி னல் 'தரங்கம்' என்ற பெண்கள் தலையில் சூடும் ஆபர ணம் ஒன்றைப் பரிசளித்தார். இன்றும் காஷ்மீரத்து அந்தணப் பெண்கள் அத்தகைய ஆபரணத்தைத் தலையில் சூடி வருகின்றனர்.

அதன் பிறகு சங்கரர் காஷ்மீரத்தில் தாம் தங்கி யிருந்த இடத்திற்குச் சென்று விட்டார்.

அதன் பிறகு ஆதிசங்கரர் காஷ்மீரத்துச் சாரதா பீடம் உலகிற்கு நிலையான நலன்களை வழங்க வேண் டும் என்றுகருதி. அதனைத் தென்னுட்டில் எழுந்தருளச் செய்ய எண்ணங்கொண்டார்.

சாரதை நித்திய வாசம் செய்யும் சிருங்க கிரியில் அந்தப் பீடம் விளங்குமாறு அருள் புரிந்தார். பிறகு தமது சீடர்களில் பலரை, கங்கைக் கரையிலும் பிற புண்ணிய பூமியிலும் வேதாந்த தத்துவங்களை விளக்கச் சொல்லிவிட்டு, அங்கிருந்து தவமுனிவர்கள் வாசஞ் செய்யும் புகழையுடைய இமயமலையிலுள்ள திருத்தலங்களுக்குப் புறப்பட்டார். அவருடன் தோட காசாரியார் என்ற சீடரும், பத்மபாதர் என்ற சீடரும் தான் பின் தொடர்ந்தனர். சங்கரர் அங்கிருந்து இமய மலை நோக்கிச் சென்ற பிறகு, அவர் தங்கியிருந்த காஷ்மீரப் பகுதியின், ஒரு குன்றுக்கு **'சங்கராச் சாரிய கிரி'** என்ற பெயரைக் காஷ்மீரத்து மன்னன் ஒரு வன் சூட்டினுன். அங்கு ஒரு கோயிலையும் கட்டி வைத் தான். அந்தக் கோயில் தோன்றிய' காலத்தைப் பற் றிய செய்திகள் நூல்களில் முரண்பாடாகக் காணப் படுகின்றன. ஜெனரல் அன்னிசல்ஹாம், ஜென்ரல் கோல் என்பவர்கள் அந்தக் கோயிலை மாமன்னர் அசோகரின் மகனுன ஜாலுகன் என்பவன் நிர்மாணித்த தாகக் கூறுகின்றனர். 'ராஜதரங்கிணி' என்ற காஷ்மீர நாட்டு வரலாற்று நூலில் இந்தக் கோயிலைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

'சங்கராச்சாரியார் திருக் கோயில்' என வழங்கும் இந்தத் திருக் கோயில் காஷ்மீர்ப் பள்ளத்தாக்கில், ஸ்ரீ நகரில் 1000 அடி உயரத்தில் உள்ள 'தக்தி சுலைமான்' என்ற குன்றின் மேல் நிர்மாணிக்கப் பட்டுள்ளது. அந்தத் திருக் கோயிலை, கோபாதித்யன் என்ற காஷ்மீர தேசத்து மன்னன், கி. மு. 368லிருந்து 308ல் கட்டிய தாகவும், அதன் பிறகு, ஸெயினுலாப்தீன் என்ற இஸ்லாமிய மதச்சார்புடைய மன்னர் அந்தக் கோயிலைப் பழுது பார்த்துச் செப்பனிட்டதாகவும், 17-7-1949 ஆம் தேதியிட்ட ஹிந்துப் பத்திரிகைக் குறிப்பு ஒன்று கூறுகிறது. (பக்கம் 15-2 ஆவது பத்தி)

பாரதநாட்டின் வடக்குப் பகுதியில் உலகத்தின் கவனத்தைக் கவர்ந்திழுக்கும் காஷ்மீரத்தின் தலைநகரில், சங்கராச்சாரியகிரி என்ற அந்தத் திருக்கோயில் வாடாத தத்துவ மலர் போன்று மணம் வீசி வருகின்றது.

## நேபாளத்தில் ஆதிசங்கரர்

ஆதிசங்கரர் 'நேபாளத்தின் தலைநகரான காட்மாண்டு என்ற நகரத்துக்குத் தமது சீடர்களுடன் சென்றிருந்தார். அந்த நகரத்தில் கன்னிகேஸ்வரி கோயில், என்ற தேவியின் திருக்கோயில் மிகவும் புகழ் பெற்று விளங்கியது. அந்த நகரத்தில் சாக்தர்கள் ஏராளமாக இருந்தனர். அந்தக் கோயிலிருந்த 'பண்டாக்கள்' மிகத் தீவிரமான சாக்தர்களாக இருந்தனர். அந்த நகரத்து மங்கையர்களுக்கு 'வைதவ்யம்' என்பதே கிடையாது. அவர்களுக்குத் திருமணம் ஆவதற்கு முன்பே, அந்தக் கோயிலின் மதகுருவே தாலி கட்டிவிடுவார். அதன் பிறகு திருமணம் செய்து கொண்ட பெண்கள் தமது கணவனை இழந்தாலுங் கூட, கோயிலுக்குச் சென்று கோயில் திருப்பணிகளில் ஈடுபட்டுவிடுவார்கள்.

அந்தக் கோயிலில் கோரக்கர் என்ற பிரபல சித்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் சக்தி தத்துவத்தில் சிறந்து விளங்கி வந்தார். சங்கரர், அவருடன் வாதஞ் செய்ய நேர்ந்தது. கோரக்கர் மிக்கத் தவவலிமையுடை

யவர். சக்தியே பரதேவதை என்றும், பிரம்மம் இயங்குவதற்கும் ஜீவன் பிரம்மத்தோடு ஐக்கிய மாவதற்கும் சக்தியே ஆதாரம் என்றும் அவர் வாதிட்டார். சங்கரர் 'தத்வமஸி' என்ற அத்வைத தத்துவத்தை வற்புறுத்தி விளக்கம் கூறினுர். "வெறும் பிரம்மம் மட்டும் இயங்காது; இயங்கவும் முடியாது. ஜீவனும் சக்தியின்றி இயங்கமுடியாது. எனவே, ஜீவனும் பிரமமும் இரண்டல்ல என்ருலும் ஒன்ருவதற்குச் சக்தியே மூல காரண காரிய கர்த்தாவாகிறது!" என்று கோரக்கர் வாதமிட்டார். அவர் கையிலே பிரம்மதண்டம் வைத்திருந்தார். அதனைச் சங்கரர் முன்பு நீட்டி நீட்டி வாதிட்டார். என் கையிலிருந்த பிரம்மதண்டத்தைத் தவத்தின் சின்னமாகக் கருதி, "பிரம்மத்தையே எண்ணி யெண்ணிச் சிந்தித்துத் தவமிருந்த நான், எனது பிரம்மதண்டம் எப்படி ஜடமாக இருக்கிறதோ, அதுபோலவேதான் அந்தப் பிரமமும் ஜடமாகவே எனக்குத் தோன்றுகிறது. அதிலே சக்தியில்லை; பிரம்மத்தாலும் அது உயிர் பெறமுடியாது. "உமது பிரம தத்துவத்தால், இந்தப் பிரம்மதண்டத்திற்கு உயிரூட்ட முடியுமா?" என்ருர். சங்கரர் புன்னகை செய்தார். உடனே கோரக்கரின் கையிலிருந்த பிரம்மதண்டம் பாம்பாகி நெளிந்தது. கோரக்கர் அதனைக் கைவிட்டார். பிரம்மமும் சக்தியும் ஒன்றேதான்? அவையும் இரண்டல்ல!" என்று சங்கரர் மீண்டும் தமது அத்வைத தத்துவத்தையே வற்புறுத்தினுர். கோரக்கர் சங்கரரைப் பணிந்தார். அந்நாட்டு மன்னனும் இதனை அறிந்து, சங்கரரை வரவேற்றுத் தனது நாட்டின் வரிப்பணத்தில் ஒரு பகுதியை, அத்வைத தத்துவப் பிரசாரத்திற்காக ஒதுக்கினன். இன்றும் அந்தத் தொகை பல்கிப் பெருகிப் பயன்படாமல் இருப்பதாகக் கூறப்படுகிறது. சங்கரர் பொருளைத் தீண்டாமல், தெய்வ அருளையே தாம் நாடியதோடு, பிறர் நாடவும் போதித்து வந்தார். சக்தி தத்துவம் பிரம்ம தத்துவத்தோடு இணைந்தே இருக்கும் என்ற புதிய கோட்பாடு, சங்கரர் கோரக்கர் வாதத்திலே உருவாகியது. அதன் துணையாகத்தான் சங்கரர் சக்தி பீடங்களிலும், ஸ்ரீசக்கர பிரதிஷ்டை என்ற தாந்திரீக முறைகளிலும் கவனஞ் செலுத்தலானுர்.

## பதரிநாத் விஜயம்

அதன் பிறகு ஆதி சங்கரர், காஷ்மீரத்திலிருந்து பதரிகாசிரம் நோக்கிப் புறப்பட்டார். இமயமலைத் தொடர் வழியில், இயற்கையெழில் சூழ்ந்த சூழ்நிலையில் கர்ஹ்வால் ஹிமாலயப் பகுதியானது, இந்தியாவின் தவப்பூமியாகக் கருதப்படுகிறது. இந்தப் பதரிகாசிரமப் பகுதியிலிருந்த மாதவ முனிவர்கள்தான் வேதங்களையும், உபநிஷதங்களையும் இயற்றி உலகுக்கு அளித்தவர்கள். உத்தர மீமாம்சையை இயற்றிய பதராயனர் என்பவர் இந்தத் தலத்தில் கி. மு. 6 ஆவது நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்ததாகத் தெரிகிறது.

ஆதி சங்கரர், பதரிகாசிரமத்திற்குச் சென்ற பொழுது, மலைகளிலும் பனிக்கட்டிகளின் மீதும் நடந்தே சென்றார். பதரிகாசிரமம் என்பது ஹரித்துவாரிலிருந்து 184 மைல் தொலைவிலுள்ள தலமாகும். அது தரைமட்டத்திலிருந்து 10,244 அடி உயரத்தில், இமயமலைத் தொடரில் அமைந்துள்ளது. இந்த நூற்றாண்டில் அங்குச் செல்வதானாலும் குறைந்தது இருபத்தோரு நாட்கள் தொடர்ந்து நடந்து பிரயாணம் செய்தால்தான் பத்ரி நாத்தை அடைய முடியும்.

ஆதிசங்கரர், ஸ்ரீநகரிலிருந்து, ருத்ரபிரயாகை, அகஸ்திய முனிவர் மலை, குப்தாக்ஷி, ராம்புரம், கௌரி குண்டம் முதலிய பகுதிகளைக் கடந்து பதரிகாசிரமத்தை அடைந்தார். அங்கு ஒருநாள் அவரது கனவில் திருமால் தோன்றி, தம் விக்ரஹம் நாரத குண்டத்தின் அடியில் மூழ்கியிருப்பதாகவும் அதனை அலக நந்தா நதியிலிருந்து எடுத்து வந்து, அதற்கு ஒரு கோயில் எழுப்ப வேண்டும் என்றும் கூறினார். சங்கரர், அந்தக் கனவுப்படியே, திருமாலின் சிலையை எடுத்துக் கோயில் கட்ட முனைந்தார். பத்மபாதரின் முயற்சியாலும், கர்ஹ்வால் மன்னர் ஒருவரின் உதவியாலும் பத்ரிநாத் கோயில் கட்டப்பட்டதாகவும், பத்ரிநாத் தலவரலாறு கூறுகின்றது.

அந்தத் திருமாலின் விக்ரகத்தைப் பௌத்தர்களோ அல்லது சமணர்களோதான், அலகநந்தா நதியில் போட்டிருக்க வேண்டும் என்றும், அல்லது திபேத்தில் இருந்தநாடோடிகள் சிலர். கோயிலின் பெருஞ் செல்வத்தைக் கொள்ளையிட்டு, விக்ரகத்தை அலகநந்தா நதியில் போட்டிருக்க வேண்டும் என்றும் அந்தப் பகுதி மக்களிடையே பல கர்ண பரம்பரைக் கதைகள் கூறப்படுகின்றன.

அங்கு, ஆதிசங்கரர், திருமாலின் தரிசனத்தைக் கண்டு, ஷட்பதி ஸ்தோத்திரம் என்ற துதிப்பாடலை இயற்றியதாகக் கூறப்படுகிறது. ஆறு சுலோகங்கள் கொண்ட அந்தப் பாடல்களில், "அலையுங்கடலும் ஒன்றே என்பதுபோல நீயும் நானும் ஒன்றேதான், ஆயினும் கடலின் அங்கம்தான் அலையே ஒழிய, கடல், அலையைச் சார்ந்ததல்ல! அவ்வாறே நான் உனது உடைமையே தவிர, நீ எனது உடைமையல்ல" என்ற கருத்து மிளிர இனிமையாகக் கூறியுள்ளார். கி. மு 486-ல் ஜோதிர் மடத்தைப் பதரிகாசிரமத்தில் ஸ்தாபித்து, அங்குத் தோடாகாசாரியரை மடாதிபதியாக்கினார். அதன் பிறகு அங்கிருந்து திருக்கைலாயம் நோக்கி நடக்கலானார்.

## திருக்கைலாய யாத்திரை

பதரிகாசிரமத்திலிருந்து கைலாசத்திற்குச் செல்வதற்கு இருநூற்றெண்பத்தைந்து மைல்கள் நடந்தே செல்ல வேண்டும். இமயமலைத் தொடரிலுள்ள கைலாசம் என வழங்கப்படும் மலையானது மேற்குத் திபேத்திலுள்ளது. அதையடைய, அல்மோராவிலிருந்து, அஸ்காட், தார்சூலா, கேலா, கர்பயவ், லிபுலெக் கணவாய் (17,890 அடி) வழியாகத் தக்லகாட் என்ற பகுதியை அடைய வேண்டும். பின்னர் அங்கிருந்து திபேத்துக்கு இரு மலைவழிக் கணவாய்கள் உள்ளன. அவை முறையே நிதிக்கணவாய் (16,628 அடி) மன கணவாய் (18,402 அடி உயரம்) என்பனவாகும். இந்த இரு வழிகளில் எந்த வழியும் ஒவ்வொரு ஆண்டிலும்

எட்டு மாதங்கள்வரை பனிக்கட்டிகளால் அடைபட்டிருக்கும். செல்ல வேண்டுமானால் கடும் வெய்யிற் காலத்தில்தான் செல்ல வேண்டும். செல்ல வேண்டிய பாதையோ நடைபாதை. அந்த நடைபாதையில் கரடுமுரடான கருங்கற் பாறைகளும், பனிக்கட்டி கரைசலால் உடைக்கப்பட்ட சருக்குப் பாதைகளும் நிறைந்திருக்கும். உயர்ந்த இடங்களிலிருந்து பனிக்கட்டிகள் உருகி எந்த நேரத்திலும் விழுந்து பாதையை அடைத்துவிடும். மேற்குத் திபேத்திய வர்த்தகர்களுக்குத்தான் அந்தக் கணவாய் மார்க்கம் தெரியும். அத்தகைய மலை வழிகளில் ஒன்றின் வழியாக ஆதிசங்கரர், கைலாயத்தை, (22,028 அடி உயரம்) மனித சக்திக்கும் அப்பாற்பட்டதொரு சக்தியின் துணையுடன் அடைந்தார். அங்கு மானசரோவர் என்ற இயற்கைத் தடாகம் பனிச் சிகரங்களைக் கொண்ட மலைகளின் நடுவே, ஐம்பது மைல் வட்டத்தில் அமைந்துள்ளது.

தமிழகத்துப் புராணங்களில், கைலாயத்தையடைய, காரைக்காலம்மையார், பேயுருவம் பெற்றுத் தலைகீழாகச்சென்றதாகவும், சேரமான் பெருமான், வெண்புரவி மீது ஆகாய மார்க்கமாகச் சென்றதாகவும், ஔவையாரைப் பிள்ளையாரே, தமது துதிக்கையால் தூக்கிக் கொண்டு கைலாயத்தில் விட்டதாகவும் கூறப்படுகின்றன. பொதுவாக இறந்தவர்கள் திரும்பமாட்டார்கள் என்றகருத்தில் கைலாய பதவியடைந்ததாகக் கூறுவதுநமது மரபாக உள்ளது. ஏனெனில் கைலாயம் செல்வது என்பது ஏராளமான ஆபத்துக்களைக் கடந்து செல்வதையே குறிக்கும். அத்தகைய ஆபத்துக்கள் எதுவுமே இன்றிப் பரமனருளால் ஆதிசங்கரர், கைலாயத்தை அடைந்தார். அங்கு அவருக்குச் சிவபெருமான் காட்சியளித்து ஐந்து ஸ்படிக லிங்கங்களைக் கொடுத்து, அருள் செய்து, உலக நன்மையின் பொருட்டு, அந்த லிங்கங்களை முக்காலமும் பூஜித்து, வேதங்களைப் பரவச் செய்யும்படி அருள் செய்தார். மேலும் பராசக்தியைத் தாமே புகழ்ந்து பாடிய 'சௌந்தரியலஹரி என்ற நூலையும் அவரிடம் ஒப்படைத்ததாகச் சில சங்கர விஜய நூல்கள் கூறுகின்றன. சதாசிவ பிரமேந்தரரின் '**குருரத்தின மாலிகா**' என்ற வடமொழி நூலில், அவற்றை

முக்கியமான ஸ்தலங்களில் ஸ்தாபித்துப் பூஜிக்குமாறு சிவபெருமான் அருளியதாக ஒரு பாடல் கூறுகின்றது. சங்கரர் அதன் பிறகு, கைலாயத்திலிருந்து, நேபாளத்தி லுள்ள நீலகண்ட க்ஷேத்திரம் நோக்கி நடந்தார்.

கைலாயத்திலிருந்து நிதிக்கணவாய் வழியாக, (16,628 அடி உயரம்) தூலி நதியின் கரையோரமாக நடந்து, அந்த நதி அலகநந்தா நதியுடன் கலக்கும் சங்கமப் பகுதியை நோக்கித் திரும்பினார். அப்படி வரும் பொழுது, வழியிலே துவாரபாலகன் ஒருவன், அவர் கைகளில் இருந்தவை அவருக்கு எப்படிக் கிடைத்தன என்று கேட்டான். தியானத்திலிருந்த சங்கரர் அவனுக் குப் பதில் சொல்லவில்லை. உடனே அவன் அவர்மீது பாய்ந்து, அவரிடமிருந்தவற்றைக் கைப்பற்றினான். அதில் நூறு பாடல்களைக் கொண்ட சௌந்தரிய லஹரியின் ஐம்பத்தொன்பது பாடல்கள் அவன் கைவசம் சிக்கின. அவற்றைப் படிக்கத் தொடங்கிய வுடன் அதன் மொழி, நடை அழகில் லயித்துத் தன்னை யேமறந்து விட்டான். சங்கரரைக் கவனிக்கவில்லை. எஞ்சியிருந்த நாற்பத்தொரு பாடல்களைக் கொண்ட சௌந்தரிய லஹரியுடனும் பஞ்ச லிங்கங்களுடனும் சங்கரர் நடந்தார். புனித நூல் குறைபட்டு விட்டதே என்று சங்கரர் வழி நெடுக வருந்திக் கொண்டு நடந்தார். "நீயே அதைப் பூர்த்தி செய்வாயாக!" என்று உள் ஒளி கூறியது.

சங்கரர் அங்கிருந்து நடந்தே நீலகண்ட க்ஷேத் திரத்தை அடைந்து, அங்கு ஐந்து முகங் கொண்ட பசுபதிநாதரைத் தரிசித்தார். அங்கு, கைலாயத்திலி ருந்து கொண்டு வந்த ஐந்து ஸ்படிக லிங்கங்களில் வரலிங்கத்தையும், மகா திரிபுரசுந்தரியின் விக்ரகம் ஒன் றையும் பிரதிஷ்டை செய்தார்.

இன்றும் அந்த நீலகண்ட க்ஷேத்திரத்தில், காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தில் செய்யப்படும் பூஜை முறை களைப் போலவே, பூஜைகள் நடைபெற்று வருகின் றன.

அதன் பிறகு சங்கரர் கேதாரத்தில் சில காலம் தங்கியிருந்து கேதாரீஸ்வரரை வழிபட்டு வந்தார். கேதார க்ஷேத்திரத்தில், முக்திலிங்கம் என்ற மற்ருெரு ஸ்படிக லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார். அவர் பிரதிஷ்டை செய்த அந்த இரண்டு ஸ்படிக லிங்கப் பிரதிஷ்டைகளைப் பற்றி மார்க்கண்டேய சம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது.

பிறகு திருக்கேதாரத்திலிருந்து, சங்கரர் கங்கை நதிப் பள்ளத்தாக்கை அடைந்து, அங்குள்ள 'பரலி' என்ற ஸ்தலத்தில் வைத்திய நாதரையும் வழிபட்டார். அமர்தா என்ற ஊரிலுள்ள நாகநாதரையும் வழிபட்டு விட்டு, காசியை அடைந்து விஸ்வநாதரைத் துதித்தார். அங்கு காசியஷ்டகம் என்ற நூலையும், அன்ன பூர்ணஷ்டகம் என்ற நூலையும், இயற்றியதாகக் கூறப்படுகிறது.

அதன் பிறகு, ஆதிசங்கரர், புரிஜகந்நாதத்திற்குச் சென்ருர். அங்குச் சில காலம் தங்கி இருந்து, கோவர்த்தன மடத்தை ஸ்தாபித்து, பத்மபாதரை அந்த மடத்திற்கு அதிபதியாக்கிஞர். பின்னர், ஜகந்நாதத்தில் இருந்து, சங்கரர் சிருங்ககிரியை மீண்டும் அடைந்தார். அங்கு, கைலாயத்திலிருந்து, தாம் கொண்டு வந்த லிங்கங்களில் போகசந்திர மௌலீஸ்வர லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார். அதன் பிறகு, புறப்பட்டு, சிதம்பரம் வந்தடைந்தார். அங்கு தில்லை நடராசப் பெருமானின் திருக்கோயிலில் மோக்ஷஸ்படிக லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, அங்குள்ள தீர்த்தங்களைக் கொண்டு, பூஜைகள் செய்ய ஏற்பாடு செய்தார்.

அதன் பிறகு, சிதம்பரத்திலிருந்து திருச்சி மலைக் கோயிலை அடைந்து, அங்குக் கோயில் கொண்டுள்ள சுகந்தி குந்தளாம்பிகையைத் துதித்து வழிபட்டு, கைலாயத்திலிருந்து கொண்டு வந்த சௌந்தரிலயஹரி சுலோகங்களைக் கல்வெட்டுகளில் பதிக்கச் செய்தார். அங்குள்ள தேவியின் திருக்கோயிலும் ஸ்ரீசக்கர வடிவில் அமைக்கப்பட்டது. மீண்டும் ஸ்ரீரங்கத்திற்கும், திருவானைக்காவலுக்கும் சென்றுவிட்டு, ராமேஸ்

வரம் சென்று, கங்கை நீரால், அங்குள்ள இறைவனுக்கு அபிஷேகம் செய்து வணங்கிவிட்டு, தொண்டை மண்டலத்திலுள்ள பல ஸ்தலங்களுக்கும் சென்ருர். திருவொற்றியூரில் திருபுரசுந்தரியின் திருமுன்பு ஸ்ரீசக்கரத்தைப் பிரதிஷ்டை செய்தார். அதன் பின்னர் ஸ்ரீகாஞ்சிபுரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

## ஸ்ரீ காஞ்சியில் சங்கரர்

ஆதிசங்கரர் காஞ்சிபுரம் செல்லும்போது பூவிருந்த வல்லி, மாங்காடு முதலிய இடங்களில் அவரைப் பொது மக்கள் ஏராளமாக எதிர்சென்று வரவேற்றனர். அவர் காஞ்சிபுரத்தை அடைந்து, அங்குச் சர்வதீர்த்தக் கரையிலுள்ள விஸ்வேசுவரர் கோயிலை அடைந்தார்.

காஞ்சிபுரம், பாரத நாட்டிலுள்ள ஏழு முக்தி ஸ்த லங்களில் ஒன்ருகும். பதினெட்டு சக்தி பீடங்களில் காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடமும் ஒன்று. காஞ்சிபுரத்தில் சர்வ தீர்த்தக் கரையிலுள்ள முக்தி மண்டபத்தில் சங் கரர் சில நாட்கள் தியானத்தில் இருந்தார். அதன் பிறகு, விஷ்ணுகாஞ்சிபுரத்திற்குச் சென்று அங்கு வரத ராஜர் கோயிலின் மேற்குப் புறத்தில் ஒரு சிறிய மடத் தில் தங்கியிருந்தார். அந்தச் சமயத்தில் மன்னன் ராஜ சேனன், ஆசாரியரை எதிர் கொண்டழைத்தான். அவர் நகரத்திற்குள் பிரவேசிப்பதற்கு முன்பாக, காஞ்சிபுரத்தின் நகர அமைப்பை ஸ்ரீசக்கர வடிவில் அமைத்துச் செப்பனிடச் செய்தார். அந்தச் சக்கரத்தின் மையப் பகுதியில் காமாட்சியம்மன் ஆலயத்தை அமைக்கச் செய்தார்.

விஷ்ணுகாஞ்சிக்கும் சிவகாஞ்சிக்கும் நடுவில் காமாட்சியம்மன் கோயில் அமைக்கப்பட்டது. உத்சவ காலங்களில் வரதராஜரும், ஏகாம்பர நாதரும் காமாட்சி யம்மனை வலம் வருமாறு அந்தக் கோயில் அமைந்தது. பின்னர், சங்கரர் காமாட்சியம்மன் கோயிலுக்கு வந் தார். தவதீட்சண்யத்தில் இருந்த ஸ்ரீகாமாட்சியின் திருவுருவின் முன்பு ஸ்ரீசக்கரத்தைப் பிரதிஷ்டை செய்

தார். ஒருகையில் பாசமும், ஒரு கையில் சங்கும், ஒரு கையில் கரும்பு வில்லும், மற்ருெரு கையில் மலரும் ஏந்திய அந்த அழகுத் திருவுருவம் அமைதியுடனும் கருணை விழிப் பார்வையுடனும் தோற்ற மளிக்கலாயிற்று. அதன் பிறகு ஏகாம்பர நாதர் கோயிலுக்குச் சென்ருர். தமது அத்வைத சித்தாந்தத்தைப் பாரதமெங்கும் பரப்புவதற்காக, காஞ்சிபுரத்தில் சர்வக்ஞ பீடம் ஒன்றை அமைத்தார். அந்தக் காலத்தில் பௌத்தர்களும், கபாலிகர்களும் காஞ்சிபுரத்தில் குழுமியிருந்தனர். அவர்கள் யாவரும் சங்கரரிடம் வாதஞ் செய்தனர். நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த, தாமிரவருணிக்கரையிலிருந்து வந்த ஏழு வயது அந்தணச் சிறுவன் ஒருவன், ஆதிசங்கரருடன் அயராதுவாதிட்டான். இறுதியில் ஆசாரியர் வென்று, அந்தச் சிறுவனையே துறவியாக்கி, சர்வக்ஞாத்மன் என்ற பெயர் சூட்டினுர். எல்லாம் அறிந்தவர்களைத் தமது ஞானத்தாலும், ஏதுமறியாதவரைத் தமது அன்பினுலும் வென்ற, ஆதிசங்கரர், சுரேசுரரைக் கொண்டு, பாரதத்தின் முக்கிய பகுதிகளில் தாம் அமைத்த அத்வைத மடங்களை நிர்வாகஞ் செய்ய ஏற்பாடு செய்தார்.

காஞ்சியிலே ஸ்ரீகாமகோடி பீடத்தை ஸ்தாபித்து நான்கு திசைகளிலும் உள்ளபீடங்களுக்கு மூலஸ்தானமான அந்தப் பீடத்தில், தாமே ஆரோகணித்ததாகக் கூறப்படுகிறது.

'வேதாந்தமாவது' வேட்கை ஒழித்த இடம் 'என்று திருமூலர் திருமந்திரத்தில் கூறி உள்ளது போல, ஆசைகள் யாவும் முடியும் இடமாக ஸ்ரீகாமகோடி பீடத்தை ஸ்தாபித்தார். எழுத்துக்களின் பிறப்பிடமான காமாட்சியன்னையை, வாக்குத் தேவியாகப் போற்றிக் காஞ்சி மடத்திற்கு ஸ்ரீசாரதா மடம் என்று பெயர் சூட்டினுர். சரஸ்வதிதேவி அவரிடம் வாதம் புரிந்து தோல்வியுற்று, சரஸ்வதி என்ற விருதை அவருக்கு வழங்கினுள்.

அதன் பிறகு ஹிந்து மதத்தின் கிளை மதங்களான கணுபத்யம், கௌமாரம், சைவம், வைஷ்ணவம், ஸௌரம், சாக்தம், என்ற ஆறு சமய நீதிகளைப் பரப்பு

வதற்கான கடமைகளை, ஆதிசங்கரரின் சீடர்களில் அறுவர் தமது சொந்தப் பொறுப்பில் ஏற்றனர். கிரிஜா குமாரர் என்பவர், விநாயகர் வழிபாட்டு முறையையும் வடுக நாதர் என்பவர் கௌமாரம் என்ற திருமுருகன் வழி பாட்டு முறையையும் ஏற்றனர். அவர்கள் பிரமச்சாரி கள். பரமத காலானவர் சைவத்தையும், லஷ்மணர், வைணவத் தையும் பரப்புவதற்கு முற்பட்டனர். ஸௌரம் என்ற சூரிய வழிபாட்டு முறையைத் திவாகரரும், சாக்தத்தை உஜ்ஜெயி னியைச் சேர்ந்த திரிபுரா குமாரரும் பரப்பச் சென்றனர். இன்றும் ஸ்ரீகாமகோடி திருக் கோயிலுள்ள ஆசாரிய ரின் திருவுருவின் அடியில், அந்த அறுவரது உருவை யும் காணலாம். ஏராளமான நூல்களை இயற்றி, எண்ணற்ற வாதங்கள் புரிந்த, ஆதி சங்கரருக்கு அப் போது முப்பத்திரண்டாவது ஆண்டு நெருங்கியது.

ரத்தாக்ஷி ஆண்டு வைகாசி மாதம் சுக்கில பட்ச ஏகாதசி திதியன்று, காஞ்சி சாரதா மடத்தில் மாபெரும் பொதுக் கூட்டத்தில் தமது அத்வைத சித்தாந்தத் தைத் தெளிவாகக் கூறிக் கொண்டிருந்தார்—சங்கரர். அதற்குப் பிறகு பொதுமக்கள் பின்தொடரக் காமாட்சி அன்னையின் சந்நிதியை அடைந்தார். அன்னையின் முன்பு திரிபுரசுந்தரி வேதபாதஸ்தவம் என்ற அற்புதத் துதிப் பாடல்களைப் பாடினார். அந்த ஸ்லோகங்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் வேத வாக்கியம் ஒவ் வொன்றும் அமைந்தது. பின்னர் அந்த பாடல்களைப் பாடிக் கொண்டே ஒலி வடிவுடன் தோன்றிய ஆதி சங்கரர், ஒளி வடிவமான தேகத்துடன் காமாட்சியின் திருவடியில், சிதாகாசத்தில் கலந்தார். கற்பூரம் எரிந்தபின் அதன் சாம்பலும் காணக் கிடைக்கா தல்லவா? அதுபோலத் தமது ஸ்தூல உடலையும் சூக்ஷ்ம உடலையும், காரண உடலையும் கரைத்து, ஒளிமயமாக, அருட்பெருஞ் சோதியான அன்னையின் திருவடியில் ஐக்கியமானார். அவர் நிறுவிய ஸ்ரீகாஞ்சி ஸ்ரீகாமகோடி பீடம், பாரதத்தின் ஒப்புயர்வற்ற ஞான பீடமாக, யோக பீடமாக இன்றும் விளங்குகிறது.

## துவாதச லிங்க க்ஷேத்திரங்கள்

பாரத நாட்டு வரிப்படத்தில் குறிப்பிட்ட கீழ்க் காணும் இடங்களில், பன்னிரண்டு முக்கியமான சிவஸ் தலங்கள் அமைந்துள்ளன. ஆதிசங்கரர் ஆங்காங்கு சென்றும், வரலாறைக் குறித்தும், துவாதசலிங்கஸ்தோத் திரம் என்ற துதிப் பாடல்களை வடமொழியில் பாடி யுள்ளார். (இவற்றின் இருப்பிடமும் செல்லும் வழியும் கீழே கூறப்பட்டுள்ளன.)

1. சோமநாதபுரம்...சௌராஷ்டிரம் (வழி) பிரபாஸம் பட்டிரயில் நிலையம்.

2. மஹாகாளேஸ்வரம்...உஜ்ஜெயனி ரயில் நிலையம் (மத்திய மேற்கு வழி)

3. மல்லிகார்ஜுனம்...ஸ்ரீசைலம்—பஸ் மார்க்கம். வழி மர்காபுரம் ரயில் நிலையம்; கர்நூல்ஜில்லா : ஆந்திரம்.

4. அமலேஸ்வரம்...ஓங்காரா மாந்திதா மார்தாக் ரயில் நிலையத்திலிருந்து 7 மைல்கள்.

5. வைத்தியநாதம்...பாலி வைத்தியநாத் ரயில் நிலையம். நிலையத்திலிருந்து ஒரு மைல்.

6. பீமகங்கா...புனுவிலிருந்து ஸின்னூர். ஸின்னூரி லிருந்து 90 மைல்.

7. ராமேஸ்வரம்...ராமேஸ்வரம் ரயில் நிலையம்; ராமநாத புரம் ஜில்லா.

8. நாகேசம்...தாருகாவனம்—ஔனத்+சண்டி ரயில் நிலையத்திலிருந்து 14 மைல்கள்.

9. விஸ்வசுவரம்...காசி (வார்ணசி) பனாரஸ் ரயில் நிலையம்.

10. திரியம்பகம்...கௌதமி தாதம்—நாசிக் சாலை ரயில் நிலையத்திலிருந்து 23 மைல்கள்.

11. கேதாரீஸ்வரம்...ஹிமயமலை. ஹ்ருஷி கேசத்தி லிருந்து 146 மைல்கள்.

12. கஸ்ருனேசம்—எல்லோரா மலைக் குகைகளிலிருந்து ஒரு மைல். ஔரங்காபாத்திலிருந்து 18 மைல்கள்.

மாதவீய சங்கர விஜயம் என்ற வடமொழி நூலில் காணப்படும் சங்கரர் விஜயம் செய்த ஊர்களின் வரிசை.

1. காலடி
2. இந்துபாவதீரம் (நர்மதைக்கரை)
3. சிவபுரி (காசி)
4. பிரயாகை
5. மாஹிஷ்மதி
6. சிருங்ககிரி
7. கோகர்ணம் (மேலைக்கரை)
8. மூகாம்பி
9 ஸ்ரீவலி
10. சிருங்ககிரி (மீண்டும் வந்தது)
11. கேரளம்
12. ராமேஸ்வரம்
13. காஞ்சி
14. வேங்கடாசலம் (திருப்பதி)
15. கர்நாடகம்
16. விதர்ப்பம்
17. துவாரகை
18. காம ரூபம்
19. விதேஹம்
20. அங்க தேசம்
21. வங்கதேசம்
22. கௌட தேசம்
23. காஷ்மீரம்

24. பத்ரிநாத்
25. கேதார்நாத்.

ஆனந்தகிரி சங்கர விஜயத்தில் காணப்படும் வரிசை.

1. காலடி
2. அனந்த சயனம் (திருவனந்தபுரம்)
3. சுப்ர மண்யம் (உடுப்பி அருகில்)
4. கணபத்ய கிராமம்
5. பவானி புரம்
6. உஜ்ஜெயினி
7. சத்யதாரணம்
8. வருண புரி
9. மாதவரத புரம்
10. இந்திரப் பிரஸ்தம்
11. யமபிரஸ்த புரம்
12. பிரயாகை
13. காசி
14. கேதாரம்
15. குரு க்ஷேத்திரம்
16. பத்ரிநாத்
17. அயோத்யா
18. கயா
19. கங்கா—சாகரம்
20. ஜகந்நாதம்
21. ஸ்ரீசைலம்
22. துண்டயக்கிய புரி
23. வித்யாலயம்
24. சிருங்ககிரி

25. அகோடிலம்
26. ஶ்ரீரங்கம்
27. மத்யார்ஜுனம்
28. வேங்கடகிரி
29. காஞ்சி புரம்.

கேரளீய சங்கர விஜயம் கூறும் ஆதி சங்கரர் திக் விஜயத்தில் சென்ற ஊர்களின் வரிசை.

1. காலடி
2. வாரணாசி (காசி)
3. காலடி (தாய் கருமம் செய்யத் திரும்பியது)
4. பிரயாகை
5. மகதம் (விஸ்வரூபரைச் சந்தித்தல்)
6. கோகர்ணம் (மேற்குக் கரை)
7. ஹரித்வார்
8. காள ஹஸ்தி
9. காஞ்சி
10. புண்டரீகபுரம் (விதாம்பரம்)
11. காவேரி தீரம்
12. ஶ்ரீரங்கம்
13. ராமேஸ்வரம்
14. தனுஷ்கோடி
15. காஞ்சிபுரம் (மீண்டும் சென்றது)
16. விருஷாசலம் (திருச்சூர்—கேரளம்)

வியாஸசலீய சங்கர விஜயத்தில் சொல்லப்பட்ட ஊர்கள்.

1. காலடி
2. தூர தேசம் (பதரி)
3. காலடி (தாய்கருமம் செய்தல்)

4. கங்கா தீரம் (காசி)
5. பிரயாகை
6. ஸ்ரீவலி (மேற்குக் கரை)
7. காஷ்மீர்

சித்விலாஸீய சங்கர விஜயத்தில் கூறப்படுபவை:

1. காலடி
2. பதரி
3. காலடி (தாய் கருமம் செய்தல்)
4. பிரயாகை
5. கயை
6. வாரணசி (காசி)
7. ருத்ரபுரி (குமரி பட்டர் சந்திப்பு)
8. காஷ்மீரம்
9. விபாண்டக வனம் (சிருங்ககிரி)
10. காஞ்சி
11. வேங்கடாசலம்
12. காள ஹஸ்தி
13. ஸ்ரீரங்கம்
14. சிதம்பரம்
15. மத்யார்ஜுனம்
16. ராமேஸ்வரம்
17. வக்ர துண்ட புரம்
18. மதுரை
19. அனந்தசயனம் (திருவனந்தபுரம்)
20. சுப்ரமணியம் (உடுப்பி அருகில்)
21. கோகர்ணம் (மேலைக் கரை)
22. ஸ்ரீசைலம்

23. ஜோகு சும்பம்
24. ஜ்வாலாமுகி
25. பண்டரி புரம்
26. புரிஜகந்நாதம்
27. உஜ்ஜெயினி
28. துவாரகை
29. பத்ரிநாத்

## ஆதிசங்கரர் ஸ்தாபித்த அத்வைத மடங்கள்

ஆதிசங்கரர் தமது வாழ்க்கையில் செய்த அரும் பெருஞ் செயல்களை மூன்று கோணங்களில் ஆராய லாம். அவர் காலத்தில் இருந்த சார்வாக, பௌத்த, சமண, தார்க்கீக, சாங்கிய தத்துவக்கொள்கைகளை முறி யடித்து, காலமுகர்கள், காபாலிகர்கள், சாக்தர்கள் ஆகி யோரின் மத சம்பந்தமான கொடிய மூர்க்கத்தனமான பழக்கங்களையும் வழிபாடுகளையும் செம்மைப்படுத்தி யதையே அவர் தமது வாழ்நாளில் செய்த முதலாவது முக்கிய செயலாகக் கருதவேண்டும். அவற்றை வேரோடு கெல்லிய பிறகு, அவரது அடுத்த அரும் பெருஞ் செயல், தூய்மையான வேத நெறியை ஸ்தா பித்ததாகும். அந்தச் செயலுக்காகவே மிகப் புலமை செறிந்த இலக்கியங்களை அவர் இயற்றினார். அவை உபநிஷதங்களின் பாஷ்யங்கள், பிரம்ம சூத்திர பாஷ் யம், பகவத்கீதா பாஷ்யம் முதலியவையாகும். அவற்றின் மூலம், மிகச் சிறந்த தத்துவ அடிப்படை யில் தமது அத்வைத சித்தாந்தத்தை நிலைநிறுத்தினார்.

அடுத்து, நாட்டு மக்கள் வழிபட்டு வந்த கணபதி, சூரியன், விஷ்ணு, சிவன், சக்தி, முருகன் வழிபாடு களில் வேதத் தொடர்புடைய வழிபாடு முறைகளை வகுத்துக் கொடுத்து, அருவருக்கத்தக்க, வழிபாட்டு முறைகளை அகற்றினார். இதுபோல ஹிந்துமத சீர் திருத்தம் செய்ததோடும், பாஷ்யங்களை இயற்றிய தோடும் அவர் லட்சியம் முற்றுப் பெற்றுவிடவில்லை. அவரது சிந்தனை நுட்பம், அவரது ஒழுக்கம் ஆகிய வற்றால், மாற்றுமதத் தலைவர்களின் கொள்கைகளைத்

தமது கொள்கை வன்மையால், நசிக்கச் செய்து, அவர்கள் தமது காலத்தில் தலைதூக்காமற் செய்தார். இத்தகைய செயலுக்கு அவருக்கு எந்த மன்னர் தயவும், எந்த ஆட்சியின் தயவும் பயன்படவில்லை. எனவே, தாம் அரும்பாடுபட்டு ஸ்தாபிக்க விரும்பிய அத்வைத தத்துவத்தைக் காலத்தால் அழிவு பெருமற் செய்வதற்காக, வெற்றிகொண்ட மன்னன், வென்ற பகுதிகளில் நிறுவனங்களை அமைப்பது போல, சங்கரர், பாரத நாட்டின் முக்கிய பகுதிகளில் எல்லாம் அத்வைத மடங்களை ஸ்தாபித்தார். அந்த மடங்கள் மூலமாக, அத்வைதம், வேதாந்தம் முதலிய தத்துவப் பிரசாரங்களைச் செய்வதற்கும், கண்டிப்பான வைதீக முறைகளை, கலாச்சாரப் பண்பாடுகளோடு தெய்வ வழிபாட்டு முறைகளைச் செய்வதற்கும் ஏற்பாடு செய்தார்.

அந்த மடங்களை ஸ்தாபிக்கும்போது, தாம் பிற மதத்தினரை வாதத்தால் வென்ற இடங்களில், வேத வாக்கியக் கோட்பாடுடைய வைதீக சமயத்தினரை ஒன்றுபடுத்தத் தக்க மடங்களை ஸ்தாபிக்க வேண்டியிருந்தது. எனவே, இமயத்திலுள்ள பதரிகாசிரமத்தில் ஜோதிர் மடத்தையும், துவாரகையில் காளிகா பீடத்தையும், ஜகந்நாதபுரத்தில் விமலா பீடத்தையும், சிருங்ககிரியில் சாரதா பீடத்தையும் அமைத்தார். இவை தவிர, இன்று அவ்வளவு பிரபலமாயிராத சில மடங்களையும் அவரே ஸ்தாபித்தார். காசியிலுள்ள சுமேருமடம், பாதுகைமடம், மலையாள நாட்டிலுள்ள வடக்கைமடம், தெற்கைமடம், நடுவிலைமடம், திருக்கழிக்காட்டு மடம், பிரம்மேஸ்வர மடம் முதலிய மடங்களும், மேலும் சில மடங்களும் அவர் ஸ்தாபித்தவையேயாகும். அத்தகைய மடங்கள் ஒவ்வொன்றைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் தெளிவாகக் கிடைக்கவில்லை. அந்த மடங்களில் தம்முடன் இருந்த சீடர்களையே மடாதிபதிகளாக நியமித்தார்—ஆதிசங்கரர்.

ஆனந்தகிரி என்பவர் இயற்றிய சங்கர விஜயத்தில் ஆதிசங்கரரின் சீடர்களான பத்ம பாதர் (சனந்தனர்)

ஹஸ்தாமலகர், சமிதபாணி, சித்விலாசர், ஞானகாண்டர், விஷ்ணு குப்தர், கீர்த்தி, பானுமரீசி, கிருஷ்ண தரிசனர், புத்தி விருத்தி, விரிஞ்சிபாதர், சுத்தாஞந்தேந்திரகிரி ஆகியோரின் பெயர்கள் காணப்படுகின்றன. இவர்களைத் தவிர உதங்கர், பிரித்வீதரர் ஆகியோரும் ஆதிசங்கரரின் முக்கிய சீடர்களாக இருந்தனர்.

வரலாற்று ரீதியில் சங்கரர் முதலாவதாக ஸ்தாபித்த மடம் துவாரகை மடமேயாகும். அந்த மடமானது கி. மு. 491ஆவது சாதாரண ஆண்டு மக சுக்ல, சப்தமியில் ஸ்தாபிக்கப்பட்டது. அதற்கு ஹஸ்தாமலகர் அதிபதியாக நியமிக்கப்பட்டார். பாரத நாட்டின் மேற்குத் திசையில் அமைக்கப்பட்ட அந்த மடத்தின் பெயர் சாரதாபீடம் என்பதாகும். அது கிதவார சம்பிரதாயம் உடையது. (கிதவாரம் என்பது பூச்சிகளுக்கும் தீங்கு செய்யாதிருக்கும் அஹிம்சைக் கொள்கை) அந்த மடத்துச் சந்நியாசிகளுக்கு தீர்த்தர்கள் என்றும் ஆஸ்ரமிகள் என்றும் பட்டம் உண்டு. அதன் க்ஷேத்திரம் துவாரகை. தலைமைத் தெய்வம் சித்தேஸ்வரர், சக்தி, பத்ரகாளி, தீர்த்தம் கோமதி. இந்த மடத்து ஆசாரியர்கள் ஸ்வரூப பிரமச்சாரிகள் என வழங்கப்படுகின்றனர். இந்த மடம் சாம வேதி களுக்காக, தத்துவம் அஸி என்ற மகாவாக்கியத் தத்துவ அடிப்படையில் அமைக்கப்பட்டது.

இந்தத் துவாரகா பீடத்தின் முதல் ஆசாரியர் யார் என்பதில் முரண்பாடான கருத்துக்கள் உள்ளன. சிலர் ஹஸ்தாமலகர் என்றும் சிலர் விஸ்வரூபர் என்ற சுரேசுரர் என்றும், பிரம்மஸ்வரூபர் என்று சிலரும் கூறுகின்றனர். பத்மபாதரும் துவாரகா பீடத்தின் முதல் ஆசாரியராகக் கருதப்படுகிறுர். அந்த மடத்தின் ஆரம்பகால வரலாறுகள் குழப்பமாக அமைந்துள்ளன. குரு பரம்பரைக்கேற்ப ஆராய்ந்தால், துவாரகை மடத்தில் கி. பி. 1704 ஆண்டு வரை அறுபத்து ஐந்து ஆசாரியர்கள் வழிவழியாகப் பீடாதிபதியாக இருக்கின்றனர். இப்போதும் அக்குரு பரம்பரை தொடர்ந்து வந்துள்ளது.

அடுத்து, ஆதிசங்கரர் இமயமலைத் தொடரில் ஜோதிர் மடத்தை ஸ்தாபித்தார். அந்த மடம் கி. மு.

486ல் ராக்ஷச ஆண்டு புஷ்ய சுத்த பூர்ணிமையில் ஸ்தாபிக்கப்பட்டது. அதன் அதிபதியாக தோடகாசாரியர் நியமிக்கப்பட்டார்.

பாரத நாட்டின் வடக்குத் திசையில் ஸ்தாபிக்கப் பட்ட இந்த மடம் ஆனந்தவார சம்பிரதாயத்தைக் கொண்டது. இதன் ஆசிரியர்கள் கிரி, பர்வத, சாகர என்ற பட்டத்தில் அழைக்கப் பெறுவர். இந்த மடத் தின் க்ஷேத்திரம், பதரிகாசிரமம். தலைமைத் தெய்வம் பதரி நாராயணர், சக்தி-பூர்ணகிரி, தீர்த்தம்—அலகநதம். இதன் ஆசாரியர்கள் ஆனந்த பிரம்மசாரியராவார். இந்த மடம் அதர்வண வேத மஹா—வாக்கியமான "அயம் ஆத்மா பிரம்ம" என்ற தத்துவ அடிப்படையில் அமைக் கப்பட்டுள்ளது. இந்த மடம் பாரதத்தின் வடக்குக் கோடியில் இருப்பதால், இந்த மடத்தைப் பற்றிய வர லாற்றுக் குறிப்புக்கள் நமக்குக் கிடைக்க வழியில்லா மல் இருக்கின்றன.

மூன்றாவதாக ஆதிசங்கரரால், கி. மு. 485ஆவது நள வருடத்து வைசாக சுக்ல நவமியில் கோவர்த்தனமடம் ஸ்தாபிக்கப்பட்டது. பத்ம பாதாசாரியர் இந்த மடத்தின் தலைவராக நியமிக்கப்பட்டார். இது கிழக்குத் திசையில் அமைக்கப்பட்டதாகும். இது போகவர சம்பிரதாய முடையது. இதன் ஆசாரியர்கள் மத, வன, ஆரண்ய என்ற பட்டப் பெயர் உடையோராவர்.

இதன் தலைமைத்தலம் புருஷோத்தம க்ஷேத்திரம்; தலைமைத் தெய்வம் ஜகந்நாதர். சக்தி-விமலை; தீர்த்தம்—மஹோததி. இதன் ஆசாரியர்கள் பிரகாச பிரம்மச்சாரிகளாக வழங்கப்படுகின்றனர். இந்த மடம் ரிக் வேதிகளுக் காக, "பிரக்ஞானம் பிரம்மா" என்ற மஹாவாக்கியத் தத்துவ அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது.

இந்தக் கோவர்த்தன மடம் புகழ் பெற்று நிலைத்து வருகின்றது. இதனைச் சார்ந்த வேறு சில மடங்களும் உள்ளன. சங்கரானந்த மடம், சிவதீர்த்த மடம், கோபால தீர்த்த மடம் ஆகியவை குறிப்பிடத் தக்கவையாகும்.

இந்த மடத்துக் குரு பரம்பரை இன்றுள்ளவருட் பட 144 ஆசாரியர்கள், வழிவழியாகப் பீடாதிபதிகளாக

இருந்திருக்கின்றனர். மேலும், இந்த மடத்தின் அதி பதிகள் சந்நியாசம் ஏற்பதற்கு முன், இல்லறத்தோராக இருந்தவர்கள். எனவே, இவர்கள் மூப்புப் பருவத்தில் பீடாதிபதிகளாகியிருக்க வேண்டும்.

அடுத்து, நான்காவதாக, இன்று மிகவும் பிரபல மடைந்துள்ள சிருங்ககிரி மடத்தை ஆதிசங்கரர் ஸ்தாபித் தார். காஞ்சி, துவாரகை, புரிஜகந்நாதம் முதலிய மடங்கள், ஆதிசங்கரர் கி.மு. 6லிருந்து கி. மு. 5ஆவது நூற்ருண்டில் வாழ்ந்தார் என்பதை நிச்சயிக்கும் ஆதா ரங்களை உடையன. ஆனுல் சிருங்ககிரி மடமோ, ஆதி சங்கரர் கி. மு. 34 என்று குறிப்பிடும் ஆதாரங்களைக் கொண்டுள்ளன. இதே மடத்தில் கி. பி. 788ஆம் ஆண் டில் சங்கரர் இருந்ததாகக் கூறும் ஆதாரங்கள் இருப்ப தாக சில வரலாற்ருசிரியர்கள் கூறுகின்றனர். இதே மடத்தின் பழமையான ஆதாரங்கள் அவர்கள் பார்வை யிற்படவில்லை போலும்! சிருங்ககிரி மடத்தில் இன் றுள்ள ஆசாரியர் உட்பட அறுபத்தைந்து ஆசாரி யர்கள் பீடாதிபதிகளாக இருந்திருப்பதாகக் கூறப் படுகின்றது. ஆயினும், இன்றுள்ள ஜகத்குரு அபிநவ வித்யாதீர்த்த மஹா சுவாமிகள் உட்பட முப்பத்தைந்து ஆசாரியர்கள் பீடாதிபதிகளாக இருந்திருக்கவேண்டும் என்பது வரலாற்று ஆய்விலே அறியப்படுவதாகும்.

இந்தச் சிருங்ககிரி மடம் மிகவும் புகழ்பெற்ற மடம் மட்டுமல்ல; ஆதிசங்கரரே நெடுநாள் வாழ்ந்து புகழ் பரப்பிய முக்கிய மடமாகவும் தெரிகிறது.

எத்தனையோ அரசர்களும் இளவரசர்களும் இந்த மடத்தை ஆதரித்து வந்துள்ளனர். கத்தோலிக்க கிறிஸ்தவர்களின் ரோமாபுரி வாடிகன் மதகுருமார் களின் பீடத்தினரைப் போலவே, ஒரு சிறு ராஜ்யாதி காரத்துடனும், ஆடம்பரங்களுடனும் இந்தப் பீடம் திகழ்கின்றது.

இந்த ஆசாரியரின் ஊர்வலத்தில் முத்துச் சிவிகை குதிரைகள், ஒட்டகங்கள், பேரானைகள் முதலியன வும், சத்து, சாமரி, வியாஜனங்களும் நிறைந்திருக்கும். அழகுப் பொருள்களின் ஆடம்பரங்கள் அதிகம்.

நாடு முழுதும் இந்த மடத்தின் சீடர்கள் ஏராள மாக உள்ளனர்.

இது தென்னாட்டுக்குரிய மடமாகும். இதைப் போன்றதுதான் ஸ்ரீகாஞ்சி மடமும் என்றாலும், சிருங்க கிரி மடத்தின் பொருளாதார வளமையும் ஆடம்பரங் களும் காஞ்சிக்கு இல்லை என்று கூறப்படுகிறது. இதற்கும் காரணங்கள் உள்ளன.

இது பூரிவார சம்பிரதாயமுடையது. அதுவே இத் தகைய பொருள் செழுமைக்குக் காரணமாகும். இந்த மடத்தைச் சேர்ந்த ஆசாரியர்கள் சரஸ்வதி, பாரதி, புரி என்ற பெயர்களில் வழங்கப்படுகின்றனர். இதற்கு க்ஷேத்திரம் ராமேஸ்வரம்; தலைமைத் தெய்வம் ஆதிவரா ஹம்; சக்தி—காமாக்ஷி. (சாரண) இதன் முதலாவது ஆசாரியர் பிரித்வீதரர்.

இதன் தீர்த்தம், துங்கபத்திரை. இந்தப் பீடாதிபதி கள் சைதன்ய பிரம்மச்சாரிகளாக வழங்கப்படுகின்றனர்.

இந்த மடம், கிருஷ்ணயஜுர்வேதிகளின் மஹா வாக் கியமான "அஹம்பிரம்மாஸ்மி", என்பதன் அடிப்படைத் தத்துவத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

இந்த வியாக்கிய சிம்மாதனத்தைச் சேர்ந்த ஆசா ரியர்கள், இந்த மடத்தைச் சார்ந்த விருபாக்ஷி, புஷ்ப கிரி, குடாலி, சங்கேஸ்வர, ஸ்ரீசைலம், அமானி முதலிய பீடங்களுக்கும் தலைவராகக் கருதப்படுகின்றனர்.

இந்த அத்வைத மடங்களுக்கு மதரீதியான நிலப் பரப்பு எல்லைகளும் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

சிந்து, ஸௌவீரம், ஸௌராஷ்டிரம், மஹாராஷ்டிரம், ஆகிய நிலப்பகுதிகளைச் சேர்ந்த மக்கள் மத்தியில் துவாரகை மடம் செல்வாக்குடையதாகவுள்ளது. அங்கம், கலிங்கம், மகதம், உத்கலம், பார்பாரா ஆகிய இடங்களி லுள்ள மக்களிடையே கோவர்த்தன மடம் புகழ்பெற் றுள்ளது.

ஆந்திரம், தமிழகம், கர்னாடகம், கேரளம் ஆகிய பகுதி களிலுள்ள மக்களிடையே சிருங்ககிரி புகழ்பெற்றுள் ளது. குரு, காஷ்மீரம், காம்போஜம், பாஞ்சாலம் முதலிய

வடநாட்டு மக்களிடையே ஜோதிர் மடம் சமயச் செல்வாக்குடையதாக இருக்கிறது.

எனவே, ஒரு மடத்தைச் சேர்ந்த ஆசாரியர்கள் தம் தலைமை ஸ்தாபனத்தில் நிரந்தரமாகத் தங்கிய வண்ணம் தமது மடத்துக்குத் தொடர்புடைய மக்களிடையே அத்வைதப் பிரசாரம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஒரு மடத்து ஆசாரியர், மற்றொரு மடத்தைச் சார்ந்த பகுதிகளில் பிரவேசம் செய்யக் கூடாது என்பதை ஒரு கட்டுப்பாடாக வைத்துக் கொண்டிருந்தனர். இந்த மடங்கள் யாவுமே ஹிந்து மதத்தின் காவல் நிலையங்களாகத் திகழ்கின்றன.

## ஆதி சங்கரரும் ஸ்ரீ காஞ்சி காம கோடியும்

சென்ற அத்தியாயத்தில் ஆதிசங்கரர் நிறுவிய மடங்களைப் பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தைப் பற்றிய விவரங்கள் வராததை வாசகர்கள் கவனித்திருக்கலாம். ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம், மிகவும் தொன்மையானது. அதற்குரிய வரலாறுகள் தெள்ளத் தெளிவாகவும் மிக்க தொடர்புடையதாகவும் அமைந்துள்ளன.

மிகவும் பழமையான வடமொழி நூலான **'சிவரஹஸ்யம்'** என்ற நூலின் பதினொன்றாவது அத்தியாயத்தின் ஒன்பதாவது அம்சத்தில், ஆதி சங்கரர் காஞ்சிபுரத்தில்தான் விதேஹ முக்தியடைந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

**மார்க்கண்டேய சம்ஹிதை**, காமகோடி பீடத்திற்கு **வித்யாதிராஜ** பீடம் என்ற பெயர் உண்டு என்றும், அது காஞ்சியில் சுரேஸ்வராசாரியரை அதிபதியாகக் கொண்டு நிறுவப் பட்டதாகவும் கூறுகிறது.

**ஸ்ரீமத் பாகவதத்தில்** பலராமர் பற்பல ஸ்தலங்களைத் தரிசித்துத் தீர்த்த யாத்திரை செய்து வரும்போது, காஞ்சிக்கும் விஜயம் செய்ததாகக் கூறப்படுகிறது.

ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடமானது, முக்கியமான சக்தி பீடங்கள் பதினெட்டில் ஒன்ருகும். முக்தி ஸ்தலங்களில் காஞ்சியும் ஒன்று.

வங்க மொழிக் கலைக் களஞ்சிய நூலில், காஞ்சியானது சங்கரரின் மகா பீடஸ்தான மென்றும், சமாதிஸ்தானம் என்றும், காமாக்ஷி கோயிலிலுள்ள, சங்கராச்சாரியரின் முழு அளவு மூர்த்தி வடிவம் உள்ள கோயில், அவரது சமாதி என்றும் கூறப்பட்டுள்ளது.

**'சங்கர விஜய விலாசம்'** என்ற நூலில், சங்கரர், ராஜசேனன் என்ற மன்னனைக் கொண்டு, வரதராஜர் கோயிலையும், ஏகாம்பர நாதர் கோயிலையும், காமாக்ஷியம்மன் கோயிலையும் கட்டச் செய்தார் என்றும், அங்குள்ள சர்வக்ஞ பீடத்தில் ஆரோஹணித்தார் என்றும் கூறப்பட்டுள்ளது.

**நைஷதம்** என்ற நளவெண்பாவின் மூல நூலை இயற்றிய **ஹர்ஷர்** மன்னர், தமது காவியத்தில் காஞ்சி காமகோடி பீடத்திலுள்ள யோக ஸ்படிக லிங்கத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

சித்சுகாசாரியர் என்பவர் இயற்றிய **பிரகத் சங்கர விஜயம்**, சங்கரர் கலைமகளை வென்று சர்வக்ஞ பீடம் ஏறியதாகவும், காஞ்சியில் விதேக முக்தியடைந்ததாகவும் கூறுகிறது.

காஞ்சிபுரத்தைச் சுற்றிலுமுள்ள ஐம்பது மைல் சுற்றளவில், ஆதிசங்கரரின் நினைவுச் சின்னங்கள் காணப்படுகின்றன. இது போன்ற நினைவுச் சின்னங்கள், இந்த அளவில் இந்தியாவின் எந்தப் பகுதியிலும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

முதலாவதாக, காஞ்சி காமாக்ஷி திருக்கோவிலில் ஆதிசங்கரரின் சமாதியின் மீது முழு உருவ அளவுடைய சிற்பம் உள்ளது.

காமாக்ஷியம்மன் கோயிலிலும் ஏகாம்பரநாதர் கோயிலிலும் உள்ள கற்றூண்களில், ஆதி சங்கரரின் சில வடிவங்கள் உள்ளன. வரதராஜர் கோயிலில்,

பகவான் வியாசரிடம் ஆதி சங்கரர் பணிவன்புடன் நிற்பதைப் போன்ற சிற்பம் உள்ளது.

சிவஸ்தானம் என்ற கோயிலிலுள்ள மூலஸ்தான லிங்கத்திற்குப் பின்புறமுள்ள சிற்பத்தில், சங்கரர் சிவபார்வதியை வணங்குவது போன்ற காட்சி செதுக்கப்பட்டுள்ளது. இந்தக் கோயில், தேனம்பாக்கத்தில், வேகவதி ஆற்றின் தென் கரையில் அமைந்துள்ளது. இந்தக் கோயில், ஆரம்ப காலச் சோழர்களால் கட்டப்பட்ட பழைய கோயிலாகும். புதை பொருளாய்வாளர்களின் கவனத்தைக் கவரக்கூடிய சைத்ய வகைக் கட்டிட அமைப்புடைய கோயிலாக இருந்த இந்தக் கோயில், சமீபத்தில் புனருத்தாரணம் செய்யப்பட்டுள்ளது.

சென்னையிலிருந்து பதினைந்து மைல் தொலைவிலுள்ள மாங்காடு என்ற ஊரில் ஆதிசங்கரர் ஸ்ரீ சக்ரப் பிரதிஷ்டை செய்துள்ளார். அந்தக் கோயிலில் ஆதிசங்கரரின் சிலா வடிவமும் இருக்கிறது.

காமாக்ஷியம்மன் கோயிலில் நடக்கும் உத்சவங்களில் எல்லாம், ஆதி சங்கரர் சிலாவடிவிற்கும் உத்சவம் நடத்தப்படுகிறது.

இவையெல்லாம் ஆதி சங்கரருக்கும் காஞ்சிபுரத்திற்கும் உள்ள தொடர்பை வலியுறுத்தும் எடுத்துக் காட்டுகளாகும்.

ஆதி சங்கரர் காலத்தில் காஞ்சிபுரம் பல மதவாதிகள் நிறைந்த ஊராக இருந்திருக்கிறது. எனவே அவர் காஞ்சிபுரத்தில் ஒரு மடத்தை ஏற்படுத்தி அதையே முக்கிய தலைமைப் பீடமாக ஸ்தாபித்தார்.

அவர் மிகவும் பாராட்டிய 'சர்வக்ஞாத்மன்' என்பவரையே காமகோடி பீடாதிபதியாகவும், சாரதா மடத்தின் பீடாதிபதியாகவும் நியமித்தார்.

இந்தச் சர்வக்ஞாத்மன் என்பவர் பாண்டிய நாட்டு, தாமிரபருணி நதிக்கரையைச் சேர்ந்த வர்த்தனன் என்பவரின் மகன் ஆவார். ஏழுவயதிலே வேத வேதாந்த ஞானம் பெற்ற அதிசயப் பிறவியான இவர், ஆதி சங்கரருடன் வாதஞ் செய்த பெருமையுடை

யவர். ஆதி சங்கரர் அவரது திறமையைப் பாராட்டி, துறவு நல்கி, அவரை மடாதிபதியாக்கினரே தவிர, காஞ்சி சாரதா மடத்தின் மடாதிபதியாகத் தாம் இருக்கவில்லை.

ஏனெனில், ஞான மார்க்கத்தையே அடிப்படையாகக் கொண்டு, கர்ம வாதிகளை வாதஞ் செய்து வென்று வந்த அவர் மடாதிபதியாக இருக்கவில்லை. மேலும், தாம் இயற்றிய ஒரு சுலோகத்தில் அவர் தன்னைப் புரோகிதராக்காமலும், புகழுக்குக் கேடான இரவு வாழ்க்கையில் தன்னை வாழவிடாமலும், தன்னை உள்நாட்டுத் தலைவனுக்காமலும்* தன்னை மடாதிபதியாகவோ, பீடாதிபதியாகவோ ஆக்காமலும் சட்ட மன்றத்தில் தன்னைச் சாட்சியாக்காமலும், தன்னைப் பொய்யனுக்காமலும் தன்னை முரடனுக்காமலும், தன்னைக் கருணையற்றவனுக ஆக்காமலும், தன்னை எந்நாளும் காப்பாற்றும்படி சிவபெருமானை வேண்டிக் கேட்டுக் கொண்டுள்ளார்.

இதிலிருந்து அத்வைத தத்துவம் உலகிற்கு அவசியமானது என்பதற்குத்தான் அவர் பாடுபட்டாரே ஒழியத் தாமும் ஒரு மடாதிபதியாக விரும்பவேயில்லை என்று தெரிகிறது.

அவர் ஸ்தாபித்த காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் தமிழகத்தில் மிகச் சிறந்த ஹிந்து மதத் தலைமைப் பீடமாக அமைந்துள்ளது.

காஞ்சிபுர மடத்தின் பெயர் சாரதா மடம், பீடம் ஸ்ரீ காமகோடி பீடம். இதன் க்ஷேத்திரம்—சத்யவிரத காஞ்சி. இதன் தீர்த்தம்—கம்பாசரஸ். இதன் தேவதை—ஏகாம்பர நாதர். இதன் சக்தி—ஸ்ரீ காமகோடி. இதன் வேதம் ரிக் வேதம். இதன் சம்பிரதாயம்—மித்யவா சம்பிரதாயம். இதன் ஆசாரியரின் யோகப் பட்டம்—இந்திர சரஸ்வதி. இந்த மடத்தின் ஆசாரியர்கள் சத்ய பிரம்மச்சாரிகளாக வழங்கப்படுகின்றனர். இதன் மஹாவாக்கியம் "ஓம் தத்ஸத்" என்பதாகும். இதன் முதலாவது ஆசாரியர் "சர்வக்ஞாத்மன்" என்பவராவர்.

---

* Refer: WORLD RELIGIONS A study by Sir C. P. Ramaswamy Iyer.

# ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் வரிசை

ஸ்ரீ காஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீ காமகோடி பீடமே பாரதநாட்டின் மற்றைய பீடங்களில் தலைமையானது; தொன்மையானது. இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஆதிசங்கரரால் அமைக்கப்பட்ட, அந்தப் பீடமே, பாரத நாடெங்கிலுமுள்ள அத்வைத ஆசாரிய பீடங்களின் தலைமை ஸ்தாபனமாகும். ஆதி சங்கரரின் முக்கிய சீடர்கள் நால்வர்; அந்த நால்வரும் நான்கு வகை வேதவாக்கிய சம்பிரதாயங்களைச் செழுமைப்படுத்த வேண்டும் என்பதற்காகவே, பாரத நாட்டின் நான்கு திசைகளிலும் நான்கு மடங்களை உருவாக்கி அவற்றில் தமது சீடர்களை, ஆதிசங்கரரே நியமித்தார்.

ஸ்ரீ வித்யா சம்பிரதாயம் என்பது அத்வைதக் கோட்பாடுகளின் மிகநுணுக்கமான கொள்கைகளைக் கொண்டது. ஸ்ரீ சக்கரத்தின் அமைப்பின் நடுவே பிந்துஸ்தானம் அமைந்துள்ளதைப் போலவே, காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடமே மத்திய நிர்வாக ஸ்தானமாகும். அதற்கு வடக்கே, இமயத்தில் ஜோதிர் மடமும் கிழக்கே புரியில் ஜகந்நாத மடமும், மேற்கே துவாரகா மடமும், தென்பகுதியில் சிருங்ககிரி மடமும் அமைந்துள்ளன. அந்த நான்கு மடங்களுக்கும் நான்கு வகையான தொகுப்புகள், பட்டங்கள், க்ஷேத்திரங்கள், தேவதைகள், சக்திகள், சம்பிரதாயங்கள், பிரம்மச் சாரிகள், வேதங்கள், மகா வாக்கியங்கள் என்பவை பிற்காலத்தில் தனித்தனியர்கக் கொள்ளப்பட்டன. க்ஷேத்திரம், புண்ணியநதி, தேவதை, சக்தி ஆகியவற்றைப் பொறுத்தவரை, அவையெல்லாம், அந்தந்த மடம் அமைந்துள்ள தேசத்தின் வரலாறு, நிலவமைப்பு முதலியவற்றைக் கொண்டு நிச்சயிக்கப் பட்டன. சம்பிரதாயம், யோகப்பட்டம், வேதங்கள், மஹாவாக்கியம் முதலியன அவரவர் விருப்பம் போல ஏற்கப்பட்டன.

ஸ்ரீ காமகோடி ·பீடாதிபதிகள் 'இந்திர சரஸ்வதி' என்ற பெயரில் வழங்கப்படுகின்றனர்.

ஆதிசங்கரர் அவர்களையே முதலாவது பீடாதிபதியாகவும், சுரேஸ்வராசாரியரை இரண்டாவது ஆசாரியாராகவும் கருதிய வரலாற்ருசிரியர்கள், சர்வக்ஞாத்மரை முதலாவது பீடாதிபதியாகக் கொள்ளாமல், மூன்ருவது பீடாதிபதியாகக் கருதி, அந்த வரிசையில், வரலாற்றுக் குறிப்புகளை வரைந்துள்ளனர்.

3. **சர்வக்ஞாத்மன் :**—இவர்தான் ஆதிசங்கரருக்குப் பிறகு, காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தின் முதலாவது ஆசாரியராவர். இவர், நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தவர். இவர் கி. மு **364**ஆவது ஆண்டில் காஞ்சியில் காலமானுர். இவர் இயற்றிய சம்க்ஷேபஸ்ரிரகம், சவர்க்ஞான விலாசம் என்ற நூல்கள் அவர் புகழை ஒளிரச் செய்வன.

4. **சத்யபோதர் :**—(*364—268*) இவர் சேரநாட்டிலுள்ள அமராவதி நதிக்கரையிலிருந்து வந்தவர். சந்நியாசத்துக்கு முன்பு இவர் பெயர் பாலிநிஸா. இவர் தாண்டவ சர்மன் என்பவரின் மகன். இவர் சாங்கியர்கள், பௌத்தர்கள், சமணர்கள் ஆகியவர்களுடன் பெரும் வாதப் போர் செய்தவர். இவர் காஞ்சியில், பூதவுடலை நீத்துப் புகழுடல் எய்திஞர்.

5 **ஞானனந்தர் :**—(கி. மு. **268—205**) சந்நியாசம் ஏற்பதற்கு முன்னர் இவரது இயற்பெயர் ஞானேத்தமராகும். இவர் நாகேசர் என்பவரின் மகன். தர்க்க சாஸ்திரத்தில் வல்லவர். சுரேஸ்வரரின் நைஷ்காமிய சித்தி என்ற நூலுக்கு உரைகண்டவர். இவர், மன்மத ஆண்டு மிருக சீர்ஷ சுக்ல சப்தமியில், காஞ்சியில் காலமானுர்.

6. **சுத்தானந்தர் :**—(கி. மு **205—124**) இவர் வேதாரண்யத்தைச் சேர்ந்த பார்வு பண்டிதர் என்பவரின் மகன். பூர்வாசிரமப் பெயர்—விஸ்வநாதர். இவர் நாஸ்திக வாதிகளை அடக்கியவர். இவர் காஞ்சியில், நள வருஷம் ஜேஷ்ட சுக்ல சஷ்டியில் காலமானுர்.

7. **அனந்தானந்தர் :**—(கி. மு. **124—55**) இவர் சந்நியாசம் ஏற்பதற்கு முன்னர், சின்னையா என்று வழங்கப்பட்டார். சூரிய நாராயண மஹி

என்பவரின் மகனுன இவர், கேரள நாட்டைச் சேர்ந்தவர். இவர் உபாசனை செய்து வந்த ஸ்ரீ கௌரி யின் அருளால் சிறந்த புலமையும் நாவன்மையும் பெற்றிருந்தார். இவர் ஆதி சங்கரரின் பாஷ்யங்களுக் கும் சுரேஸ்வராச்சாரியரின் வார்த்திகத்துக்கும் தெளி வுரை எழுதியுள்ளார். இவர் ஸ்ரீ சைலத்தில் குரோதன ஆண்டு வைசாக கிருஷ்ண நவமியில் முக்தியடைந்தார்.

8. **கைவல்ய யோகி** :—(கி. மு. 55—கி. பி. 28) திருப் பதியைச் சேர்ந்த இவர் சச்சிதானந்தர் என்ற பெயரி லும் வழங்கப்பட்டார். இவர், ஆந்திர நாட்டைச் சேர்ந்த திரிலிங்க சிவையாவின் மகன். பூர்வாசிரமப் பெயர், மங்கண்ணு. இவரது நோக்கத்திற் கிணங்கத்தான், கிருபாசங்கரர் என்பவர் **சுபதா** விஸ்வரூபர் என்பவரைச் சிருங்ககிரியில் நியமித்தார். இவர் சர்வதாரி ஆண்டு மகர மாதத்தில், காஞ்சிபுரத்தில் உள்ள மண்டன மிஸ்ரர் அக்கிரகாரத்தில் காலமானுர்.

9. **கிருபாசங்கரர்** :—(கி. பி. 28—69) இவர், ஸ்ரீ காம கோடி பீடத்தின் அதிபதியானவுடன், அத்வைத மதம் சிறப்படைந்தது. இவரது பூர்வாசிரமப் பெயர், கங்கேசோபோத்தியாயர் என்பதாகும். இவர் ஆந்திர நாட்டைச் சேர்ந்த ஆத்ம சோமயாஜி என்பவரின் மகன். ஆதிசங்கரரின் காலத்திற்குப் பிறகு, மதத்தி னுள்ளே நுழைந்த பல வகையான துர்ஆசாரங்களை யும் பழக்கங்களையும் மாற்றினுர். தமிழகத்தில் சைவ மும், வைணவமும், சாக்தமும் இன்று தூய்மையாக வும், வளமையாகவும் விளங்குவதற்கு இவரே காரண மாவார். ஷண்மதஸ்தாபனம் செய்தவர் ஆதிசங்கரரே என்ருலும், அவர் கொள்கையில் புகுந்த களைகளை அகற்றுவதில் இவர் முக்கியத்துவம் பெற்றவராஞர். ஏனெனில் பௌத்தமும் சமணமும் ஷண்மதங்களையும் பாதிக்கத்தக்க அளவுக்கு வளர்ந்த அந்தச் சமயத்தில், ஷண்மதங்களையும் காக்கும் கடமையை ஏற்றவர்— கிருபாசங்கர்ரேயாவார். 'ஞானமே மோக்ஷம்' என்றும் அதையடைவதற்குப் பக்தியும் தியானமும் முதன்மை யானவை என்றும் வற்புறுத்தியவர் இவரேயாவர். மக்கள் எல்லோரும் உபநிஷதங்களைச் சரிவரப் புரிந்து கொள்ள இயலாமையாலும், எளியதொரு ஞானமார்க்க

மில்லாமையாலும், பௌத்தமும், சமணமும் நாட்டிலே முதன்மை பெறுவதை அறிந்து, எளியதொரு ஞான மார்க்கத்தை வகுத்தவர் கிருபாசங்கரரேயாவார். காளி, துர்க்கை, பைரவர் முதலிய தேவதைகளுக்குரிய பூசனை முறைகளை, அக்காலத்திய பௌத்தர்கள் தூஷணை செய்ததால், ஆதிசங்கரர் வகுத்த வழியிலேயே, சிவன், விஷ்ணு, அம்பிகை, சூரியன், கணபதி, ஸ்கந்தன் ஆகிய தெய்வங்களை அறிமுகஞ் செய்வித்து, எளிமை யான ஆராதனைகளைச் செய்யும் பழக்கத்தை இவர் தான் உருவாக்கினார். நரபலி, மேஷ பலி, எருமை பலி முதலிய உயிர்க் கொலைப் பழக்கங்களையும், மதுபானம் அருந்துதலையும் ஒழிக்க முயன்றார். பைரவர், காளி என்ற உக்கிர தேவதைகளை வழி படுவதை மாற்றி, பரமசிவம், பராசக்தி என்பவர்களைப் பற்றி மக்கள் மனத்தில் பதிய வைத்து, அன்புள்ளத் துடன் தூய்மையான வழிபாடு இயற்றும் வழிவகை களையும் அமைத்தார். அதன் பிறகே, கடவுள் இருள் மயமானவர், கடுங்கோபமுடையவர், பொறுமைக்காரர், பயங்கரர், என்ற எண்ணம் மாறி, கடவுள் அருளாளர், கருணை நிதியாளர், என்ற எண்ணங்கள் மக்கள் மனத் தில் தோன்றி அன்பு பூர்வமான வழிபாடுகள் நடை முறைக்கு வந்தன. ஆதிசங்கரர் இயற்றியதாகச் சொல் லப்படும், சிவ, விஷ்ணு, அம்பிகை, கணபதி, ஸ்கந்தன் முதலியோரைப்பற்றிய தோத்திரங்கள் யாவுமே கிருபா சங்கரராலேயே இயற்றப்பட்டவையாகும். அவர்தான் தமிழகத்தில் சைவம் தழைப்பதற்குரிய வளமையான நிலமாக, தமிழகத்து மண்ணை உழுது பண்படுத்தி வைத்தார். திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் முதலிய சமய குரவர்கள் தோன்றவும், ஆழ்வாராதிகள் தோன்றி வைணவத் தைத் தழைக்கச் செய்யவும், தமிழில் பக்தி இலக்கியங் கள் தோன்றுவதற்குமான சூழ்நிலையை உருவாக்கிய வர்—இந்தக் கிருபா சங்கரரேயாவர். கிருபா சங்கரரும் ஆதிசங்கரரும் காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தக் கிருபா சங்கரர்தான், **கைவல்ய யோதியாரின்** ஆக்ஞையைப் பெற்று, **சுபாத விஸ்வரூபர்** என்பவரை

சிருங்ககிரிக்கு அனுப்பி வைத்தவர் என்பதை முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம். இத்தகைய பெரியோரான கிருபாசங்கரர், விந்தியமலையில், விபவ வருஷம், கார்த்திகை மாத, கிருஷ்ண திருதியையில் பூதவுடலை நீத்துப் புகழுடல் பெற்றார். இவரே, தாம் வாழ்ந்த காலத்தில் காசி, காஞ்சி, திருவொற்றியூர், திருவானைக்காவல் முதலிய கோவில்களில் யந்திரங்களை அமைத்தவராவர்.

**10.** **சுரேஸ்வரர் :—**(கி. பி. 69—127) கிருபாசங்கரரின் வழித் தோன்றலாகிய இவர், மகாராஷ்டிர அந்தணர். இவர் ஈஸ்வர பண்டிதரின் மகன். இவர் காஞ்சியில் அக்ஷய ஆண்டு ஆஷாத் பௌர்ணமியில் காலமானார்.

**11.** **சிவானந்த சித்ஞானர் :—**(கி.பி.127—172) இவர் கர்நாடக அந்தணர். பூர்வாசிரமப் பெயர் ஈஸ்வரவதி. இவரது தந்தையின் பெயர் உஜ்வாலப் பட்டர் என்பதாகும். இவர் சிவ அத்வைதத்தைப் பரப்பியவர். இவர் விருத்தாசலத்தில் விரோதி கிருதி ஆண்டில் சுக்லதசமியில் காலமானார்.

**12.** **முதல் சந்திர சேகரர் :—**(கி. பி. 172—235) இவர் பாலாற்றங் கரையிலுள்ள ஒரு கிராமத்தைச் சேர்ந்தவர். இவர், பட்டர் என்பவரின் மகனாவார். இவரது பூர்வாசிரமப் பெயர், ஹரி. இவர் தமிழ் அந்தணர். இவர், மடத்தின் பொறுப்பையெல்லாம் தமது சீடர்களிடம் ஒப்படைத்துவிட்டு, சர்வபௌமா என்ற ஒரு வகை விசேஷ யோக சாதனையில் முனைந்தார். அறுபத்து மூன்றாண்டுகள் பீடாதிபதியாக இருந்த இவர், ஆனந்த வருஷம் ஆஷாட சுக்ல நவமியன்று சேஷாசலம் என்ற ஒரு மலையின் குகையினுள்ளே சென்றார். மறைந்தார். அதன் பிறகு இவரைக் காண முடியவில்லை.

**14.** **சத்சித்ஞானர் :—**(கி.பி.235—272) இவர் தமிழ் அந்தணர். கடிலம் நதிக்கரைக்கிராமத்தில் வாழ்ந்த ஸ்ரீதர பண்டிதர் என்பவரின் மகனாவார். இவரது பூர்வாசிரமப் பெயர் சேஷாசார்யர் என்பதாகும். இவர் காஞ்சிபுரத்

தின் சுற்றுப்புறங்களில் அவதூதராகத் திரிந்தார். முப்பத்திரண்டு ஆண்டுகள் இவ்விதமாகத் திரிந்து வந்த இவர் காஞ்சிபுரம் சிவாலயத்துள் நுழைந்தவுடன் லிங்கமாக மாறி விட்டார். இப்பொழுது இந்த லிங்கம் கயாரோஹனேஸ்வரர் என்றழைக்கப்படுகிறது. இந்த நிகழ்ச்சி கரவருஷம் மிருக சீரிஷ சுக்கில பிரதமையில் நடைபெற்றதாகும்.

15. **கங்காதரர் :—(கி. பி. 317—329)** காஞ்சி பத்திர கிரியாரின் மகன். ஆந்திர தேசத்தைச் சேர்ந்தவர். இவரது பூர்வாசிரமப் பெயர் சுபத்ரா. மாமுனிவர் அகஸ்தியரால் பஞ்சதசாக்ஷரி மந்திர உபதேசம் பெற்ற இவர், சர்வதாரி ஆண்டு சைத்ர சுக்கில பிரதமையில் அகஸ்தியர் மலையில் மறைந்தார்.

16. **உஜ்வாலா சங்கரர் :—(கி. பி. 329—367)** இவர், கேசவ சங்கரர் என்பவரின் மகனுவார். இவர் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்தவர். பூர்வாசிரமப் பெயர் அச்சுத கேசவர். இவர், துறவு முறையை எதிர்த்தவர். இவர் திக்விஜயம் செய்தபோது, சமணர்களையெல்லாம் சிந்து நதிக்கும் அப்பால் போகும்படி துரத்தி விட்டார். இவர் காஷ்மீரத்தில் அக்ஷய ஆண்டில் வைசாக சுக்கில அஷ்டமியில் கலாபுரி என்ற இடத்தில் மறைந்தார். இவர் பெயராலேயே அந்த ஊர், இன்றும் **உஜ்வாலா மஹாயதிபுரம்** என வழங்கப்படுகிறது.

17. **பாலகுரு என வழங்கிய கௌட சதாசிவர் :—(கி. பி. 367—375)** இவர் காஷ்மீரத்தைச் சேர்ந்த தேவமிஸ்ரர் என்ற அமைச்சரின் மகனுவார். இவர், சிறு வயதிலேயே வேதாந்த நாட்டமுடையவராக இருந்தார். இவரது தந்தை சமண மதத்தில் சேர்ந்ததால், இவருடைய வேதாந்த தத்துவ விசாரணையை யறிந்து, இவரை, சிந்து நதியில் தள்ளி விட்டார். அந்த நதியிலிருந்து, சிறுவரான இவரைப் பாடலிபுரத்தைச் சேர்ந்த பூரிவாசு என்பவர் காப்பாற்றினுர். உஜ்வாலா சங்கரர் காஷ்மீரத்திற்கு விஜயம் செய்த பொழுது இவருக்குச் சந்நியாசம் வழங்கினர். பதினேழு வயதுடைய இவர், சமணர்களை வாதில் வென்று வெற்றிபெற்று,

பாலகுரு என்ற புகழைப் பெற்ருர். இவர் எங்குச் சென்ருலும் ஆங்காங்கே, ஒவ்வொரு நாளும் ஆயிரம் அந்தணர்களுக்கு உணவளித்து வந்தார். இவர் பீடாதிபதியாக எட்டே ஆண்டுகள்தான் இருந்தார். இவர் நாசிக்கையடுத்த திரியம்பகா என்ற ஊரில், பவ வருஷம் ஜேஷ்ட சுக்ல தசமியில் மறைந்தார்.

18. யோகி திலக சுரேந்திர சரஸ்வதி ,—(கி. பி. 375—385) மகாராஷ்டிர தேசத்தைச் சேர்ந்த இவர். மாதவர் என்பவரின் மகன். காஷ்மீரத்து மன்னனின் மைத்துனர் நரேந்திரனின் அரசவையில் புகழ் பெற்றிருந்த சார்வாக துர்த்திவி என்பவரை வாதில் வென்ருர். அவரை வென்றதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்த மன்னன் நரேந்திரன் தனது அரியணையையே இவர் காலடியில் சமர்ப்பித்தான். பத்தாண்டுக் காலம் பீடாதிபதியாக இருந்த இவர், உஜ்ஜெயினிக்கருகேயுள்ள ஒருரில் தாரண ஆண்டு, மார்கசீர்ஷ சுக்ல பிரதமையில் மறைந்தார்.

19. மார்த்தாண்ட வித்யாஞானர் :—(கி. பி. 385—398) இவர், உமேச சங்கரர் என்பவரின் மகன். இவர் சூரிய தாசர் என்றும் வழங்கப்பட்டார். இவரது பூர்வாசிரமப் பெயர் ஸ்ரீகாந்தர் என்பதாகும். பிறந்த பொழுதிலிருந்தே தொழு நோயுடையவராக இருந்த இவர், தினந்தோறும் கதிரவனுக்கு 1008 சூரிய நமஸ்காரங்களைச் செய்து, அந்த நோயிலிருந்து முற்றிலும் குணமடைந்தார். பதினெட்டாவது வயதில் பதவியேற்ற இவர், பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, கோதாவரி நதிக்கரையில் ஹேவிளம்பி ஆண்டு பத்ரபாத கிருஷ்ண நவமியில் காலமாஞர்.

20. ஸ்ரீமுக சங்கரர் :—(கி பி. 398—437) இவர், வித்யாவதி என்ற வான சாஸ்திர நிபுணரின் மகஞவார். இவர், பிறவியிலேயே ஊமையாக இருந்தார். ஆயினும் வித்யாகானரின் அருட்பார்வையால், இவர் பேசும் திறனைப் பெற்ருர். அதுமட்டுமல்ல; வேதங்களை எல்லாம் வெகு விரைவில் கற்றுத் தேர்ந்தார். வித்யா

கானரால் அங்கீகரிக்கப்பட்ட இவர், அருட்சக்தி நிரம்பியவராக இருந்தார். இவரது அருட்சக்தியினால் குதிரை லாயத்துச் சிறுவர்களையும் மாவுத்தர்களையுங்கூட, சிறந்த வடமொழிப் புலவராக்கும் வல்லமையைப் பெற்றிருந்தார். உஜ்ஜைனி நகரத்தைச் சேர்ந்த மன்னன் விக்ரமாதித்தனும், காஷ்மீரத்து அரசனான மாத்ரகுப்தனும், அவன் வழிவந்த பிரவாசேன மன்னனும், இவரிணையடிக்குத் தொண்டு செய்வதையே பெருமையாகக் கருதி வந்தனர். இவர்தான், மூகபஞ்சசதி என்ற வடமொழி நூலை இயற்றியவர். அந்த நூலின் இனிமையும் சொல்லழகும் ஒலியமைப்பும் லீலாசுகரின் கிருஷ்ண காணும்ருதத்தைப் போல இனிமையானவை. இந்த நூல் காமாக்ஷியம்மன் மீது இயற்றப்பட்ட பக்திப் பிரபந்தமாகும். இதுவும் தவிர, பிராசீன சங்கர விஜயம் என்ற நூலை இவர் இயற்றியுள்ளார். அந்த நூல்தான், ஸ்ரீகாமகோடி பீடத்தின் தொன்மையையும் ஆதிசங்கரரின் காலத்தை நிர்ணயிக்க உதவுவதாக உள்ளது. இவர் தாது வருஷம் சிரவண பூர்ணமையில், கோதாவரியின் அருகே, தம் பூதவுடலை நீத்துப் புகழுடல் பெற்றார்.

21. **சர்வபௌம சந்திரசேகரர்** :—(கி. பி. 437—447) இவர், சிலகாலம் காஷ்மீரத்தின் மன்னராக இருந்த மாத்ரகுப்தரை விக்ரமாதித்த மன்னன் உஜ்ஜைனியின் அரியணையில் அமர்த்தியதைப் போல, ராஜ குருவாக நியமிக்கப்பட்டார். இவர், கொங்கணத்தைச் சேர்ந்த அச்சுதரின் மகனாவார். இவர் மூக சங்கரருக்குப் பிறகு காமகோடி பீடாதிபதியானார். பத்தாண்டுக் காலத்துக்குப் பிறகு, காசியில், வியாயா ஆண்டு, சிரவண கிருஷ்ணாஷ்டமியில் காலமானார்.

22. **பரிபூரணபோதேந்திரர்**.—(கி. பி. 447—481) இவர், இரத்தினகிரியைச் சேர்ந்த ராமனாதரின் குமாரராவர். பூர்வாசிரமப் பெயர் மதுரா என்பதாகும். இவர் ஒரு பெரிய யோகியாராகவும் சிறந்த வைத்தியராகவும் விளங்கியவர். ரௌத்ரி ஆண்டு, கார்த்திகை சுக்ல நவமியில், ஜகன்னாத ஆலயத்திற்கு அருகாமையில் சித்தி பெற்றார்.

**23. சத்சித்சுகர் :—**(கி. பி. 481—512) இவர், ஆந்திர நாட்டைச் சேர்ந்த ஸ்ரீகாகுளம், சோமாஞர்யாவின் புத்திரர். இவரது பூர்வாசிரமப் பெயர் கிரீசர். இவர் ஒரு சுப்ரமணிய பக்தர். இவர், ஆர்யா பட்டர் என்ற வானசாஸ்திரியும் நாஸ்திகருமாக இருந்தவரை, வேதமதத்தை ஏற்கும்படி மாற்றியவர். இவர் கர வருஷம், வைசாக சுக்ல சப்தமியில், ஜகன்னுத ஆலயத்திற்கு அருகே காலமாஞர்.

**24. சித் சுகர் I:—**(கி. பி. 512—527) இவர் கொங்கணத்தைச் சேர்ந்தவர். பூர்வாசிரமத்துப் பெயர் சிவ சர்மா. இவர் பீடாதிபதியாக இருந்த காலமுழுதும் கொங்கணத்திலேயே இருந்து வந்தார். பிரபவ ஆண்டு, சிரவண சுக்ல நவமியன்று இரத்தினகிரியில் காலமாஞர்.

**25. சித்தகுரு என வழங்கப்பட்ட சத்சிதானந்தகானர்:—**(கி. பி. 527—548) இவர் ஸ்ரீமுஷ்ணத்தைச் சேர்ந்த கிருஷ்ணர் என்பவரின் மகன். இவர் மூன்று முறைகள் பாரத நாடு முழுவதும் திக்விஜயம் செய்தார். இவர் ஒரு பெரிய யோகி. மிருகங்களின் மொழியை உணர்ந்து கொள்ளும் ஆற்றலுடையவராக இருந்தார். யோக சித்தியாலும் சக்தியாலும், இவர், கோகரணத்தில் லிங்கமாகவே மாறிவிட்டார் என்று கூறப்படுகிறது. இது, பிரபவ ஆண்டு, ஆஷாட சுக்கில பிரதமையில் நிகழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

**26. பிராக்ஞகானர் :—**(கி. பி. 548—564) இவர், பிஞகினி நதிக் கரையில் இருந்த ஒரு கிராமத்தைச் சேர்ந்த பிரபாகரர் என்பவரின் புத்திரர். இவரது பூர்வாசிரமப் பெயர் சோனகிரி. இவர் 18 ஆண்டுகள் பீடாதிபதியாக இருந்து, சுபானு ஆண்டு, வைசாக அஷ்டமியில், காஞ்சியில் காலமாஞர்.

**27. சித்விலாஸர் :—**(கி. பி. 564—577) இவர், ஹஸ்திகிரியைச் சேர்ந்த மதுசூதனர் என்பவரின் புத்திரர். இவரது பூர்வாசிரமப் பெயர் ஹரிகேசவர் என்பதாகும். இவர் ஆந்திரர். இவர் துர்முகியாண்டு, புத்தாண்டுத் தினத்தன்று காஞ்சியில் காலமாஞர்.

28. **மஹாதேவேந்த்ர சரஸ்வதி I** :—(கி.பி. 577—601) இவர் பத்ராசலத்தைச் சேர்ந்த பானுமிஸ்ரரின் புத்திரர். பூர்வாசிரமத்தில் இவர் பெயர் ஸேஷமித்ரர். மைதீலிய அந்தணரான இவர், ரௌத்ரி ஆண்டு, அஸ்வினி கிருஷ்ண தசமியில் மறைந்தார்.

29. **பூரணபோதேந்திரர் I**:—(கி. பி. 601—618) இவர் ஸ்ரீபதி என்பவரின் குமாரர். இவரது பூர்வாசிரமப் பெயர் கிருஷ்ணர். இவர், ஈஸ்வர ஆண்டு சிரவண, சுக்ல ஏகாதசி தினத்தன்று காஞ்சியில் காலமானார்.

30. **போதேந்திர சரஸ்வதி**:—(கி. பி. 618—655) காளஹஸ்தி என்பவரின் மகனான இவர் ஆந்திர நாட்டைச் சேர்ந்தவர். பூர்வாசிரமத்தில் இவர் பெயர் பாலையா என்பதாகும். இவர், காஞ்சியில் ஆனந்த ஆண்டு வைசாக கிருஷ்ண சதுர்த்தியில் காலமானார்.

31. **பிரம்மானந்தகானர் I**:—சீலநிதி-(கி.பி.655—668) கடிலம் நதிகரையிலுள்ள ஒரு கிராமத்தைச் சேர்ந்த அனந்தர் என்பவரின் புத்திரர். இவர் அந்தணர். பூர்வாசிரமத்தில் இவர் பெயர் ஜேஷ்டருத்திரர் என்பதாகும். ஆறுவகைத் தரிசனத்தைப் பற்றிய இவர் கருத்துக்கள் புகழ் பெற்றவை. காஷ்மீரத்தைச் சேர்ந்த லலிதாலயா முக்த பீடன் என்ற மன்னராலும், பவபூதி என்ற பிரபல வடமொழி நாடகாசிரியராலும் பெரிதும் போற்றப் பட்ட இவர் புகழ்பெற்று விளங்கிவந்தார். லலிதாலய முக்தபீடன் என்ற மன்னன், தென்னகத்திற்குப் படையெடுத்து வந்ததாகத் தெரிகிறது. அப்படி வந்தபோது இவரைக் காஞ்சிபுரத்தில் வந்து தரிசித்து, இவரது ஆசியைப் பெற்றுச் சென்றனன். இவர், பிரபவ ஆண்டு ஜேஷ்ட சுக்ல துவாதசியில் காலமானார்.

32. **சிதானந்தகானர்** :—(கி. பி. 668—672) இவர் கன்னு சங்கரர் என்பவரின் மகன். பூர்வாசிரமப் பெயர் பத்மனபர். இவர் ஒரு பெரிய யோகி. சருகு இலைகளையே உணவாக் கொண்டு வாழ்ந்தவர். இவர் பிரஜோற்பத்து ஆண்டு, மார்க்க சீரிஷ, சுக்கில சஷ்டியில் காஞ்சியில் காலமானார்.

**33. சத்சிதானந்தர் :—**(கி. பி. 672—692) இவர் சந்திரபாகா நதிக்கரையிலுள்ள ஒரு கிராமவாசியான பிரவுதராமண்ணு என்பவரின் புத்திரர். இவர், பாஸ பரமேஸ்தி என்ற பெயரிலும் வழங்கப்பட்டார். இவரது பூர்வாசிரமப் பெயர் திம்மண்ணு. இவர் பேசும் மொழிகளில் வல்லவர், இவர்தான், காஞ்சிபுர மடத்தின் கட்டிடங்களைப் பழுது பார்த்துச் செப்பனிட்டவர். இவர் காஞ்சியில் கர வருஷம் கிருஷ்ண சஷ்டியில் காலமானுர்.

**34. சந்திரசேகரர் II:—**(கி.பி. 692—710) இவர் வேகவதியாற்றின் கரையிலுள்ள ஒரு கிராமவாசியான மகாதேவர் என்பவரின் புத்திரர். இவரது பூர்வப்பெயர் சாம்பு. இவர் ஒருமுறை பாரத நாடுமுழுதும் சுற்றுப் பயணம் செய்தார். ஒருசமயம், பெரியதொரு காட்டுத் தீயிலிருந்து ஒரு குழந்தையைத் தீரமுடன் காப்பாற்றினுர். காஷ்மீர மன்னன் அவையில் அமைச்சராகவும் தீவிர பௌத்தராகவும் இருந்த சங்குனன் என்பவரை வாதில் வெற்றிபெற்ருர். இவர் சௌம்யா ஆண்டு, மார்க சீரிஷ அமாவாசையில் காஞ்சியில் காலமானுர்.

**35. பஹுரூப சித்சுகர் II:—**(கி. பி 710—737) இவர் வேதாசலத்தைச் சேர்ந்த விமலாக்ஷர் என்பவரின் புத்திரர். இவரது பூர்வாசிரமப் பெயர் சுசீல கமலாக்ஷர். இவர், சஹ்யமலையில் காவிரிநதி உற்பத்தியாகும், காவிரிமுனி என்ற குகையில் நீண்ட நெடுங்காலம் தவமிருந்து, தாது வருஷம் ஆஷாத சுக்ல சஷ்டியில், முக்தியடைந்தார்.

**36. சித்சுகானந்தர் சிதானந்தர் :—**(கி. பி. 738—758) இவர், பலாற்றங் கரையிலுள்ள ஒரு கிராமவாசியான சோமகிரி என்பவரின் குமாரர். இவரது பூர்வாசிரமப் பெயர், சுரேசர். இவர் 21 ஆண்டுகள் ஆட்சி புரிந்து ஹேவிளம்பியாண்டு, அஸ்வினி பௌர்ணமியில், காஞ்சிபுரத்தில் காலமானுர்.

**37. வித்யாகானர் III :—**(கி. பி. 758—788) இவர், பாலசந்திரர் என்பவரின் குமாரர். இவரது பூர்வப்

பெயர் சூரிய நாராயணர். இவரது காலத்தில் மேற்கிந்தியப் பகுதிகளிலிருந்து வந்த முகமதியப் படையெடுப்புகளிலும், ஆட்சியிலும் ஹிந்து தர்மத்தைக் காப்பற்ற அரும்பாடு பட்டார். இவர்யாத்திரை சென்ற பொழுது சிதம்பரத்தில் பிரபவ ஆண்டு புஷ்ய துவிதியையில் காலமானார்.

3ɔ. 5 **ஆவது சங்கரர் அல்லது அபிநவ சங்கரர்:—** (கி. பி 788—840) ஆதிசங்கரர் மரபில் வந்தவர்கள் எல்லோரையும் விட, இந்த அபிநவ சங்கரர், அரும் பெருஞ் செயல்களைச் செய்து மாபெரும் புகழ் பெற்றவராக விளங்கினர். இவரது செயல்கள் மிகவும் உயர்ந்தனவாகவும் புகழுக் குரியனவாகவும் இருந்ததால், இவர் செய்த அருஞ்செயல்கள் யாவுமே ஆதி சங்கரரின் செயல்களாகவே கருதப்பட்டு விட்டன. இவரது வாழ்க்கை விவரங்களை, **சங்கரேந்திர விலாசம்** என்ற நூலில் காணலாம். அதனை வாக்பதி பட்டர் என்பவர் வடமொழியில் இயற்றியுள்ளார். இவரது தந்தை சிதம்பரத்தைச் சேர்ந்த **விஸ்வஜித்** என்பவராவர். அவர் இறந்து தகனம் செய்யப்படும்போது, அவரது மனைவியும் தீப்பாய முற்பட்டார். அப்பொழுது அந்த அம்மையார் கருவுற்றவளாக இருந்ததால், அந்த அம்மையாரைத் தீப்பாயாதவாறு, பெரியோர்கள் தடுத்தனர். அந்த அம்மையாரின் பெயர் **விஸிஸ்தா** என்பதாகும். அந்த விஸிஸ்தா என்பவள், தன் வயிற்றில் வளர்ந்து வரும் குழந்தையைப் பெறுகின்ற வரை உயிர் காத்தார். இந்நிலையில் உலகம் அந்த அம்மையைத் தூற்றியது. கைம்மை நோன்பிருந்த அந்த அம்மையார் ஊராரின் பழிச் சொற்களைக் கேட்கச் சகிக்காமல், தான் கருவுற்றிருந்த சிசுவை, சிதம்பரத்திற் கருகாமையிலிருந்த ஒரு காட்டில் ஈன்றெடுத்தார். ஈன்றெடுத்த மகனை, காட்டிலேயே விட்டு விட்டார். அந்தக் குழந்தையை வியாக்கிர முனிவரின் மனைவியார் வளர்த்து வந்தார். ஐந்தாவது வயதில் உபநயனம் செய்விக்கப்பட்டது. வியாக்ரபாத முனிவரே, அந்தச் சிறுவனுக்கு வேதங்களை யெல்லாம் கற்பித்தார்.

இவரது வாழ்க்கைக் குறிப்புகள் யாவும் எப்படியோ ஆதி சங்கரரது வாழ்க்கைக் குறிப்புகளோடு தவருக இணைக்கப்பட்டுவிட்டன. சில சங்கர விஜயங்கள் பகவத் பாதாளே சிதம்பரம் விஸ்வஜித்தரின் மகன் என்று குறிப்பிட்டாலும், தாயைக் குறை கூறுவதாகவுள்ளன. குறிப்பாக, மாதவ சங்கர விஜயம் என்ற நூல், ஆதி சங்கரரின் பிறவியையே குறைகூறி உள்ளது. குறிப்பாக வரலாற்று ஆசிரியர் தாம் நிச்சயித்ததுதான் ஆதி சங்கரரின் காலம் என்று நிர்ணயம் செய்வதற்காகவே, ஆதிசங்கரர், 8 ஆவது நூற்ருண்டைச் சேர்ந்தவர் என்று நிச்சயிக்க முயன்றனர். ஆதிசங்கரரின் தாய் ஆர்யாம்பிகை. இந்த அபிநவ சங்கரரின் தாய் விஸிஸ்தா என்பது தெளிவாக இருப்பதை, வரலாற்ருசிரியர்கள் ஏனே கவனிக்கத் தவறிவிட்டனர்.

இந்த அபிநவ சங்கரர், வித்யாகானரால் காமகோடி பீடத்தின் ஆசாரியார் ஆக்கப்பட்டார். இவர் வேதாந்த ஞானத்தில் சிறப்புற்று, எல்லா மொழிகளிலும் வல்லுநராக விளங்கிஞர். இவர் திக்விஜயம் செய்யப்புறப்பட்டார். இவர் காஷ்மீரத்திற்குச் சென்று, வாக்பதிபட்டர் என்பரை வாதத்தில் வென்றமையால், காஷ்மீரத்து மன்னர் பரம்பரையினரால் மிகவும் கௌரவிக்கப்பட்டார். காஷ்மீரத்து அறிஞர்களை யெல்லாம் வாதத்திலும் ஞானத்திலும் வெற்றி கொண்ட அபிநவ சங்கரர், சர்வக்ஞபீடத்தின் அதிபதியாஞர். இவரது மதவிசாரணைகள், ஞானக் கருத்துகள் சீனர்களையும் துருக்கியர்களையும் பாரசீகர்களையும் கவர்ந்தன. இவர் ஐம்பத்திரண்டு ஆண்டுகள் சர்வக்ஞபீடாதிபதியாக இருந்து, சித்தார்த்த ஆண்டு ஆஷாட அமாவாசையன்று இமயமலையிலுள்ள தத்தாத்ரேயர் குகையில் புகுந்து மறைந்தார். இந்த அபிநவ சங்கரரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கொண்டு கி. மு. 477 ஆவது ஆண்டில் முக்தி யடைந்த ஆதி சங்கரராகச் சில வரலாற்ருசிரியர்கள் தவருகக் கருதினர். இதனுலேயே ஆதி சங்கரர் இமயத்தில் முக்தி யடைந்ததாகவும், ஆதிசங்கரர் 8 ஆவது நூற்ருண்டைச் சேர்ந்தவராகவும் நிச்சயித்தனர்.

**39. சத்சித்விலாசர்:—**(கி.பி.840—873) கன்யாகுப்ஜத்தைச் சேர்ந்த கமலேஸ்வரர் என்பவரின் மகனுன இவருக்குப் பூர்வப்பெயர் ஸ்ரீபதி என்பதாகும். இவர், பல ஆண்டுகள் பத்மபுரத்திலேயே வசித்து வந்தார். காஷ்மீரத்து அவந்திவர்மன் என்ற மன்னரவையில் புகழ் பெற்றிருந்த ஆனந்த வர்த்தனன் என்பவர் இவர்பால் பக்தியுடன் பேரன்பும் கொண்டிருந்தார். இவரிட்ட பணிகளைச் செம்மையுறச் செய்து வந்தார். இந்த ஆசாரியர், நந்தன ஆண்டு வைசாக பௌர்ணமியில், காஞ்சியில் முக்தியடைந்தார்.

**40. உஜ்வாலா மஹாதேவர் :—**III (கி. பி. 873—915) இவர் கர்ணுடகத்தைச் சேர்ந்த கன்னையா என்பவரின் குமாரர். இவரது பூர்வப் பெயர் சிவராமபட்டர் என்பதாகும். இவர் மிகவும் அழகு வாய்ந்தவராக இருந்ததால், இவரைச் 'சோபனர்' என்று வழங்கி வந்தனர். இவர் பவ வருஷம் வைசாக சுக்ல சஷ்டியில் முக்தியடைந்தார்.

**41. கங்காதரர் II :—**(கி. பி. 915—950) இவர், பீமாநதிக்கரையிலுள்ள ஒரு கிராமவாசியான உமேச பட்டர் என்பவரின் குமாரர். இவரது பூர்வப்பெயர் அப்பண்ணு என்பதாகும். இவர், இராஜசேகரன் என்ற அந்தகக் கவிஞருக்குக் கண்பார்வையை வழங்கியவர். இவர் சௌம்ய ஆண்டு சிரவண சுக்லப் பிரதமையில், காஞ்சியில் காலமானுர்.

**42. பிரம்மானந்தகானர் II :—**(கி. பி. 950—978) இவர், சுப்ரமண்யர் என்பவரின் குமாரர். சந்நியாசம் பெறுவதற்கு முன்பு இவர் பெயர் நரசிம்மபட்டர் என்பதாகும். இவர், ஈஸ்வர ஆண்டு கார்த்திகை சுக்ல அஷ்டமியில் காலமானுர்.

**43. ஆனந்தகானர் :—**(கி. பி. 978—1014) இவர், துங்கபத்திரை நதிக்கரை நாட்டைச் சேர்ந்த சுதேவ பட்டர் என்பவரின் குமாரர். பூர்வப்பெயர் சங்கர பண்டிதர். இவர் காஞ்சியில், பிரமாதியாண்டு சித்திரை, சுக்ல நவமியில் காலமானுர்.

**44.** பூரணபோதர் II :—(கி. பி. 1014—1040) இவர், கர்னுடகத்தைச் சேர்ந்தவர். பூர்வப்பெயர் ஹரி. இவர் தந்தை சிவன். இவர் இருபத்தைந்து ஆண்டுகள் பீடாதிபதியாக இருந்து பிரமாதியாண்டு, கிருஷ்ண திரயோதசியில் காலமானுர்.

**45.** பரமசிவர் I :—(கி. பி. 1040—1061) இவர், சிவசாம்ப பண்டிதர் என்பவரின் குமாரர். பூர்வப்பெயர் ஸ்ரீகாந்தர். இவர், சஹ்ய மலைச் சாரலிலுள்ள ஒரு மலைக் குகையில் வாழ்ந்து வந்தார். அப்போது சோம தேவர் என்ற ஒருவர் இவருக்குப் பணிவிடை செய்து வந்தார். இவர் சார்வரி ஆண்டு, அஸ்வினி, சுக்கில சப்தமியில், காஞ்சியில் காலமானுர்.

**46.** சந்திரானந்த போதர் :—(கி. பி. 1061—1098) இவர், சூர்யன் என்பவரின் குமாரர். இவரது பூர்வப் பெயர் சோமதேவர். இவர் தமது வாழ்நாளின் பெரும் பகுதியைத் தமது குருநாதரான பரமசிவருக்குத் தொண்டு செய்வதிலேயே கழித்து வந்தார். இவர்தான் புகழ்பெற்ற கதாசரித் சாகரம் என்ற நூலை இயற்றியவர். தாராவைச் சேர்ந்த போஜ மன்னன், இவருக்கு முத்துக்கள் இழைத்த பல்லக்கைப் பரிசாக அளித்தான். காஷ்மீர மன்னன் கலசன் என்பவரின் துணையைக் கொண்டு, அவ்வப்போது காஞ்சிபுரத்தின் மீது படையெடுத்த முகம்மதியப் படையெடுப்புகளிலிருந்து, மடத்தையும் தர்மத்தையும் இவர் காப்பாற்றினுர். இவர், ஈஸ்வர ஆண்டு, ஆஷாட அமாவாசையில், அருணுசலத்தில் முக்தியடைந்தார்.

**47.** சந்திரசூடர்:—(கி. பி. 1098—1166)இவர், குந்தி தீரத்தைச் சேர்ந்த சுகதேவரின் மைந்தர். இவரது பூர்வப்பெயர் ஸ்ரீகாந்தர். இவர் பாரத நாடெங்கும் திக்விஜயம் செய்து வந்தார். அப்பொழுது, சமண குருவாக விளங்கிய ஹேமாசாரியர் என்பவரை, வித்யாலோப குமாரபாலன் என்ற மன்னனின் அரசவையில் வாதில் வென்ருர். இந்த ஆசாரியரை, மிகப் பலர் பாராட்டியுள்ளனர். குறிப்பாக, மங்கர் என்பவரும் ஸ்ரீகாந்த சரிதம் என்ற நூலாசிரியரான

கிருஷ்ண மிஸ்ரர் என்பவரும், பிரசன்னராகவ என்ற நூலாசிரியரான ஜெயதேவரும், வைத்தியபிதான சிந்தாமணி என்ற வைத்திய அகராதியை இயற்றிய சுஹலா என்ற காஷ்மீரத்து வைத்திய நூலாசிரியரும் இவரைப் பெரிதும் பாராட்டியுள்ளனர். பக்தி கல்ப லதிகா என்ற நூலில், இவர், ஹேமாசாரியரை வெற்றி கொண்டதை ஜெயதேவர் மிகவும் பெருமைப்படுத்திப் பாராட்டியுள்ளனர். காஷ்மீர மன்னனுன ஜெயசிம்மன் என்பவன், இவருக்குத் தொண்டாற்றுவதையே சிறப்பாகக் கருதிவந்தான். இவர், பார்த்திப ஆண்டு சித்திரை அமாவாசையில் திருவண்ணுமலைக்கு அருகில் முக்தியடைந்தார்.

**48.** அத்வைதானந்த போதர் :—(கி. பி. 1166—1200) இவர் பிஞகினி நதிக்கரைக் கிராமவாசியான பிரேமேசர் என்பவரின் மைந்தர். இவரது பூர்வப்பெயர் சீதாபதி. இவர், நைஷதம் என்ற நூலேயும் கண்டன காண்ட காத்யா என்ற நூலேயும் இயற்றிய ஹர்ஷரையும், தாந்திரிக இலக்கிய வல்லுநரான அபிநவ குப்தன் என்பவரையும் வாதில் வென்று வாகைசூடினுர். இவர் பிரம்மவித்யாபாண, சாந்திவிவரணம், குருபிரதீபம் என்ற வடமொழி நூல்களை இயற்றியவர். இவர், சித்தார்த்தி ஆண்டு ஜேஷ்ட சுக்கில தசமியன்று சிதம்பரத்தில் முக்தியடைந்தார்.

**49.** மஹாதேவர் II :—(கி. பி. 1200—1247) இவர் தஞ்சையிலுள்ள சாயாவனத்தைச் சேர்ந்த அச்சுதர் என்பவரின் குமாரர். இவரது பூர்வப்பெயர் குருமூர்த்தி. இவர் தீவிர பராசக்தி பக்தர். ஆயினும் தாந்திரிகரல்லர். இவர் பிரபவ ஆண்டு, சிரவண கிருஷ்ணுஷ்டமியில், கடிலம் நதிக்கரையில் காலமாஞர்.

**50.** சந்திரசூடர் II :—(கி. பி. 1247—1297) இவர், அருணகிரி என்பவரின் மைந்தர். இவரது பூர்வாசிரமப் பெயர்—கங்கேசர். இவர் தமது குருவான மஹாதேவரைப் போலவே சாக்தராக விளங்கியவர். இவர் ஒரு கோடி அர்ச்சனை செய்யும் ஒரு ஹோமத்தை நடத்

தியவர். இவர் துர்முகியாண்டு, ஜேஷ்ட சுக்ல சஷ்டியில், கடிலம் நதிக்கரையில் காலமானுர்.

**51. வித்யா தீர்த்தர்:**—(கி. பி. 1297—1385) இவர், வில்வாரணியத்தைச் சேர்ந்த சாரங்கபாணி என்பவரின் குமாரர். இவரது பூர்வப் பெயர் சர்வக்ஞ விஷ்ணு என்பதாகும். வேதங்களுக்கு உரை எழுதிய சயனர், மாதவர், பிரபல வைஷ்ணவ அறிஞரான வேதாந்த தேசிகர், பைரவ கிருஷ்ண தீர்த்தர், என்ற சிருங்ககிரி முதலாவது ஆசாரியாளும் இவரது மாணவரே யாவர். இவரது காலத்தில் மத்வ மதமும், கோவாவிலிருந்து ரோமன் கத்தோலிக்க மதமும் வெகு வேகமாகப் பரவி வந்ததால், கர்ஞடகப் பிரதேசத்தில் எட்டு இடங்களில் எட்டுப் புதிய மடங்களே அமைத்து, அவற்றிலே தமது எட்டு மாணவர்களேப் பீடாதிபதிகளாக்கிப் பிற மதங்களுக்கு எதிரே அத்வைத மார்க்கத்தைப் பரவச் செய்தார். வித்யாரண்யர் என்பவர் விருபாக்ஷி மடத்தை நிறுவுவதற்குத் துணே செய்தார். சிருங்ககிரி மடத்தைப் புனருத்தாரணம் செய்து பிரம்மானந்தரை முதலாசாரியராக்கினுர். இவர்காஞ்சிபுரத்தில் எழுபத்து மூன்று ஆண்டுகள் ஆசாரியராக இருந்து, இமய மலேக்குத் தவஞ் செய்யச் சென்ருர். அங்கு பதினேந்து ஆண்டுகள் தவமியற்றி, ரக்தாக்ஷி ஆண்டு, மக சுக்ல பிரதமையில் விதேக முக்தியை அடைந்தார்.

**52. சங்கரானந்தர்:**—(கி. பி. 1385—1417) இவர், திருவிடை மருதூரைச் சேர்ந்த பாலசந்திரன் என்பவரின் மைந்தர். இவரது பூர்வப் பெயர்—மஹேசர். இவர் ஆசாரியராவதற்கு முன்பு, தவமிருக்கச் சென்ற வித்யா தீர்த்தருடன் இமயமலேக்குச் சென்றிருந்தார். இவர்தான், கர்ஞடகத்தில் புதிய எட்டு அத்வைத மடங்கள் தோன்றுவதற்குப் பெருமுயற்சி செய்தார். சிருங்ககிரி மடத்தையும் புனருத்தாரணம் செய்தார். இவர், ஈசோபநிஷதம், கேனேபநிஷதம், ப்ரஸ்னே பநிஷதம், பிரஹதாரண்யகம் என்ற உபநிஷதங்களுக்கும் தீபிகைகள் இயற்றினுர். ஆத்மபுராணம் என்ற நூலே இயற்றி, பகவத்கீதைக்கு வடமொழியில் உரை எழுதினுர். வைஷ்ணவ, மத்வ மதங்கள் பரவி வருவதைத்

தடுத்து, அத்வைத மதம் பரவுவதற்கான முக்கிய முயற்சிகளை மேற்கொண்டார். இவர் முப்பத்திரண்டு ஆண்டுகள் ஆசாரிய ஸ்தானத்திலிருந்து துர்முகி ஆண்டு வைசாக சுக்லப் பிரதமையில் காஞ்சியில் முக்தியடைந்தார்.

53. **பூரணானந்தசதாசிவர்:**—(கி.பி.1417—1498)இவர் நாகாரண்யத்தைச் சேர்ந்த நாகநாதரின் குமாரர். இவர் நேபாளம்வரை யாத்திரை சென்று, நேபாள மன்னரால் போற்றப்பட்டார். இவர், பிங்கல ஆண்டு, ஜேஷ்ட சுக்ல தசமியில் காலமானார்.

54. **வியாசாசல மஹாதேவர்:**—(கி. பி. 1498—1507) இவர், காஞ்சிபுரத்தில் வாழ்ந்து வந்த, காமேஸ்வரர், கமலாம்பாள் என்பவர்களின் குமாரர். இவரது பூர்வப் பெயர் குப்பண்ணா. இவர் தமது வாழ்நாளில் பெரும் பகுதியை வியாசாசலத்தில் கழித்தார். எனவே, இவரை வியாசாசலிய மஹாதேவர் என்று நாட்டு மக்கள் வழங்கலாயினர். இவர்தான் **வியாசாசலீய சங்கர விஜயம்** என்ற நூலை இயற்றியவர். இவர், அக்ஷய ஆண்டு ஆஷாத கிருஷ்ணப் பிரதமையில் வியாசாசலத்தில் முக்தியடைந்தார்.

55. **சந்திர சூடர் III:**— (கி. பி. 1507—1524) இவர், தென்னாற்காடு மாவட்டத்து, மணிமுக்தா நதிக் கரையிலுள்ள ஆஸ்மாசலப் பிரதேசத்தைச் சேர்ந்தவர். இவர், புராரி, ஸ்ரீமதி என்ற தம்பதிகளின் மைந்தர். பூர்வப் பெயர் அருணகிரி. இவர் தமிழ் அந்தணர். இவர், சுபானு ஆண்டு மீன சுக்கில ஏகாதசியில் மறைந்தார்.

56. **சர்வக்ஞசதாசிவ போதர்:** —(கி. பி. 1524—1539) இவர் வடபெண்ணை நதிக்கரைக் கிராமம் ஒன்றைச் சேர்ந்த கிருத சிக்கண்ணா என்பவரின் குமாரர். ப்ரவீர சேதுபதியின் குருவாகத் திகழ்ந்த இவர், புண்ணிய சுலோக மஞ்சரி என்ற நூலின் ஆசிரியராவார். காமகோடி பீடத்து ஆசாரியர்களின் வர

லாறுகளை அறிவதற்கு இவர் இயற்றிய நூல் ஆதாரமாகவுள்ளது. இவர் ஸ்வாத்ம நிரூபணம், என்ற நூலின் ஆசிரியருமாவர். இவர், விளம்பி ஆண்டு சித்ர சுக்கில , அஷ்டமியில் முக்தியடைந்தார்.

**57.** பரமசிவர் II (கி. பி. 1539—1586) இவர், பம்பா நதிக்கரையில் ஒரு கிராமத்திலிருந்த பரமேஸ்வரர் என்பவரின் குமாரர். இவர் சந்நியாசியாவதற்கு முன்பு, சிவராமகிருஷ்ணர் என்று வழங்கப்பட்டார். இவர் பிரம்மஞானியும், குருரத்தின மாலிகா என்ற நூலை இயற்றியவருமாகிய சதாசிவ பிரம்மேந்திரர் அவர்களின் குருநாதர். இவர் பரமசிவேந்திர சரஸ்வதி என்ற பெயரில் புகழ் பெற்றிருந்தார். சதாசிவ பிரமேந்திரர் அவர்கள், பரமசிவேந்திரரின் பாதுகைகளைத் தமது தலை மீது சுமந்திருப்பார் என்று தெரிவதிலிருந்து இவரது பெருமையை அறிந்து கொள்ளலாம். அதுபோலவே சதாசிவப் பிரம்மேந்திரரின் சிறப்பை அறிவதற்கும் ஒரு கர்ணபரம்பரைச் செய்தி தமிழகத்தில் பரவியுள்ளது. அதாவது, சதாசிவப் பிரம்மேந்திரர் அவதூதராக, பிரம்மஞானுனுபவத்தில் பித்தரைப் போலத் திரிந்து கொண்டிருப்பதைப் பார்த்த சிலர், பரமசிவேந்திரரிடம் வந்து, சதாசிவப் பிரம்மேந்திரர், பைத்தியக்காரராகி விட்டார் என்று கூறினர். அதற்குப் பரமசிவேந்திரர், "எனக்கு அந்தப்பித்துச் சிறிதளவாவது பிடிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்" என்ருராம். சதாசிவப்பிரம்மேந்திரர் அவர்கள் இயற்றிய ஆத்மவித்யா விலாசம் என்ற நூலில் பரமசிவேந்திரரைப் பற்றிப் பெரிதும் பாராட்டியுள்ளார். இந்த ஆசாரியர் சிவகீதைக்கு விளக்கவுரை எழுதியுள்ளார். இவர் நாற்பத்தேழு ஆண்டுகள் பதவியிலிருந்து, பார்த்திப ஆண்டு சிரவண சுக்ல தசமியில் திருவெண்காட்டில் முக்தியடைந்தார். தஞ்சையில், ஸ்வேதாரண்யத்தில் இவரது சமாதியின் மீது ஒரு கோயில் கட்டப்பட்டுள்ளது.

**58.** விஸ்வாதிக ஆத்மபோதர் :—(கி. பி. 1586—1638) இவர் விருத்தாசலத்தைச் சேர்ந்த விஸ்வமஹி என்ப

வரின் புதல்வர். சந்நியாசம் ஏற்பதற்கு முன்பு இவர் பெயர் விஸ்வேஸ்வரர் என்பதாகும். இவர் காசியில் நெடுங்காலம் தங்கியிருந்தார். இவர் ஸ்ரீருத்ரம் என்ற நூலுக்குத் தெளிவுரை எழுதியுள்ளார். இவர்தான், சதாசிவப் பிரம்மேந்திரரை, குருரத்ன மாலிகா என்ற நூலை இயற்றச் செய்தார். இவர் ஈஸ்வர வருஷம் துல கிருஷ்ணஷ்டமியில் கடிலம் நதிக்கரையில் காலமானுர்.

**59. பகவன் நாமபோதேந்திரர் :—**(கி. பி. 1638—1692) இவர், காஞ்சிபுரத்தில், மண்டனமிஸ்ரர் அக்கிரஹாரத்திலிருந்த கேசவப் பாண்டுரங்கர் என்பவரின் குமாரர். இவரது பூர்வப்பெயர் புருஷோத்தமர் என்பதாகும். கலியுகத்தில் பக்தி மார்க்கமே சிறந்ததும் எளிதானதுமாகும் என்பதை மக்களுக்கு அறிவிப்பதற்காக, ராமரத்தின ரசாயனம், நாமாம்ருத ரசோதயம் என்ற நூல்களை இயற்றினுர். ஸ்ரீதரவெங்கடேசர், அல்லது வெங்கடமஹி அல்லது திருவிசை நல்லூர் ஐயாவாள் என்பவரும் மருதா நல்லூர் சத்குரு வென்பவரும் இவரது கொள்கையைப் பரப்பப் பெரிதும் முயன்றனர். நாமசித்தாந்தம், பஜனை சம்பிரதாயம் என்ற முறைகளுக்கெல்லாம் ஆதாரமாக இருந்தவர், இந்தப் போதேந்திரரே யாவர். தென்னிந்தியாவில் இசைப் பாடல்களை, இசைக் கருவிகளுடனும் தாள வாத்தியங்களுடனும் கூட்டமாகப் பஜனை செய்யும் பக்தர்களும், பாகவதர்களும், பஜனைகளைத் தொடங்குவதற்கு முன், இந்தப் போதேந்திரருக்கு அஞ்சலி செய்த பின்னரே பஜனையைத் தொடங்குவது இன்றும் வழக்கமாகியுள்ளது.

போதேந்திரர் ராமேஸ்வரம் சென்றிருந்தார். அங்கிருந்து திரும்பும்பொழுது ஜம்புகேஸ்வரம் திருக்கோயிலில் தாடங்கப் பிரதிஷ்டை செய்தார். அங்கிருந்து காஞ்சிக்குத் திரும்பும் வழியில் கோவிந்தபுரத்தில் முக்தியடைந்தார். பிரஜோத்பத்தி ஆண்டு, புரோஸ்தபாத பூர்ணிமையில் இவர் விதேக முக்தியையடைந்தார். இவர் முக்தியடைந்த தினத்தை ஆண்டுதோறும் மிகச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

கோவிந்த புரத்திலுள்ள ஆதிஸ்தானத்தில் இன்றும் இவரது திவ்ய ஆவி பிரசன்னமாவதாகக் கூறப்படுகிறது. நள்ளிரவில், இவரது சமாதியில், மிகவும் அமைதியான சூழ்நிலையில் ஸ்ரீராம நாமங்கள் இசைப் பாடல்களாகப் பாடப்படும் குரல் இன்றும் கேட்கிறதாம்.

**60. அத்யாத்ம பிரகாசர்:** (கி. பி. *1692-1704*) இவர், வசிஷ்ட நதியின் கரையிலிருந்த ஒரு கிராமத்தைச் சேர்ந்த பரசுராமர் என்பவரின் மகனான கோவிந்தர் ஆவார். இவரது பூர்வப் பெயர் சுருதி பண்டிதர் என்பதாகும். இவர் சில காலம் கோவிந்தபுரத்தில் தங்கியிருந்தார். இவர், திருவிசை நல்லூர் ஐயாவாள் அவர்களின் குருவாகத் திகழ்ந்தார். தஞ்சையில் மன்னராக இருந்த ஷாஜியினால் மிகவும் கௌரவிக்கப்பட்டார். இவர், சுபானு ஆண்டு சைத்ர கிருஷ்ண துவிதியையில், கோவிந்தபுரத்தில் முக்தியடைந்தார்.

**61. மஹாதேவர் V** (*1704—1746*) இவர் நாராயணர் என்று வழங்கப்பட்டார். இவர் ஒரு பெரிய யோகி. இவர் பீடாதிபதியாக இருந்த சமயத்தில்தான் ஆத்மபோதர், குருரத்ன மாலிகையின் விளக்கவுரைகளை எழுதலானார். இவர் குரோதன ஆண்டு, ஜ்யேஷ்ட சுக்ல நவமியில், சென்னைத் திருவொற்றியூரில் காலமானார்.

**62. சந்திரசேகரர் IV** (கி. பி. *1746—1783*) கர்நாடகப் போர்கள் காரணமாக, இவர் காலத்தில் காஞ்சிபுரம் அமைதியற்றிருந்தது. எனவே, காஞ்சி காமகோடி பீட ஆசாரியர்கள் தெற்கே செல்ல முடிவு செய்தனர். அவர்களுக்கும் முன்னதாகக் கோயிலிலிருந்த தங்கத்தாலான காமாக்ஷி விக்கிரகத்தை ஸ்தானிகர்கள் உடையார்பாளையத்திற்குக் கொண்டு சென்றிருந்தனர். பிறகு அங்கிருந்து தஞ்சைக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கே ஸ்தாபிக்கப்பட்டது. அப்போது ஆண்டுவந்த பிரதாப சிம்மர் என்ற மகாராஷ்டிர மன்னர், இவரைத் தஞ்சையையே நிரந்தரத் தலைமை நிலையமாகக் கொள்ளும்படி வேண்டினார். ஆனால், காவிரி நதிக் கரையிலுள்ள கும்பகோணத்தில் மடத்தை ஸ்தாபிப்

பதுவே தகுதியானது என்று ஆசாரியர் கருதினார். அதன் காரணமாகக் காஞ்சிகாமகோடி 'மடமே, கும்ப கோண மடமாகப் புகழ்பெற்று வழங்கலாயிற்று. இவர் சுபகிருது ஆண்டு, புஷ்ய கிருஷ்ண துவிதயை யில் கும்பகோணத்தில் காலமானார்.

**63.** மகாதேவர் VI (கி. பி. *1783—1814*) கும்ப கோணத்தைச் சேர்ந்த இவரது இயற்பெயர் அன்னா சிரௌதி என்பதாகும். இவர் யோகசாதனைகளில் வல்லவர். இவரது காலத்தில்தான், கும்பகோண மடமானது தஞ்சை மன்னரால் கட்டப்பட்டது. இவர் ஸ்ரீமுகஆண்டு, ஆஷாட சுக்ல துவாதசியில்காலமானார்.

**64.** சந்திர சேகரர் V (கி. பி. *1814—1857*) இவரது இயற்பெயர் வேங்கட சுப்ரமண்ய தீக்ஷிதர் ஆகும். இவர் தஞ்சையில் புகழ் பெற்றிருந்த அமைச்சர் கோவிந்த தீக்ஷிதரின் குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் மந்திர சாஸ்திரத்தில் வல்லவர். இவர் காஞ்சியிலும் ஜம்புகேஸ்வரத்திலும் உள்ள இயந்திரங்களைப் புதுப் பித்தார். இவர், சாதாரண ஆண்டு கிருஷ்ண துவிதியை கார்த்திகை நட்சத்திரங் கூடிய தினத்தில் முக்தி யடைந்தார்.

**65.** மகாதேவர் VII (கி. பி. *1851—1891*) இவரது இயற் பெயர் மஹாலிங்கம். இவர் மத்யார்ச்சுனத்தைச் சேர்ந்த சேஷாத்ரி சாஸ்திரியாரின் மகன். இவர் திக் விஜயம் செய்து, விரோதியாண்டு, பங்குனி அமாவாசையில் இளையாற்றங்குடியில் சித்தியடைந் தார். இவரது சமாதியின் மீது நாட்டுக்கோட்டை நகரத்தார் கோயில் ஒன்று கட்டியுள்ளனர். அங்கு தினசரி பூஜை நடைபெற்று வருகிறது.

**66.** சந்திரசேகரர் IV (கி. பி. *1891—1908*) இவர் சீதாராம சாஸ்திரி என்பவரின் மகன். இவரது இயற் பெயர் சுவாமிநாதர். இவர் உதயம் பாக்கத்தைச் சேர்ந் தவர். இவர், காஞ்சியை அடுத்துள்ள கலவையில் பராபவ ஆண்டு, மக, கிருஷ்ண அஷ்டமியில் முக்தி யடைந்தார்.

## ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜாசாரிய, ஜகத்குரு, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

இம் மகான், இன்றைய ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தின் அதிபதியாக விளங்கிவருகிறார்கள். இவர்கள் 1894 ஆவது ஆண்டு மேமாதம் 20ஆம் தேதியன்று விழுப்புரத்தில் அவதரித்தார்கள். இவர்களது தந்தை பிரம்மஸ்ரீ சுப்ரமண்ய சாஸ்திரிகள். தாய், மஹாலக்ஷ்மி அம்மையார். இவர்கள் தமிழகத்தில் நாயக்க மன்னர் ஆட்சிக் காலத்தில் அமைச்சராகப் புகழ்பெற்று விளங்கிய **கோவிந்த தீக்ஷிதரின்** பரம்பரையில் வந்தவர்கள். இவர்கள் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தின் தலைவராக கி. பி. 1907ஆவது ஆண்டு, பெப்ருவரி மாதம் 13 ஆம் தேதியன்று பதவியேற்றார்கள். அப்பொழுது இந்தப் பெரியாருக்கு வயது பதின்மூன்று.

ஸ்ரீகாமகோடி பீடத்தின் மகிமையைத் துலங்க வைத்து வரும் சுவாமிகளின் எளிமையும், இன்முகமும், கருணை விழிப் பார்வையும், தமிழக மக்களின் மதிப்பையும் மரியாதையையும் தேடித் தந்துள்ளன. இவர்கள் மனிதரில் தெய்வம் போன்ற உயர்ந்த பண்புகளைக் கொண்டவர்கள்.

சுவாமிகள், கும்பகோணம் பங்காரு காமாக்ஷியம்மன் கும்பாபிஷேகத்தைச் சிறப்பாக நடத்தியிருக்கிறார்கள். இவர்கள் சமுதாய சேவையில் முக்கியக் கவனம் செலுத்திவருகிறார்கள். சமூக சேவை, திருக்கோயில்களின் நிர்வாகம், ஏகாதசி தினங்களில் புராண இலக்கியச் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்தல், பசு சம்ரக்ஷணை, திருக்குளம், கேணிகளைப் பழுதுபார்த்தல், தர்மங்களைக் காத்தல், முதலிய நற்றொண்டுகளில் தனிக் கவனம் செலுத்தி வருகிறார்கள். வேதங்களிலும் வேத ஆகமங்களிலும் விற்பன்னர்களாக இருப்பவர்களுக்கு நிலங்களையும் வேதத்தியானம் செய்வோருக்குப் பரிசுகளையும் அவ்வப்போது சன்மானமாக வழங்கி அவர்களை ஊக்குவித்து உற்சா

கப்படுத்தி வருகிறுர்கள். காஞ்சி ஸ்ரீ சாரதாமடமானது, தனது நிர்வாகத்தில், காசி, காஞ்சி, மத்யார்ஜுனம், கும்பகோணம், ஜம்புகேஸ்வரம் தஞ்சாவூர் முதலிய இடங்களில் இயங்கும் வேத, சாஸ்திர பாடசாலைகளின் பொறுப்பை ஏற்று நடத்தி வருகின்றது. வேதத் தியானப் படிப்பில் அக்கரை கொண்டு பொறுப்பேற்றுப் படிக்கும் மாணவர்களுக்கு முதற் படிவத்திலிருந்து ஆருவது படிவம்வரை படிப்பதற்கு இலவசக் கல்வி நிதியுதவுதற்காக ஒரு குழுவையே ஆசாரியர் அமைத்துள்ளார்கள். இந்த அமைப்பு, கடந்த மூன்று நான்கு ஆண்டுகளாகச் சிறப்பாக இயங்கி வருகிறது.

* * *

இந்தப் பெரியாரின் அறுபத்தொன்ருவது பிறந்த நாள் விழா, 1954ஆவது ஆண்டில் காஞ்சியின் அருகேயுள்ள ஓரிகையில் சிறப்பாக நிகழ்ந்தது. சுவாமிகளுக்குப் பிறகு ஸ்ரீகாஞ்சி பீடத்தின் அதிபதியாவதற்கு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளை நியமனம் செய்துள்ளார்கள். இவர்கள் நீடுழி வாழ்ந்து உலகமெங்கும் ஹிந்துமதம் பரவ, அரிய தொண்டாற்ற இறைவன் திருவருள் கூட்டி வைப்பாஞக.

## ஆதி சங்கரர் பேசுகிறார்!

எந்த ஆசான்கள், அறிவின் சொற்களையும் வாசகங்களையும் மூலங்களையும் நன்கறிந்திருக்கிறார்களோ அந்த ஆசான்களுக்கு நான் தலை வணங்குகிறேன். வேதங்களின் மறை பொருளான பிரம்மத்தைத் தெளிவாக நமக்குக் காட்டுவதில் எந்த ஆசான்கள் ஒளி விளக்குகள்போல் விளங்குகின்றார்களோ, அந்த ஆசான்களுக்கு நான் தலை வணங்குகிறேன்.

* * *

எந்த ஒரு ஏக சக்திப் பரம் பொருள் உள்ளுணர்வின் தன்மையையுடையதோ அந்தப் பரம் பொருளுக்குத் தலைவணங்குகின்றேன். எந்த ஏகப் பொருளைத் தவிர (அறிபவர், அறிவு, அறியப்படுபவர் என்று) வேறெப் பொருளுமே இல்லை என்று ஆகிறதோ அந்த ஏகப் பொருளுக்குத் தலை வணங்குகின்றேன்.

* * *

எந்தச் சித்தத்தின் செயலகமாகிய (உள் ஆள்) நித்திய உள்ளுணர்வினின்று செயல்கள் பரிணமிக்கின்றனவோ, அந்த உள்ளுணர்வினுக்குத் தலை வணங்குகின்றேன்.

* * *

சாம வேதத்தின் உபநிஷதத்தில் தந்தை (உத்தாலகர்) தமது புத்திரனுக்கு (ஸ்வேத கேது) "பரிசுத்த ஜீவி, பரிசுத்த ஆத்மா, பிறவாதவர், மெய்யானவர், சிரஞ்சீவி, அந்தமிலோன் மூலன்" ஆகிய எல்லாம் நீயே என்று யாரைக் கூறுகின்றாரோ, அவரை நமஸ்கரிக்கின்றேன். சம்சார இருளைப் போக்குகின்றவர் யாரோ அவருக்கே ஸ்தோத்திரம்.

* * *

எந்த மெய்ப் பொருளாகியவரின் ஆத்மாவின் ஒரு அணு பிரதிபலிக்கப் பெற்றுத் தனி மனித ஆத்மா வானது புறப் பொருள்களை உணர்ந்தும் அகத்தே வசித்து அறிவை இயக்கும் பரம்பொருளை உணர்வ தில்லையோ அந்த மெய்ப் பொருளுக்கு—சம்சார இருள் நாசனுக்குத் தோத்திரம்!

*  *  *

எந்த அறிவுமயமானவரை மனிதன் தன் உள்ளு ணர்வில், "நானே அவன்" என்று அறியாத வரையில் பிரபஞ்சம் மெய்யென்று அறிந்த பின்னர், வேறெல் லாம் பொய் என்று தோன்றுகின்றதோ அந்த அறிவு மயமானவருக்கு நமஸ்காரம்.

*  *  *

ஆகாயத்தோடு கூடிய இந்தப் பிரபஞ்சமாகிய சிலந்தி வலையின் குறுக்கு நெடுக்கு இழைகளோடு இணைந்திருப்பவர் யாரோ, அந்த மில்லாதவர் என்ற நாமத்திற்குரியவர் யாரோ, அவரன்றிச் சர்வ ஞானி வேறொருவருமிலர் என்று யாரைச் சொல்கின்றோமோ— அவருக்கு—அந்தச் சம்சார இருள் நாசனுக்குத் தோத்திரம்.

*  *  *

மானிட உள்ளுணர்வின் ஒளியாகவும், சகலத்திற் கும் மூலகாரணராகவும், மகிமைக்குரியவராகவும் யார் திகழ்கின்றாரோ, யார் சூரிய சந்திர அக்கினியாதிகளின் நடுவண், இதயத்திலே மின்னல் போல் ஒளி வீசுகின் றாரோ, ஞானிகள் யாரை மெய்ப் பொருள் என்று பக்தி செலுத்தித் தொழுது எவரிடம் இம்மையிலேயே ஐக் கிய மடைகின்றார்களோ அவருக்கு—அந்தச் சம்சார இருள் நாசனுக்குத் தோத்திரம்.

*  *  *

பிரபஞ்சத்தை ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலின் மூலகாரணரும்,மகா சக்திக்குரிய

வரும், பல் வேறு உருக்கொண்டும் தளையில்லாதவரும், சர்வ ஞான, பிரபஞ்சப் பிரபுவும், அளவில்லா ஆனந்த சமுத்திரமுமாகிய அந்த அந்தர ஆத்மாவுக்கு வணக்கம் செலுத்துகிறேன்.

* * *

நான் எனது ஆசானது தாமரைப் பாதங்களுக்கு என்றும் தலை வணங்குகின்றேன். அவரது கிருபையாலேதான் அழியா அறிவைப் பெற்றேன். அதாவது நான் சர்வ வியாபியான ஒரு பொருள் என்றும் விந்தை மிகுந்த பிரபஞ்ச முழுமையும் என்மீது படிந்து கிடக்கிறது என்றும் அறிந்தேன்.

* * *

வேதாந்தத்தில் பேசப்படுகின்ற மாறுதல் இல்லாத, தங்குதடையில்லாத, வேறென்றும் அணுகாத மாசற்ற பேரானந்தமே 'பிரம்மம்' என்று அறியவேண்டும்.

* * *

மென்மையும் இன்றி வன்மையும் இன்றி, பெரிதுமின்றிச் சிறிதுமின்றி விளங்குவதும், பிறப்பில்லாததும், மாறுதல் இல்லாததும், உருவம், தன்மை சாதி நாமம் அற்றதும் ஆகிய அதனையே 'பிரம்மம்' என்று அறிதல் வேண்டும்.

* * *

எதன் ஒளியால் சூரியன் முதலியவை பிரகாசிக்கின்றனவோ, ஆனால் பிரகாசிக்கும் பொருள்களால் எது பிரகாசம் பெறவில்லையோ, எதன் காரணமாக இந்தப் பிரபஞ்சமே ஒளிபெற்று விளங்குகின்றதோ அதுவே "பிரம்மம்" என்று அறிதல் வேண்டும்.

* * *

எதனைப் பெறுதலைவிடப் பெரிய பேறு கிடையாதோ, எந்த ஆனந்தத்தை விடப் பெரியதொரு

ஆனந்தம் கிடையாதோ, எதனை அறியும் அறிவை விடப் பெரிய அறிவு கிடையாதோ அதுவே 'பிரம்மம்' என்று அறியப்படவேண்டும்.

* * *

எதனைக் கண்ட பின் வேறெதனையும் காணவே வேண்டாமோ, எதுவாக மாறியபின் வேறெதுவாகவும் ஆக வேண்டியதில்லையோ—மறுபிறப்புத் தேவையில்லையோ—எதனை அறிந்த பின்பு வேறெதுவுமே அறியப் படுவதற்கில்லையோ—அதுவே 'பிரம்மம்' என்று அறியப்படுதல் வேண்டும்.

* * *

எது எங்கும் வியாபித்திருக்கின்றதோ, எது ஆன்மாவாய் ஆனந்தமாய் இரண்டின்றி ஒன்றே என்று அந்தமில்லாது நித்தியமாய் ஏகமாய்த் திகழ்கின்றதோ அதுவே 'பிரம்மம்' என்று அறியப்பட வேண்டும்.

* * *

தன்னடக்கம், அமைதி, உண்மை, தாய்மை, இவை வேண்டும் மனிதருக்கு. அழியாப் பொருளை அறிதல் வேண்டுமாயின் வேதங்களை உணர்ந்தவரும் பிரம்மத்தில் லயித்தவருமாகிய ஆசான் ஒருவரை அடுத்தல் வேண்டும். படகானது மாந்தரை நதியைக்கடந்து கரைக்குச் சேரச் செய்யுமாப் போல், ஆசான் தனது சீடனுக்கு அறிவைச் செலுத்துகிருன். ஸ்ருதி (வேதம்) கூறுவது யாதெனில் ஆசானை உடையவர்கள்தான் பிரம்மத்தைக் காணமுடியும் என்பதும், ஆசானிடமிருந்து பெறும் அறிவு மட்டுமே பூரண அறிவாக அமைகிறது என்பதுவுமே யாம்.

* * *

ஆசான் என்பவர் பிரம்மத்தை அறிந்து அதிலே லயித்த ஒருவராவார். அகந்தை, வஞ்சனை, பொறுமை, பொய்ம்மை, தற்பெருமை, பற்று இன்னும் இவை

போன்றவை அவரிடம் சற்றும் இடம் பெறுவதில்லை. அவர் அகத்தேயும் புறத்தேயும் சிற்றின்பத் தொடர் பற்றவர். துறவுக்கும் அறிவுக்கும் இருப்பிடமானவர். அவர் முதன் முதலில் வேத நூல்களைக் கற்பித்து மனிதனின் ஆன்மா பிரம்மத்தோடு ஒன்ருயிருப்பதை வெளிப்படுத்துகின்ருர். அதாவது, "தொடக்கத்தில் பிரபஞ்சம் ஏகமாக அமைந்திருந்தது. அதில் வேருென்றையும் காண இயலாது. இஃதெல்லாம் தன்னைத் தவிர வேறில்லை. தொடக்கத்தில் எல்லாம் ஏகமயமாகவே இருந்தது. இஃதெல்லாம் பிரம்மமே" என்றவாறு.

* * *

ஆசிரியர் பிரம்மத்தின் தாத்பரியத்தை வேதம் விளம்பும் வகையில் கற்பிக்கின்ருர். அதாவது "ஆன்மம் நெருங்கியதும் நேரடியானதும் ஆகும். அது, பார்க்கிறதும் பார்க்கப் படாததும் ஆகும். அது, அந்தமில்லாத வியாபியாகும். ஞானமாகவும் ஆனந்தமாகவும் உள்ளது. அது கண்ணுக்குத் தெரியாதது! உருவமற்றது. பிறப்பற்றது. மெய்யாகவே அது அறியப்பட்ட வற்றிற்கும் அறியப்படாதவற்றிற்கும் அப்பாற்பட்டது. தொடக்கமில்லாதது; தன்மையில்லாதது. இந்த 'நான்' என்னும் உணர்வானது எல்லாப் பிராணிகட்கும் பொதுவாகவும், தனித்த இந்த 'நான்' எனப்படுவது பிரபஞ்சத்திற்கே பொதுவானது என்றும்கருதப்பட வேண்டும். இது பார்க்கப்படாது பார்ப்பதும், கேட்கப்படாது கேட்பதும், சிந்திக்கப்படாது சிந்திப்பதும், அறியப்படாது அறிவதும் ஆகிய தன்மையது. இது சர்வ வியாபியாகும். அழிவில்லாத ஞானமுமாகும். அதன் பெயரும் அமைப்பும் பிரபஞ்சத்தின் வித்தாகும். அது ஆன்மாவை ஒத்ததென்றும் மாறுபட்டதென்றும் சொல்ல முடியாதது. ஆயினும் ஆன்மாவுக்கு மட்டும் புலப்படுவதாகும்.

* * *

"அவன் படைத்தான்; படைத்த படைப்பினுள்ளே அவனே நுழைந்தான்" என்று வேதம் கூறுகின்றது.

"அதனுள் நுழைந்த அவனே எல்லாவற்றையும் ஆளுகின்ருன்" அவனே, அந்தத் தத்துவனே, இந்த எல்லா உடல்களுள்ளேயும் நுழைந்துள்ளான்; "இது நீ தான்; இது தான் எல்லா ஜீவன்களினுள்ளும் மறைந்துள்ளது" எல்லாத் தெய்வங்களுமே அந்தராத்மாவே தான். அந்தப் பரமாத்மா, எல்லா உடல்களையுமே உறைவிடமாகக் கொண்டுள்ளான். ஆனால் எதனோடும் இணைந்தே இணைந்துள்ளான். அத்தகைய பிரம்மனை எவன் ஒருவன் வேறு புறவழிகளில் செல்பவனுகக் கருதுகிருனோ, அவன் மரணத்திற்குப்பின் மரணத்தையே அடைகின்ருன். ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் இடையே எத்தகைய மாறுபாடும் இல்லை என்று எவன் உணர்ந்து கொள்ளுகிருனோ, அவன் தனக்குத் தானே எஜமானனுகிருன். இதுவே தத்துவம். அந்தத் தத்துவமே நீயாகிருய்.

* * *

நான் பரமாத்மாவை விட்டு வேறுபட்டிருந்தாலும் அதன் இயல்புகளுக்கும் ஊடுருவும் தன்மைக்கும் நான் இடமாக இருக்கின்றேன். உடலில் ஏற்படும் காயம், சூட்டுக் காயம், பசி, தாகம் இவற்றின் கொடுமைகளும் நோயும் என்னுடன் இருக்கின்றனவே. ஆனால் அதே சமயத்தில், பரமாத்மாவானது பாபமற்றதாகவும்; மூப்பற்றதாகவும், துக்க மற்றதாகவும், மரண மற்றதாகவும், பசி யற்றதாகவும் வாசனை, சுவை, தாக மற்றதாகவும் கூறப்படுகிறதே, அத்தகைய பரமாத்மாவேநான்தான் என்று, நான் எப்படி, நெருப்பைக் குளிர் என்று ஒப்புக் கொள்வதுபோல ஒப்புக் கொள்ள முடியும்" என்று ஒரு மாணவன் தன் ஆசானைக் கேட்டான். அதற்கு அவனது குருநாதர் பின் வருமாறு கூறினுர்." உன் உடலானது வெட்டப்பட்டவுடனேயோ, அல்லது சுடப்பட்ட உடனேயோ நேரடியாக அந்த நோயை உடனடியாக உணர்வதில்லை. உடலில் மட்டுமே அவை உண்டாகின்றன.

* * *

ஒரு மரத்தை வெட்டுவதைப் போலவோ, ஒரு மரத்தைச் சுடுவதைப் போலவோதான், ஆத்மாவின் உடற்பொருள் பாதிக்கப்படுகின்றது உடலில், தலை, மார்பு, வயிறு என்ற எந்த இடத்தில் வலி தோன்றுகிறதோ, அந்த உறுப்பில்தான் வலியெடுப்ப தாகக் குறிப்பிடுகிறோம். ஆத்மாவில் வலி யெடுப்ப தாகக் கூறுவதில்லை. ஆத்மாவானது, அடிபட்ட உடற்பகுதியைப் போல, நோயையும், வலியையும் அதன் அவதியையும் அடைவதில்லை. வலியானது உடலின் பாதிக்கப்பட்ட ஒரு பகுதியில் ஏற்பட்டிருப்ப தையும் மனந்தான் அறிகிறது. கண்ணானது எப்படித் தனது சொந்த நிறத்தைக் காண்பதில்லையோ அது போலவே ஆத்மாவானது, வலியையும் நோயையும் உணர்வதில்லை. எனவே, வலியும் அதைப் பற்றிய உணர்வும் ஆத்மாவுக்கு இருப்பதில்லை. ஆத்மா சைதன்யமானது ; உணர்வு நிரம்பியது. உடலோ ஜடப்பொருள். இதை எப்படி அறியலாம் என்றால், நித்திரையிலிருந்து விழித்தவுடன் ஞாபகம் இருக்கு மானால் நித்திரையில் கண்ட கனவை நினைவுபடுத்திக் கூறுகிறோம். ஆழ்ந்த நித்திரையிலிருந்தாலோ கனவே இருப்பதில்லை. கனவைப் பற்றிய நினைவும் அவசிய மற்றுவிடுகிறது. அது போலவே, காமம், இச்சை, வெறுப்பு அசுத்தங்கள் நிறங்களைப் பற்றிய அபிப் பிராயங்கள். இவையெல்லாம் அறிவுணர்வு பூர்வமா னவை. அந்த அறிவும் ஜடமே. தன் உணர்வற்ற உடலில் ஏற்படும் காமம், வெறுப்பு முதலிய யாவுமே ஆத்மாவுக்கு இருப்பதில்லை. ஆத்மாவுக்கு இந்த இடத் தில்தான் வலி நோய் என்று குறிப்பிட முடியாது என் பதும் உண்மைதான். எனவே ஆத்மாவானது ஸ்பரி சிக்கப்படாதது; துவக்கமற்றது; விளைவற்றது. அதுவே உண்மை. அதுதான் ஆத்ம தத்துவம். அந் தத் தத்துவமே நீயாக இருக்கின்றாய்!'' என்று குரு நாதர் கூறினார்.

* * *

அகம்பாவத்துடன் கூடிய செயலானது பிறவிக் குக் காரணமாகிய, இன்ப துன்பங்களுக்கும் விருப்பு வெறுப்புகளுக்கும், மதிப்பு அவமதிப்புக்கும் இரட்

டைப் பிடிப்புடைய வாழ்வுக்கும் காரணமாகிறது. இவ்விதமாகத்தான் உலகச் சுழற்சி சுழல்கின்றது. இவையெல்லாம் அறியாமையின் விளைவேயாகும். இதற்குரிய ஒரு சிறந்த மார்க்கமாவது, தன்னைப் பற்றிச் சிந்தித்து, தனது அறியாமையை அகற்றுவதேயாகும். ஞானத்தின் ஜோதியினால்தான் அறியாமையின் இருளைப் போக்க முடியும்.

*　　　*　　　*

அறிவின் எல்லைக்கும் சிந்தனையின் எல்லைக்கும் மனத்திற்கும் புலன்களுக்கும் அப்பாற்பட்ட பிரம்மம், சப்தம் என்று வழங்கப்படும். அதாவது வேதாந்த மகாவாக்கியங்கள் என்ற ஞானக் கருவியின் மூலம் அடையும் ஞானுர்வத்தால் மட்டுமே அதை அறியமுடியும். புனித நூல்கள் தான் முடிவான ஆதாரமானவை. அவற்றின் ஆதார முடிவானது தன்னைப் பற்றிய பிடிப்புகளையும் போலிகளையும் அகற்றுவதில் தான் உள்ளது. இதுவரை அறியப்படாததை அறிவிப்பதனால் அடையப்படுவதில்லை.

*　　　*　　　*

பிரத்யக்ஷ உண்மையை விட, அனுமான உண்மை ஆதாரமானதல்ல. அனுமானத்தால் பிரத்தியக்ஷமான உண்மை மதிப்பிழந்து விடாது. ஒருவகையான ஞானம், மற்றொரு வகையான ஞானத்தை மறுக்க முடியாது. சிந்தனைக் காரணங்கள் சுருதியை மறுக்க இயலாது. முடிவுக்கும் அதையறியும் சாதனங்களுக்கும் இடைப்பட்ட உறவு முறையை, தானாகவும் இயல்பாகவும் அறிந்து கொள்ள முடியாதவற்றைச் சுருதியானது அறிவிக்கின்றது. சுருதி, அதன் அமைப்பில் சுயேச்சையானது. சூரியன் பிறவற்றின் துணையின்றிப் பல உருவங்களைக் காட்டுவது போல, சுருதிக்கும் துணைச் சாபு தேவையில்லை.

*　　　*　　　*

அனுபவத்தால கண்டறியப்பட்ட உண்மை களுக்கு எதிராகக் குறிப்பிடும் அளவுக்குச் சுருதியானது ஆதாரமானதல்ல. அந்த அனுபவ உண்மையானது நெருப்பானது குளிர்ந்தும் ஒளியற்றும் இருக்கும் என்று கூறுமானல் அதுவே ஆதார மற்றதாகையால், அது ஆதாரமாகக் கூடியதல்ல. சுருதியானது அறிவிப்புத் தகவலேயாகும்; அது நிலையானதுமல்ல படைக்கக் கூடியது மல்ல. வழி காட்டக் கூடியது மல்ல. சூரிய ஒளியைப் போன்று நடு நிலையில் உள் ளது. இருப்பினும் மக்கள், தமது சொந்த இச்சைக்கும் சுவைக்கும் ஏற்ற குறிப்பிட்ட வழிகளையும், சாதனை களையும் அமைத்துக் கொண்டு விடுகின்றனர்.

* * *

காமாலைக் கண்ணனுக்கு அவனது பார்வையில் ஒரேசந்திரன் பல சந்திரன்களாகத் தோன்றும். குறை யுடைய சிந்தனையில் ஒரே ஆத்மாவே பலவாகத் தோன்றும். இத்தகைய இரட்டிப்புத் தன்மை அறியா மையின் விளைவாகும். ஒன்றிருக்க வேருென்றைக் காண்பதுவும், ஒன்றிருக்க வேருென்றைக் கேட் பதுவும், ஒன்று மற்ருென்றை விலக்குவதும் அத னதன் நிலையில் முடிவாக இருப்பதால், அதுவே நிலை யற்ற மனமாகிறது.

* * *

நன்மையும் தீமையும் ஒன்றுக் கொன்று தொடர் புடையதே தவிர, நிலையானதல்ல. அவை, ஒருவரது பகுத்தறிவின் மதிப்பையும் அபிப்பிராயத்தையும் பொறுத்தவை. நரகத்தின் ஆழமானது, சுவர்க்கத்தின் உயரமாகும். ஒருவரது விமரிசனம் மற்ருெருவருக்குப் பாராட்டாகி விடுகிறது. ஆயினும் அவையும் அவர் களும் ஒன்ருகச் சேர்ந்து மடிவதுமில்லை.

* * *

கர்மாக்கள் (செயல்கள்) அறியாமையிலுழல்பவ ருக்குத்தான். சுருதி,செயல்களுக்குஊக்கமளிப்பதில்லை.

படைப்பிலுள்ள எல்லாச் சிருஷ்டிகளிடத்திலும் செயலானது காணப்படுகிறது. அது இயல்பு; இயற்கை. கர்மா என்பது ஒன்றை வெறுக்கவும் ஒன்றை விரும்பவும் செய்வதால் அது இயல்பான அறியாமையைத்தான் அறிவிக்கிறது. அறிவிலியாக இருப்பவன் ஒரு கர்மாவை அதன் பலனைக்கருதிப் பெரும்ஆர்வத்துடன் செய்கிறான். அது போலச் செயலாற்றுவதே அகம்பாவமாகும். ஆத்மா அது போலச் செயலாற்றுவதில்லை. அவித்தையும் கர்மமும் செயலின் விதைகள். கர்மாவானது விடுதலையைத் தராது. பந்தத்திலேயே சேர்ப்பிக்கும். தெய்வ ஞானம் கர்மாவிற்கு மாறுபட்டது. எனவே அது அகம்பாவச் செயலை அழிக்கிறது.

* * *

உபாசனை (தியானம்) ஒரே ரீதியான எண்ணங்களைத் தொடர்பாக்கி விடுகிறது. அது ஒரு பானையிலிருந்து மற்றொரு பானைக்கு ஊற்றும் எண்ணெயைப் போலத் தொடர்பு விலகாமல், தொடர்ந்து பாய்வதாகும். உபாசனையானது வழிபாட்டுக்குரிய பொருளை உருவகப்படுத்தி அதிலேயே நெடுங்காலம் நிலைத்திருக்கச் செய்கிறது. சுற்றுப்புறத் தொடர்புடைய உலகத்தையும் எண்ணத்தையும் சார்ந்ததுதான்—உபாசனை.

* * *

# சங்கரர் பொன் மொழிகள்

## (துதிப்பாடல் கருத்துத் தொகுப்பு)

### ஆன்ம நாட்டம்

ஒருவனை அவன் கற்ற கலைகளும் ஆய்ந்த சாத்திரங்களும் காப்பாற்ருது. அவை காக்குமென நினைப்பின் அது அஞ்ஞானமேயாம்; ஏமாற்றமடைவான். அவனைக் காக்கவல்லது தெய்வத்தின் மீது செலுத்தும் அன்பு ஒன்றேயாகும்.

*　　*　　*

பொருளாசையையும் பெண்ணின் அழகாசையையும் விட்டொழித்தல் வேண்டும். அழகிய உடலானது இறுதியில் அழியும் சதையல்லவா என்று அடிக்கடி யோசித்துப் பார். அவை யாவும் அழிவனவேயன்ருே! ஆகவே, புலனை அடக்கிப் பற்றைவிடு.

*　　*　　*

உலகம் சோக மயமானது; நிலையற்றது. இதனை உணர்தல் வேண்டும். உறவினர் சதமில்லை என்பது கண்கூடாகக் காண்பது. எனினும் இதை அறிவதில்லை. இது மடமையல்லவா?

*　　*　　*

ஒருவன் இறந்தவுடன் அவனது சடலத்தைக் கண்டு அவனது மனைவிகூட அஞ்சுவாளன்ருே? இத்தகைய உடம்பின் தரத்தை உணராதிருத்தல் எவ்வளவு மதியீனம்!

*　　*　　*

பொய்யான உலக வாழ்க்கையைத் துறந்து ஞான வாழ்க்கையை மேற்கொள்வதே உய்யும் வழியாகும்.

* * *

ஆயுள் ஒவ்வொரு நாளும் தேய்ந்து கொண்டே வருகிறது. இதனை உணர்ந்தும் உய்யும் வழி தேடாது, ஆசைகளை அடக்காதது மடமையன்றோ ?

* * *

ஜடை தரித்தல், மொட்டையடித்துக் கொள்ளுதல் காஷாயமணிதல்—இதுபோன்ற வேடங்களை மட்டும் நம்பி வீணுகாமல் பரமாத்ம தத்துவத்தை அனுபவத்திற்குக் கொண்டு வருவதே பலன் தருவதாகும். வெறும் வேடம் மட்டும் பூண்பவன் மூடனுவான்.

* * *

ஆத்ம ஞானமில்லாத ஒருவன் தலயாத்திரை செய்தும், விரதங்கள் பல மேற்கொண்டும், தானம் செய்தும் பயனில்லை. அவன் எத்தனை பிறவிகள் எடுப்பினும் விமோசனமடையான்.

* * *

உலக இன்பங்கள், பல உள. அவையெல்லாம் அழிவனவே. நம் உள்ளம் ஆண்டவனிடம் ஒன்றி இன்பமடையும் போதுதான் உண்மையான இன்பம் உண்டாகிறது; அதாவது பூரணமும் அழிவில்லாததுமான இன்பம் ஏற்படுகின்றது.

* * *

ஒருவன் பொறுமையிழந்து கோபமடைவது எவ்வளவு கேவலம்! ஒரே ஆண்டவனன்றோ சர்வ வியாபியாக இருக்கின்றுன். ஆகவே எவர் மாட்டும் ஏக சொரூபத்தையன்றோ காண்டல் வேண்டும். எப்பொருளிலும் உனது சொரூபத்தைக் காண். முடிவில் "நீ" என்ற யாவும் கரைந்து எஞ்சி நிற்பது பிரம்மம் என்ற ஒன்றேயாகும்.

பகைவனிடம் பகைமையும், நண்பனிடம் நட்பும், உறவினனிடம் உறவின் முறைமையையும் கைக்

கொள்வது எத்துணைச் சாமான்யம்! இலகுவான இதைக் கடைப்பிடிக்க முயலாதே. எல்லோரையும் சம நோக்குடன் பார். அப்பொழுது எல்லாம் தெரிந்தவனின், சர்வ வியாபியின் தன்மையை அடைவாய். ஆத்ம விசாரணை செய்து ஆத்மஞானம் வரப் பெறுதவர்கள் சம்சார சாகரத்தைக் கடக்க விரும்புவது வீண்.

* * *

தன் பொருளை யெல்லாம் ஏழைகளுக்கு வழங்கும் அளவிற்குத் தன்னலத்தை ஒழித்தாலன்றி உய்யும் வழி காண்பதரிது.

* * *

சாவு உறுதி என்பது தெரிந்த பின்னரும் பாவம் செய்வது நிற்கவில்லையே! இஃதென்ன மடமை!

* * *

பணத்தைத் தேடி அலைவதில் துன்பமே விளைகிறது. பணம் உடையவன் கள்வனுக்குப் பயப்படுவதைத் தவிர, தான் பெற்ற மகனுக்கும் அஞ்சுகிறான்.

* * *

மெய்ப் பொருள்மீது மனம் நிலைத்து நிற்பதற்கு ஒருவன் கைக்கொள்ள வேண்டிய வழி அவாவறுத்து, புலன் காத்துச் செபஞ் செய்தலேயாகும்.

* * *

எதன் பொருட்டும் பெருமைப்படாதே. எல்லாம் ஒரு கணத்தில் அழிவனவே. யாவற்றையும் துறந்து பரமனிடம் அமிழ்ந்து விடு. எல்லா வுணர்ச்சிகளையும் வென்று ஆத்மனைப் பற்றிச் சிந்தித்து உனது உண்மையான தன்மையைக் கண்டுபிடி. ஆத்ம ஞானமில்லாத மூடர் பயங்கர நரகங்களையே யடைவர்.

* * *

தீமைக்கெல்லாம் வேராகிய செல்வத்தின் மேலுள்ள விருப்பை விட்டுவிடு. உண்மையில் இன்பத்தின் அடிச் சுவட்டில் சிறிதளவும் அதில் காண முடியாது.

* * *

மன அடக்கத்தை மேற்கொள்ளப் பழகிக் கொள். செபஞ் செய்வதில் கவனம் செலுத்துவாயாக.

* * *

புவி வாழ்வு நிலையற்றது. நிலையான ஆன்ம வாழ்வை நாடு.

* * *

அமைதியில்லாது திரிகின்றவனே! நீ உண்மையான ஞானத்தை உன்னிடமே உதிக்கச் செய்து கொள்.

* * *

ஏகநாதன், ஏகப் பிரம்மம், உன் இதயத்திலேயே உறைகின்ருன். மனத்தையும் புலன்களையும் அடக்குவதன் மூலம் அவனைக் காண்பாய்.

* * *

## தேவி புகழ்

அச்சமென்னும் பஞ்சுப் பொதியைப் பொசுக்கும் அக்கினிச் சுவாலை—அவள் என்பதறிந்து அவளைப் புகழ்தல் வேண்டும். கழுகுக்கு உணவாகப் போகும் இந்த உடலை, புழுக்கள் வாழும் கூடான இந்த உடலை, போஷிக்க விரும்பாதே, மனமே! என்று சொல்லி மனத்தை அவள்பால் செலுத்திப் புகழ்தல் வேண்டும். அழகு, ஆனந்தம், இளமை, கருணை இவை உன்பால் பெருக்கெடுத்துக் கொண்டே உள்ளன என்று நினைந்து புகழ்தல் வேண்டும். தீமையை அழிப்பவள் நீ என்று உணர்ந்து புகழ்தல் வேண்டும். தருமத்தின்பால் பக்தி ஏற்படச் செய்பவள் நீ என்று உணர்ந்து புகழ்தல் வேண்டும். “யான் எது மொழிந்தாலும் அது

உன் பிரார்த்தனையாக இருக்கட்டும்; "எனது தொழில்கள் யாவும் உனது வழிபாட்டின் அபிநயமாக இருக்கட்டும் ; எனது நடையெல்லாம் உன்னைச் சுற்றிவரும் பிரதக்ஷணமாகட்டும்; நான் உண்பதும் அருந்துவதும் உனக்குச் செய்யப்படும் நிவேதனமாக இருக்கட்டும்; நான் படுத்துக் கொள்வது உன்பால் செய்யப்படும் நமஸ்காரமாகட்டும் ; என் சுகானுபவங்கள் யாவும் உனக்கு என்னையே சமர்ப்பணம் செய்யும் தோரணையில் அமையட்டும்—நான் செய்வன எல்லாம் உன் வழிபாடாகவே இருக்கட்டும்" என்று வேண்டி அவனைப் புகழ்தல் வேண்டும். என் குற்றத்தையெல்லாம் மன்னித்தருள்வாயாக என்று வேண்டுதல் செய்து புகழ்தல் வேண்டும். யாதும் வேண்டேன், உன்னை ஓதுவதிலேயே என் வாழ்நாளெல்லாம் கழியட்டும் என்று சொல்லிப் புகழ்தல் வேண்டும்.

* * *

## பரமன் புகழ்

நீ என் ஆத்மா. இவ்வுடல் உன் திருக்கோயில். என் இந்திரியங்கள் உன் சேவகர்கள். உன் பாரியை என் புத்தி. என் உறக்கம் சமாதி. நான் நடப்பது உன் பிரதக்ஷணம். என் பேச்செல்லாம் உன் புகழ். என் கருமங்கள் யாவும் உன் வழிபாடே. தகாதவை செய்ததாலோ, தக்கவைகளைச் செய்யாததாலோ ஏற்பட்ட பாவங்களை மன்னித்து விடுவாயாக! "ஓ மகாதேவா, கருணைக் கடலே என்று வேண்டி, நீ வெல்வாயாக, நீ புகழடைவாயாக என்று தோத்தரிக்க வேண்டும். நீ மகா பரிசுத்தமானவன் என்று நெஞ்சார நினைந்துருகித் துதித்தல் வேண்டும். ஆசைகள் யாவற்றையும் துறந்தும், பிறரை நிந்திக்கும் இயல்பு ஒழித்தும், பாவ வினைகளின்பால் பற்று விடுத்தும், மனத்தைச் சமாதி நிலையில் திருப்பியும் இதயத் தாமரையில் அமர்ந்துள்ள அவனைத் தியானம் செய்தல் வேண்டும். அவன் இரண்டற்ற ஏகன் என அறிந்து தோத்திரம் செய்தல் வேண்டும். விருப்பு வெறுப்பு அற்றவன் என உணர்ந்து

புகழ்தல் வேண்டும். ஆசைகள் யாவற்றையும் துறந்து அவனை வழிபடுவாயாக. அவன் உருவற்றவன், செயலற்றவன், சாந்தன், மூலகாரணன் என்று அறிந்து நமஸ்கரித்தல் வேண்டும். பிரபஞ்சத்தை உண்டாக்கியவனே, அவற்றில் எதுவாகவும் இராதவனே, உறைவிடமில்லாதவனே, ஆதியுமந்தமுமில்லோனே, தொந்தமற்றவனே, எல்லாமுமாக உள்ளவனே, உன்னிடம் அடைக்கலம் புகுகின்றேன்—என்று சொல்லித் தோத்திரம் செய்வாயாக. சம்சார துக்கத்திலிருந்து என்னைக் காப்பாயாக" என்று வேண்டித் துதிப்பாயாக. எங்கும் உறைபவனே என்று போற்றிப் புகழ்வாயாக.

* * *

## அருள் வாக்கு

மதுவைப்போல் மதியை மயக்குவது பற்று. பற்று உடையவன் குருடனிலும் குருடன்.

* * *

மயக்கம் தெளிந்தால் மட்டுமே அலைமோதும் மனம் அமைதியுறும். பொருட் பற்று நீங்க வேண்டுமாயின் நல்லோர் உறவு வேண்டும்.

* * *

கற்றும் கெட்டதைச் செய்பவன் குருடன். அகம் பாவம் அனர்த்தம் விளைவிக்கும்.

* * *

நல்லது கேட்காதவன் செவிடன். அழகென்பது உடலழகல்ல; சீலமே அழகு.

* * *

அன்பாய்ப் பேசித் தருமத்தைக் கடைப்பிடிப்பவர்க்கே பிரபஞ்சம் வசமாகும்.

* * *

உலோபமும் கருமித்தனமும் எல்லா நற்குணங் களையும் அழித்துவிடும்.

* * *

செல்வம் என்பது பணம் என்பதில்லை. எதனால் மனம் நிறைவுறுகிறதோ அதுவே செல்வம் எனப் படும்.

* * *

எப்பொழுதும் சந்தோஷமாக இருப்பவனே சாது எனப்படுவான்.

* * *

கோபமில்லாதவனே துக்கமில்லாதவன்; உள்ளத் தின் சிரிப்பே சிரிப்பாகும்; அதுவே சுகம். உதட்டின் சிரிப்பு, சிரிப்பல்ல.

* * *

ஒளியில்லாது எப்பொருளையும் காணவியலாது. அதுபோலவே ஆராய்ச்சி இன்றி ஞானம் தோன் றுது.

* * *

இப் பிரபஞ்சம் யாதும் அஞ்ஞானத்தையேதான் ஆதியாகக் கொண்டது. இது ஞானத்தில் கரைந்து விடும்.

* * *

ஆத்மா ஆட்சி புரியவல்லது; உள்ளத்தின் பாற் பட்டது. உடலோ ஆளப்படுவது; புறத்தின் பாற் பட்டது. ஆக, இவ்விரண்டும் ஒன்று என்பது அஞ் ஞானமே யன்றி வேறில்லை.

* * *

பிரபஞ்சத்தின் முதற்காரணம் பிரம்மத்தைத் தவிர வேறெதுவுமில்லை. ஆகவே, பிரபஞ்சம் பிரம்மமே யாம்.

* * *

நெருப்பின்றிச் சமையல் இல்லை. அஃதேபோன்று, ஞானமின்றி வீடு கிடையாது.

* * *

கர்மமும் சடங்குகளும் அஞ்ஞானத்தைப் போக்கா. இருளைப் போக்கும் ஒளிபோன்று அஞ்ஞானத்தைப் போக்குவது ஞானமேதான்.

* * *

ஞானமே உருவாக, ஒளியைப் போல எங்கும் நிறைந்து, இயல்பாக ஒளிரும் பரம்பொருள் எதுவோ, பிறப்பும் இறப்பும் அற்ற மாசற்ற பொருள் எதுவோ, தன்னையன்றி இரண்டாவது வஸ்து இன்றி எங்கும் வியாபித்துள்ள அந்தப் பொருளான பிரணவமே நான்—எப்பொழுதும் முக்தி நிலையில் உள்ளவனே—நான்.

* * *

ஆகாயத்துக்கும் மேகத்துக்கும் எவ்வாறு தொடர்பு கிடையாதோ, அது போலவே எனக்கும்—அதாவது ஆத்மாவுக்கும்—உடலுக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. எனவே உடலுக்குரிய விழிப்பு, கனவு, உறக்கம் முதலிய நிலைகள் என்னை எவ்விதம் தீண்டும்?

* * *

உண்மையை அறிந்தவரே குருவாவார். அவர் தம்மை அண்டிய சீடர்களின் நலனுக்காக இடைவிடாமல் பாடுபடுவார்.

* * *

நாஸ்திகர்கள், கண்கள் இருந்தும் குருடர்கள். இரவும் பகலும் சிந்தனை செய்யத்தக்கது இறைவனின் திருவடிகளேயாகும்.

* * *

நோயும் 'நான்' எனும் அகந்தையும் ஆட்சி செலுத்தும் இந்த உலகம் சோகமயமானது. இதனை நீ உணர்ந்து நடப்பாயாக.

* * *

புலன்கள் உனக்குக் கட்டுப்பட்டு அடங்குமானால் உள்ளத்தின் ஆழத்தில் உறையும் ஈசனைக் காண்பது உறுதி.

* * *

மனம் உணர்ச்சிவயப்படாமல் கவனித்துக்கொள். சொந்த முயற்சியால் ஈட்டுகின்ற பொருளைக்கொண்டு திருப்தியடைவாயாக. செல்வத்தில் இன்பத்தின் அடிச் சுவடு சிறிதும் இல்லை.

* * *

இயற்கையில் நீரானது தூய்மையானதாகவே இருக்கும். வேறு பொருள்கள் அத்துடன் கலப்பதாலேயே அது தூய்மை கெட்டுக் கலங்கி விடுகிறது. அந்த அசுத்தங்களை விலக்கி விட்டால், அது மீண்டும் தெளிவடைந்து சுத்தமாகி விடும். ஆன்மாவின் களங்கத்தை, ஞான விசாரணை மூலம் நீக்கி விட்டால், ஆன்மா மீண்டும் பிரகாசத்துடன் வெளிப்படும்.

* * *

பரமனின் சொரூப ஒளி ஒன்றே உண்மை. அது உண்மையற்ற பொருள்களிலும் ஒளிர்கின்றது.

* * *

உறுதியான குறைவற்ற இன்பம் அடைவது என்பது, நமது உள்ளம் ஆண்டவனிடம் லயித்து இன்புறும்போதுதான்.

* * *

பரங்கள்

| திசை | ரம்மச்சாரி | வேதம் | மஹா வாக்கியம் | தீர்த்தம் |
|---|---|---|---|---|
| கிழக் | பிரகாச ம்மச்சாரி | ரிக் சுக்லயஜுஸ் | "பிரக் யாணம் பிரம்ம" | மஹோததி |
| தெற் | சைதன்ய ம்மச்சாரி | கிருஷ்ண யஜுஸ் | அகம் பிரம்மாஸ்மி | துங்க பத்ரை |
| மேற் | ஸ்வரூப ம்மச்சாரி | சாம | தத்வமஸி | கோமதி |
| வடக் | ஆனந்த ம்மச்சாரி | அதர்வ | "அயம் ஆத்மா பிரம்ம" | அலகானந்தா |
| காமகோ பீட மத்யப் | சத்ய ம்மச்சாரி | ரிக்வேதம் | ஓம் தத் ஸத் | கம்பாசரஸ் |
| ஊர்த் | த்த மச்சாரி | உபநிஷதம் | சோஹம் | மாசை தீர்த்தம் |
| பிரத்ய நயப் | சித்த மச்சாரி | அஜப | மாத்ரகை | திரிபுதி தீர்த்தம் |
| நிஷ்க | ஆனந்த மச்சாரி | பிரணவம | தாரகம் | நபாஸ். |

புலன்கள் உனக்குக் கட்டுப்பட்டு அடங்குமானால் உள்ளத்தின் ஆழத்தில் உறையும் ஈசனைக் காண்பது உறுதி.

* * *

மனம் உணர்ச்சிவயப்படாமல் கவனித்துக்கொள். சொந்த முயற்சியால் ஈட்டுகின்ற பொருளைக்கொண்டு திருப்தியடைவாயாக. செல்வத்தில் இன்பத்தின் அடிச்சுவடு சிறிதும் இல்லை.

* * *

இயற்கையில் நீரானது தூய்மையானதாகவே இருக்கும். வேறு பொருள்கள் அத்துடன் கலப்பதாலேயே அது தூய்மை கெட்டுக் கலங்கி விடுகிறது. அந்த அசுத்தங்களை விலக்கி விட்டால், அது மீண்டும் தெளிவடைந்து சுத்தமாகி விடும். ஆன்மாவின் களங்கத்தை, ஞான விசாரணை மூலம் நீக்கி விட்டால், ஆன்மா மீண்டும் பிரகாசத்துடன் வெளிப்படும்.

* * *

பரமனின் சொரூப ஒளி ஒன்றே உண்மை. அது உண்மையற்ற பொருள்களிலும் ஒளிர்கின்றது.

* * *

உறுதியான குறைவற்ற இன்பம் அடைவது என்பது, நமது உள்ளம் ஆண்டவனிடம் லயித்து இன்புறும்போதுதான்.

* * *

## ஆதிசங்கரர் அமைத்த அத்வைத மடங்களின் அமைப்பு விவரங்கள்

### கீழ்

| திசை | ஸ்தலம் | மடத்தின் பெயர் | பட்டம் | சம்பிரதாயம் | க்ஷேத்திரம் | தேவதை | சக்தி | ஆதிகுரு | பிரம்மச்சாரி | வேதம் | மஹா வாக்கியம் | தீர்த்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கிழக்கு | ஜகந்நாதம் | கோவர்த்தன மடம் | வன ஆரண்யம் | போக வர | புருஷோத்தம | ஜகந்நாதர் | விமலை | பத்மபாதர் | பிரகாச பிரம்மச்சாரி | ரிக் சுக்லயஜுஸ் | "பிரக்யாணம் பிரம்ம" | மஹோததி |
| தெற்கு | சிருங்ககிரி | சிருங்ககிரி மடம் | பாரதி சரஸ்வதி புரி | புரிவர | ராமேஸ்வரம் | ஆதி வராஹர் | காமகோடி சாரதை | பிரித்விதானர் | சைதன்ய பிரம்மச்சாரி | கிருஷ்ண யஜுஸ் | அகம் பிரம்மாஸ்மி | துங்க பத்ரை |
| மேற்கு | துவாரகை | சாரதா மடம் | தீர்த்த ஆஸ்ரம | கிதவார | துவாரபதி | சித்தேஸ்வரர் | பத்ரகாளி | விஸ்வரூபர் | ஸ்வரூப பிரம்மச்சாரி | சாம | தத்வமஸி | கோமதி |
| வடக்கு | பதரிகாசிரமம் | ஜோதிர் மடம் | கிரி பர்வத சாகர | ஆனந்த வர | பதரி நாராயண | பதரி நாராயணர் | புன்னகிரி | தோடகர் | ஆனந்த பிரம்மச்சாரி | அதர்வ | "அயம் ஆத்மா பிரம்ம" | அலகானந்தா |
| **நடு** | | | | | | | | | | | | |
| காமகோடி பீடம் மத்யப்பகுதி | காஞ்சி | ஸ்ரீ சாரதா மடம் | இந்திர சரஸ்வதி | மித்ய வர | சத்ய விரத காஞ்சி | ஏகாம்பர நாதர் | காமகோடி அல்லது காமாக்ஷி | ஆதிசங்கர பகவத் பாதாள் | சத்ய பிரம்மச்சாரி | ரிக்வேதம் | ஓம் தத் ஸத் | கம்பாசரஸ் |
| **மேல்** | | | | | | | | | | | | |
| ஊர்த்வம் | — | சுமேரு மடம் மாயாபீடம் | சத்ய ஞான | கைவல்ய க்ஷேத்ரம் | காசி சம்பிரதாயம் | நிரஞ்சன தேவர் | மாயாசக்தி | மஹேஸ்வர | சுத்த பிரம்மச்சாரி | உபநிஷதம் | சோஹம் | மானச தீர்த்தம் |
| பிரத்யகம் நயம் | — | பரமாத்ம மடம் வித்யாபீடம் | அகண்ட | யோக க்ஷேத்ரம் | சத்சந்தோஷ | பரமஹம்சர் | வித்யாசக்தி | சேதனர் | சித்த பிரம்மச்சாரி | அஜப | மாத்ரகை | திரிபூதி தீர்த்தம் |
| நிஷ்கலம் | — | சத்சின் மடம ஆனந்த பீடம் | புருஷ | சிவானுபூதி | சிவப் பிரகாச | பரம ஹம்சர் | சித்சக்தி | பூமா | பூர்ணானந்த பிரம்மச்சாரி | பிரணவம | தாரகம் | நபாஸ். |

புலன்கள் உனக்குக் கட்டுப்பட்டு அடங்குமானால் உள்ளத்தின் ஆழத்தில் உறையும் ஈசனைக் காண்பது உறுதி.

* * *

மனம் உணர்ச்சிவயப்படாமல் கவனித்துக்கொள். சொந்த முயற்சியால் ஈட்டுகின்ற பொருளைக்கொண்டு திருப்தியடைவாயாக. செல்வத்தில் இன்பத்தின் அடிச் சுவடு சிறிதும் இல்லை.

* * *

இயற்கையில் நீரானது தூய்மையானதாகவே இருக்கும். வேறு பொருள்கள் அத்துடன் கலப்பதாலேயே அது தூய்மை கெட்டுக் கலங்கி விடுகிறது. அந்த அசுத்தங்களை விலக்கி விட்டால், அது மீண்டும் தெளிவடைந்து சுத்தமாகி விடும். ஆன்மாவின் களங்கத்தை, ஞான விசாரணை மூலம் நீக்கி விட்டால், ஆன்மா மீண்டும் பிரகாசத்துடன் வெளிப்படும்.

* * *

பரமனின் சொரூப ஒளி ஒன்றே உண்மை. அது உண்மையற்ற பொருள்களிலும் ஒளிர்கின்றது.

* * *

உறுதியான குறைவற்ற இன்பம் அடைவது என்பது, நமது உள்ளம் ஆண்டவனிடம் லயித்து இன்புறும்போதுதான்.

* * *

# ஆதிசங்கரர் அமைத்த அத்வைத மடங்களின் அமைப்பு விவரங்கள்

## கீழ்

| திசை | ஸ்தலம் | மடத்தின் பெயர் | பட்டம் | சம்பிரதாயம் | க்ஷேத்திரம் | தேவதை | சக்தி | ஆதிகுரு | பிரம்மச்சாரி | வேதம் | மஹா வாக்கியம் | தீர்த்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கிழக்கு | ஜகந்நாதம் | கோவர்த்தன மடம் | வன ஆரண்யம் | போக வர | புருஷோத்தம | ஜகந்நாதர் | விமலை | பத்மபாதர் | பிரகாச பிரம்மச்சாரி | ரிக் சுக்லயஜுஸ் | "பிரக்யாணம் பிரம்ம" | மஹோததி |
| தெற்கு | சிருங்ககிரி | சிருங்ககிரி மடம் | பாரதி சரஸ்வதி புரி | புரிவர | ராமேஸ்வரம் | ஆதி வராஹர் | காமகோடி சாரதை | பிரித் விதானர் | சைதன்ய பிரம்மச்சாரி | கிருஷ்ண யஜுஸ் | அகம் பிரம்மாஸ்மி | துங்க பத்ரை |
| மேற்கு | துவாரகை | சாரதா மடம் | தீர்த்த ஆஸ்ரம | கிதவார | துவாரபதி | சித்தேஸ்வரர் | பத்ரகாளி | விஸ்வரூபர் | ஸ்வரூப பிரம்மச்சாரி | சாம | தத்வமஸி | கோமதி |
| வடக்கு | பதரிகாசிரமம் | ஜோதிர் மடம் | கிரி பர்வத சாகர | ஆனந்த வர | பதரி நாராயண | பதரி நாராயணர் | புன்னகிரி | தோடகர் | ஆனந்த பிரம்மச்சாரி | அதர்வ | "அயம் ஆத்மா பிரம்ம" | அலகானந்தா |

## நடு

| திசை | ஸ்தலம் | மடத்தின் பெயர் | பட்டம் | சம்பிரதாயம் | க்ஷேத்திரம் | தேவதை | சக்தி | ஆதிகுரு | பிரம்மச்சாரி | வேதம் | மஹா வாக்கியம் | தீர்த்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| காமகோடி பீடம் மத்யப்பகுதி | காஞ்சி | ஸ்ரீ சாரதா மடம் | இந்திர சரஸ்வதி | மித்ய வர | சத்ய விரத காஞ்சி | ஏகாம்பர நாதர் | காமகோடி அல்லது காமாக்ஷி | ஆதி சங்கர பகவத் பாதாள் | சத்ய பிரம்மச்சாரி | ரிக்வேதம் | ஓம் தத் ஸத் | கம்பாசரஸ் |

## மேல்

| திசை | ஸ்தலம் | மடத்தின் பெயர் | பட்டம் | சம்பிரதாயம் | க்ஷேத்திரம் | தேவதை | சக்தி | ஆதிகுரு | பிரம்மச்சாரி | வேதம் | மஹா வாக்கியம் | தீர்த்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஊர்த்வம் | — | சுமேரு மடம் மாயாபீடம் | சத்ய ஞான | கைவல்ய க்ஷேத்ரம் | காசி சம்பிரதாயம் | நிரஞ்சன தேவர் | மாயாசக்தி | மஹேஸ்வர | சுத்த பிரம்மச்சாரி | உபநிஷதம் | சோஹம் | மாசை தீர்த்தம் |
| பிரத்யகம் நயம் | — | பரமாத்ம மடம் வித்யாபீடம் | அகண்ட | யோக க்ஷேத்ரம் | சத்சந்தோஷ | பரமஹம்சர் | வித்யாசக்தி | சேதனர் | சித்த பிரம்மச்சாரி | அஜப | மாத்ரகை | திரிபூதி தீர்த்தம் |
| நிஷ்கலம் | — | சத்சின் மடம் ஆனந்த பீடம் | புருஷ | சிவா னுபூதி | சிவப் பிரகாச | பரம ஹம்சர் | சித்சக்தி | பூமா | பூர்ணனந்த பிரம்மச்சாரி | பிரணவம | தாரகம் | நபாஸ். |

